# கீதா யோகம்

## இரண்டாம் பாகம்

(பக்தி, ஞான யோக விளக்கம்)



யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்

விளக்கவுரை.




பாரத சக்தி நிலயம்

புதுச்சேரி.

# பொருளடக்கம்.

# பதிப்புரை.

---

கீதாயோகம் இரண்டாம் பாகத்தை இறைவனுக்கு அர்ப்பணித்துத் தமிழுலகிற்குத் தருகிறோம் முதற்பாகத்தை ஆதரித்து எம்மை ஊக்கிய அன்பருக்கு நன்றி. முதற்பாகம் போலவே இதிலும், தமிழிலேயே சுத்தமாகச் சுலோகங்களை எழுதி சுத்தானந்தர் உரைவகுத்திருக்கிறார். மற்றக் குறிப்புகள் முதற்பாக முன்னுரைகளிற் காண்க.

காகிதப் பஞ்சமும் உலகநிலையும் எம்மைப் பலவாறு கடுமையாகச் சோதித்தன, எப்படியாவது உலகெல்லாம் போற்றும் இப் புண்ணியநூலைத் தமிழருக்கு மூலத்துடன் வழங்க வேண்டுமென்கிற ஆர்வமே எம் முயற்சியை மேன்மேலும் ஊக்கியது.

இப் பாகத்தில், எழாம் அத்தியாயத்திலிருந்து கீதை முழுதும் உள்ளது. இப்பாகத்தின் அச்சுத்தாட்களைத் திருத்த துணைசெய்த இராமச்சந்திரபுரம், உயர்பள்ளி சமுஸ்கிருத ஆசிரியரான வித்வான் ஸ்ரீ சங்கரசாஸ்திரிகளுக்கு எமது நன்றி. கீதையைக் கண்ணன் மலரடியில்வைத்து வணங்குகிறோம்.

இதற்கடுத்த பாரத சக்தி மலர் உபநிஷத் ரகசியமாகும்.

*பாரத சக்தி நிலயத்தார்.*

# உகூ. ஞானி அரிது.

கர்மத்திற்குச் சக்தியளிப்பது பக்தி; நான் எனது என்பதின்றி, எல்லாம் இறைவன் என்னும் பாவனையுடன் அன்பு செய்து வாழ்வதே பக்தி; இனிவரும் ஆறு அத்தியாயத்தில் பகவான் பக்தியோக சாதனத்தைச் சொல்லுகிறார் :-

ஹே பார்த்தா, (மாசற்ற அன்பினல்) என்பால் இசைந்த மனத்தனுகி, என்னை ஆஶ்ரயித்து, யோகத்திற் கூடி, என்னைப் பரிபூரணமாக எப்படி ஐயமின்றி அறிவாய் என்பதைக் கேள்.

இறைவனது பெருமையும் வல்லமையும் அபாரமானவை; அவனைப் பூரணமாக அறியவேண்டுமானல், யோகத்தில் அவனுடன் கூடி, அவனையே பற்றி, மற்றுப் பற்றற்று நிற்கவேண்டும். அப்படி நிற்கும் அன்பனுக்கு அவன் பரம ஞானத்தை விளக்குவான்.

மய்யாஸக்த மன: பார்த
யோகம் யுஞ்ஜன் மதாஶ்ரய: |
அஸம்ஶயம் ஸமக்ரம் மாம்
யதா ஜ்ஞாஸ்யஸி தச் ச்ருணு || (283)

உனக்கு நான் விஞ்ஞானத்துடன் ஞானத்தையும் மிச்சமில்லாமல் சொல்லுகிறேன்; இதை அறிந்த பிறகு, இங்கே அறியத்தக்கது எதுவும் பாக்கியில்லை.

ஜ்ஞானம் தே அஹம் ஸவிஜ்ஞானம்
இதம் வக்ஷ்யாமி அஶேஷத: |
யஜ் ஜ்ஞாத்வா நேஹ பூயோ-ன்யத்
ஜ்ஞாதவ்யம் அவஶிஷ்யதே || (284)

ஆயிரக்கணக்கான மனிதரில், ஏதோ ஒருவன் ஆத்மசித்தி பெற முயலுகிறான்; முயலும் சித்தருள்ளும், ஏதோ ஒருவன் என்னை உண்மையாக அறிகிறான்.

இறைவனைத் தன்னுள் அறிவதே ஞானம்; எல்லாம் எங்கும் அவனே என்றறிவது விஞ்ஞானம். அது மிகவும் அரிது. ஞான—விக்ஞான சித்தன் கோடியில் ஒருவன் இருந்தால் அபூர்வம்.—

மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு
கஶ்சித் யததி ஸித்தயே |
யததாம் அபி ஸித்தானாம்
கஶ்சித் மாம் வேத்தி தத்வத: || (285)

## ௩௰. பிரகிருதி.

இறைவன், உயிர்—உலகம், இயற்கை—ஆன்மா, புருஷன்—பிரகிருதி இரண்டையும் அணைத்துப் புருஷோத்தமனாக விளங்குகிறான். பிரகிருதி அல்லது இயற்கை இரண்டு வகையாகும்: (1) அபரப்பிரகிருதி அல்லது கீழியல்பு அல்லது சடவியல்பு. (2) பரப்ரகிருதி அல்லது உயரியல்பு. முதலில் அபரப்பிரகிருதியைப் பற்றிச் சொல்லுகிறார் பகவான்:

நிலம், நீர், தீ, காற்று, வான், மனம், புத்தி, அகங்காரம் இவை எனது எண்கூறான (அபரப்) பிரகிருதி.

பூமி ராபோ அனலோ வாயு:
கம் மனோ புத்திரேவ ச |
அஹங்கார இதீயம் மே
பின்னா ப்ரக்ருதி ரஷ்டதா || (286)

இது கீழியற்கை, ஜடப்பிரகிருதி; வலிய தோளாய், இதனின் வேறாகி, ஜீவ பூதமாகி இவ்வுலகைத் தாங்கும் எனது பரப்பிரகிருதியை அறி.

அபரேயம் இதஸ்த்வன்யாம்
ப்ரக்ருதிம் வித்தி மே பராம் |
ஜீவபூதம் மஹாபாஹோ
யயேதம் தார்யதே ஜகத் || (287)

கீழியல்பு, அசேதன வியல்பு, மேலியல்பு சேதன வியல்பு. பரப்ரகிருதியான மேலியல்பே ஜீவபூதமாயிருக்கிறது. ஜீவன் பரமாத்மாவின் பங்கு; இறைவன் உயிர் மேனியன்.

இந்த இரண்டு பிரகிருதிகளுமே எல்லா ஜீவர்களுக்கும் பிறப்பிடம்; உலகனைத்திற்கும் ஆக்கமும் அழிவும் (கற்பமும் பிரளயமும்) யானே.

ஏதத் யோனீனி பூதானி
ஸர்வாணீத் யுபதாரய |
அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகத:
ப்ரபவ: ப்ரலயஸ்ததா || (288)

## ௩க. நானே எல்லாம்.

பரமாத்மனின் சேதன சக்தியென்னும் நூலில் ஜீவாத்மாக்களெல்லாம் கோக்கப்பெற்றுள்ளன. உயிர்களனைத்தும் அவனில் இணைந்து அவன் கோவையாயிருக்கின்றன. இந்த ஒற்றுமையிலேயே எல்லாம் தங்கியிருக்கின்றன.

தனஞ்ஜயா, என்னைத்தவிர வேறெதுவும், சிறிதும் இல்லை; நூலில் மணித்திரள்போல, இங்குள்ளன எல்லாம் என்னில் தொடுக்கப்பட்டுள்ளன.

மத்த: பரதரம் நான்யத்
கிஞ்சித் அஸ்தி தனஞ்ஜய |
மயி ஸர்வம் இதம் ப்ரோதம்
ஸூத்ரே மணிகண இவ || (289)

இனி தானே எல்லாம் எனப் பகவான் விளக்குகிறார்.—

கௌந்தேயா, நான் நீரிற் சுவை; ஞாயிறிலும், திங்களிலும் ஒளி; எல்லா வேதங்களிலும் பிரணவம், ஓங்காரம்; ஆகாசத்தில் சத்தம்; ஆடவரில் ஆண்மை நான்.

ரஸோ-ஹம் அப்ஸு கௌந்தேய
ப்ரபாஸ்மி ஸஸி ஸூர்யயோ: |
ப்ரணவ: ஸர்வ வேதேஷு
ஸப்த: கே பௌருஷம்ந்ருஷு || (290)

மண்ணில் தூய மணமும், தீயிற் பொலிவும் நானே; ஜீவர்களிலெல்லாம் ஜீவனம் நானே; தவத்தினர் தவம் நானே.

புண்யோ கந்த: ப்ருதிவ்யாம் ச
தேஜஸ் சாஸ்மி விபாவஸௌ |
ஜீவனம் ஸர்வ பூதேஷு
தபஸ்சாஸ்மி தபஸ்விஷு || (291)

பார்த்தா, உயிர்களுக்கெல்லாம் அழியாக் காரணம் நானே என்றறி. புத்திமான்களின் புத்தி நான்; தேஜஸ்விகளின் தேஜஸ் (பொலிவு) நானே.

பீஜம் மாம் ஸர்வ பூதானும்
வித்தி பார்த ஸநாதனம் |
புத்திர் புத்திமதாம் அஸ்மி
தேஜஸ் தேஜஸ்வினும் அஹம் || (292)

பாரதர் ஏறே, பலவான்களின் ஆசாபாசங்க ளற்ற பலம் நான். உயிர்களிடத்தில் தர்மவிரோத மில்லாத (நியாயமான) விருப்பம் நானே.

பலம் பலவதாம் சாஹம்
காம ராக விவர்ஜிதம் |
தர்மா விருத்தோ பூதேஷு
காமோ-ஸ்மி பரதர்ஷப || (293)

இயற்கையில் ஸாத்வீக ராஜஸ தாமஸ பாவனை கள் எவை உண்டோ, அவை என்னிடத்தே எழுந் தன. என்னுள் அவை; நான் அவற்றுள் அடங்க வில்லை என்றறி.

நீதி, நேர்மை, அறம் முதலிய உணர்வுகள் ஸாத்வீக மாகும்; ஆசை ஆணவங்கள் ராஜஸம்; சோகமோகாதிகள் தாமஸ குணங்களாகும். இவையெல்லாம் மனமயக்கால் மனி தனைப் பிடித்தாட்டுகின்றன. மனிதனுள் மனிதனாக இருப் பவன் இறைவனே; அவனே சுத்தாத்ம வடிவாக, ஜீவாதார மாக அனைவருள்ளும் இருக்கிறான். அவனின்றி உடலில்லை, உயிரில்லை, மனமில்லை, குணமில்லை. அதனாலேதான் முக் குணங்களும் தன்னுள் எழுவதாக இறைவன் உரைக்கிறான். பூமியில் எத்தனையோ நல்ல பயிர்களும் நச்சுப் பயிர்களும் உண்டாகின்றன. அனைத்திற்கும் பூமி ஆதாரமாயிருக்கிறது ஆனால் அப்பயிர்களில் அது கட்டுப்பட்டதன்று. அதுபோலவே எல்லாம் இறைவன்; அவனிடமே எல்லாம் எழுந்து அடங் கும். ஆனால் அவன் எதிலும் கட்டுப்படவில்லை.

யேசைவ ஸாத்விகா பாவா
ராஜஸாஸ் தாமஸாஶ்ச யே |
மத்த ஏவேதி தான் வித்தி
நத்வஹம் தேஷு தே மயி || (294)

குணமயமான இந்த மூன்று பான்மைகளால் (சாத்விக ராஜஸ தாமஸ பாவனைகளால்) இவ்வுலகுயிர்கள் அனைத்தும் மயங்கியுள்ளன. அதனால், இக் குணங்களுக் கப்பால் அழியாதிருக்கும் என்னை அவை அறிவதில்லை.

த்ரிபிர் குண மயைர் பாவை:
ஏபி: ஸர்வம் இதம் ஜகத் |
மோஹிதம் நாபி ஜாநாதி
மாமேப்ய: பரம் அவ்யயம் || (295)

குணமயமான இந்த எனது தேவமாயை தாண்டற்கு அரியது; என்னையே சரண்புகுந்தவர்களே இந்த மாயையைத் தாண்டுவார்கள்.

தைவீ ஹ்யேஷா குணமயீ
மம மாயா துரத்யயா |
மாமேவ யே ப்ரபத்யந்தே
மாயாம் ஏதாம் தரந்தி தே || (296)

சரண்புகுந்து அன்பு செய்தல், அருட்பணி செய்தல் - இதுவே கீதையின் பல்லவி. பல சங்கதிகளுடன் அதுவே திரும்பித் திரும்பி ஒலிக்கிறது. இனி இப்படிச் சரண்புகுவதற்கு வேண்டிய அன்பறிவை உபதேசிக்கிறார் பகவான்.

## ௯௨. ஞானி-பக்தன்.

தீவிரமான அன்பினாலேதான் இறைவனைச் சரண்புக முடியும். கிழிபல்பிற் சிக்கி யழிபவர்க்கு இறைவன் பெருமை விளங்காது; அகங்காரம் தலை தூக்கி நிற்கும். அவர் செயலை யுணரார், செய்பவனை

யுணரார்; அன்பை அறியார். அனைத்தையும் அருளால் தாங்கும் இறைவனை அடையார்—மடையர்!

மாயையால் கவரப்பட்டு, அறிவு கெட்டவர், அசுரத்தன்மை கொண்டவர், தீமை செய்யும் மூடர், மக்களிற் கடையர் என்னைச் சரண்புக மாட்டார்கள்.

ந மாம் துஷ்க்ரிதினோமூடா:
ப்ரபத்யந்தே நராதமா |
மாயயாபஹ்ருதஜ்ஞானா
ஆஸுரிம் பாவம் ஆஸ்ரிதா: || (297)

அன்பு பெருகப் பெருக அகந்தை குறையும்; தன்னலம் சுருங்கும்; இறைவனருளையே உயிர் நாடும்; அவனில்லாத நினைப்பும் நடையும் முள்ளில் நடப்பதுபோலிருக்கும். அன்பில் பல படிகளுண்டு: முதன்மையாக நான்கு படிகளை பகவான் குறிக்கிறார்:

பாரதர் ஏறே, அர்ஜுனா, நான்கு வகையினரான நல்லோர் என்னை வழிபடுகின்றனர்: (1) (உலக வாழ்வில்) துயரப்பட்டவர்கள். (2) உலகப் பயன் விரும்புவோர். (3) ஞான தாகமுள்ளவர்கள். (4) நிஷ்காம ஞானிகள்.

சதுர்விதா பஜந்தே மாம்
ஜனா: ஸுக்ருதி னோ-ர்ஜுன |
ஆர்தோ ஜிஜ்ஞாஸு ர்தார்தீ
ஞானி ச பரதர்ஷப || (298)

அவர்களுள் யோகத்திற் கூடி ஒருமையுடன் அன்பு செய்யும் ஞானியே சிறந்தவன். ஏனெனில் ஞானிக்கு நான் மிகவும் இனியன்; எனக்கு அவன் இனியன்.

தேஷாம் ஞானீ நித்யயுக்த:
ஏக பக்திர் விஶிஷ்யதே |
ப்ரியோ ஹி ஞானிநோ-அத்யர்தம்
அஹம் ஸச மம : ப்ரிய : || (299)

இவர்களனைவரும் நல்லாரே எனினும், ஞானி என்மயன், அவன் நானே என்பது என் கொள்கை. ஏனெனில் அந்த ஞானத்துடன் கூடிய பக்தன், அதி உத்தம கதியான என்னிலே நிலைத்தவனாகிறான்.

உதாரா : ஸர்வ யேவைதே
ஞானீது ஆத்மைவ மே மதம் |
ஆஸ்தித : ஸ ஹி யுக்தாத்மா
மாமேவா நுத்தமாம் கதிம் || (300)

பல பிறவிகளின் முடிவில் ஞானவான் என்னை அடைகிறான். (ஸர்வாந்தர்யாமியான) வாஸுதேவனே எல்லாம் என்றறியும் அந்த மஹாத்மா மிகவும் அரியன்.

உள்ளே சுத்தாத்மாவாகவும், உலகில் விசுவாத்மாவாகவும், இரண்டிற்கும் மேலேயுள்ள பரமாத்மாவாகவும், பசுபதியாகவும், எங்கும் நிறைந்த பரம்பொருளைக் கண்டு ஒன்றுபடுதலே ஞானச்சிகரம். அந்நிலைபெற்ற ஞானி மிகவும் அபூர்வமானவன்.

பஹூனாம் ஜன்மநாம் அந்தே
ஞானவான் மாம் ப்ரபத்யதே |
வாஸுதேவ : ஸர்வமிதி
ஸ மஹாத்மா ஸுதுர்லப : || (301)

# ௩௩. என்னை அறியார்.

பரம்பொருளில் ஒன்றுபட்டு எல்லாம் அவன் மயமாகக் காண்பது மிகவும் அரிது; ஏனெனில் அவரவருக்குத் தனி விருப்புள்ளது. மனப்பான்மை பலவிதம்.

தங்கள் இயல்பிற்கு உட்பட்டு, அவரவர் இச்சையில் அறிவிழந்து, அதற்கேற்ற நியமங்களைக் கைக்கொண்டு, மனிதர் வேறு தேவதைகளை வழிபடுகின்றனர்.

காமைஸ்தைஸ்தை ஹ்ருதஞாந :
ப்ரபத்யந்தே அன்ய தேவதா : |
தம்தம் நியமம் ஆஸ்த்₂ாய
ப்க்ருத்யா நியதா : ஸ்வயா || (302)

ஒரே சுத்தபரமாத்மனையே அவரவர் மனப்பான்மைப் படிப் பலவாக, பல பலன்களை விரும்பி வழிபடுகின்றனர். அவரவர் உறுதிக்கேற்றபடியே இறைவனருளும் அளிக்கிறது. எப்படி எந்த மூர்த்தியை வணங்கினாலும் அருள் புரிபவன் சுத்தபரமாத்மனே.

எந்த எந்த பக்தன், எந்தெந்த மூர்த்தியை சிரத்தையுடன் அர்ச்சிக்க விரும்பினாலும், அவனவனுடைய, அந்த சிரத்தையையே நான் உறுதியாக்குகிறேன்.

யோ யோ யாம் யாம் தநும் பக்த :
ஶ்ரத்₃தயா அர்சிதும் இச்சதி |
தஸ்ய தஸ்ய அசலாம் ஶ்ரத்₃தாம்
தாம் ஏவ விததாம் யஹம் || (303)

அவன் (ஸகாமபக்தன்] அந்தத் தேவதைகளை நம்பிக்கையுடன் ஆராதனம் செய்கிறான் விரும்பிய

பலனை அடைகிறான். அந்தப் பலனை வகுத்துக் கொடுப்பவன் யானே.

ஸ தயா ஶ்ரத்தயா யுக்த:
தஸ்ய ஆராதனம் ஈஹதே |
லபதே ச தத: காமான்
மயைவ விஹிதான் ஹி தான் || (304)

அற்ப மதியுள்ள அவர்கள் பெறும் பலன் அழியக்கூடியது; தேவதைகளை வழிபடுவோர் தேவதைகளையே அடைகின்றனர். எனது பக்தர் என்னையே அடைகின்றனர்.

எல்லாம் தானான ஆண்டவனை எவ்வடிவில் வழிபட்டாலும் அவ்வடிவில் அன்பறக் கருணாளன் அவரவர் பக்குவத்திற்கேற்ற பலனையளிப்பான். எப்படியாவது தனிச் செருக்கையும் அகம்பாவத்தையுட் தன்னினும் உயர்ந்த ஒரு பொருளில் மறக்கவேண்டும். அதற்கே உருவணக்கம் பயனுரும். புறவழிபாடுகள் அன்பின் படிக்கட்டுகளே. நம்பும் பொருளில் அகந்தையைக் கரைத்து, அதைக் கொழுகொம்பாகக் கொண்டு, உயர்ந்த அறிவிற்கு ஏறவேண்டும். பலனைக்கருதிய வழிபாடு பலனைத் தரும். எப்பயனும் கருதாமல் ஆண்டவன் அருளையே கருதும் அன்பே அறிவின் பொற்கதவைத் திறந்து அவனை விளக்கும். இப்படிப்பட்ட அன்புப்படியில் அன்பனை மேன்மேலும் ஏற்றிச் செல்வதும் இறைவனே. பயன், வரம், கொள்கை, மதம், நேட்டம், கவலை அனைத்தும் ஒழித்து, கடவுளையே கருது மன்பன் அவனைப்பெற்று இரண்டறக்கூடி இன்புறுகிறான்.

அந்தவத் து பலம் தேஷாம்
தத் பவத் யல்ப மேதஸாம்
தேவான் தேவயஜோ யாந்தி
மத் பக்தா யாந்தி மாமபி || (305)

தம்மைக் கொடுத்தவருக்கு இறைவன் தன்னையே தருகிறான். அப்படிப்பட்ட இறைவனைச் சிறுமதியாளர் அறிவதில்லை.

ஒப்புயர்வற்ற அழிவில்லாத எனது பரமாத்மத் தன்மையை அறியாமல், சிறுமதியாளர் முன்னே மறைந்திருந்து வடிவெடுத்தவனாகக் கருதுகின்றனர்.

அவ்யுக்தம் வ்யக்தம் ஆபன்னம்
மன்யுதே மாம் அபுத்தய:
பரம் பாவம் அஜானந்த:
மம அவ்யயம் அனுத்தமம் || (306)

யோக மாயையால் சூழப்பட்ட நான், எல்லாருக்கும் விளங்குவதில்லை. பிறப்பற்ற, அழிவற்ற என்னை, இந்த மூட உலகம் அறிவதில்லை. (என்னையும் பிறர்போலப் பிறந்து இறப்பவனாகக் கருதுகிறது)

நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய
யோக மாயா ஸமாவ்ருத: |
மூடோஅயம் ந அபிஜாநாதி
லோகோ மாம் அஜம் அவ்யயம் || (307)

முன்னும் இன்றும், இனியும் (மூக்காலும்) உள்ள ஜீவர்களை நான் அறிவேன். ஆனால் (அன்பறிவற்ற) எவனும் என்னை அறிகிலன்.

வேதாஹம் ஸமதீதானி
வர்தமானானி சார்ஜுன |
பவிஷ்யாணி ச பூதானி
மாம் து வேத ந கஶ்சன || (308)

பாரதா, பரந்தபா, விருப்புவெறுப்பில் முளைத்த தொந்தங்களில் உலகுயிர்கள் மயங்கிப்போகின்றன.

இச்சாத்வேஷ ஸமுத்தேன
த்வந்த்வ மோஹேன பாரத
ஸர்வ பூதானி ஸம்மோஹம்
ஸர்கே யாந்தி பரந்தப || (309)

புண்ணிய வினைகளால் பாபமொழிந்த மனிதர், விருப்புவெறுப்பான தொந்தமோகம் விட்டு, திட விரதத்துடன் என்னை வழிபடுகின்றனர்.

யேஷாம் து அந்த கதம் பாபம்
ஜனாம் புண்ய கர்மணாம்
தே த்வந்த மோஹ நிர்முக்தா :
பஜந்தே மாம் த்ருடவ்ரதா : || (310)

என்னை ஆஸ்ரயித்து, மூப்பு இறப்பினின்று விடுபட யோகம் முயல்வோர், 'அது' எனப்படும் பிரம்மத்தையும், (நான் அது, எல்லாம் அது என்றறியும்) பூரண அத்யாத்ம ஞானத்தையும், (ஆண்டவனுக்கு வேள்வியாகச் செய்யவேண்டிய) அகில கர்மத்தையும் அறிகின்றனர்.

ஜரா மரண மோக்ஷாய
மாம் ஆஸ்ரித்ய யதந்தி யே |
தே ப்ரஹ்ம தத்விது : க்ருத்ஸ்னம்
அத்யாத்மம் கர்ம சாகிலம் || (311)

பூதநாதனை அதிபூதன், தேவதேவனை அதிதைவம், வேள்வித் தலைவனை அதியக்ஞன் என்று என்னை அறி. யோகத்தில் பொருந்திய சித்தமுடையவர், உயிர் புறப்படும் காலத்திலும் என்னை அறிவர்.

ஸாதி பூ தாதிதைவம் மாம்
ஸாதியஞ்ம் ச யே விது : |
ப்ரயாண காலே அபி ச மாம்
தே விது : யுக்த சேதஸ : || (312)

அனைத்தும் பரம்பொருள்; எல்லாம் அதன் மயம். தனியகந்தை நீத்து அன்பால் அருளோங்கி அதை அறிந்து கலந்து எல்லாம் அதுவே யெனக் காணும் ஞானி பக்தன் பரம்பொருளின் தன்மை, சக்தி, இன்பம் ஓங்கி எல்லையற்றிருப்பான். காலதேச வர்த்தமானங்கள் அவனைக் கட்டுப்படுத்தா. இந்த உடலை விட்டு உயிர் பிரியும்போதும், அவன் 'நான் உடலல்லேன்; நான் அவன், பரமாத்மா' என்ற உணர் வுடனிருப்பான். தனது அமரத் தன்மையை மறவாதுணர்வான். இதைப்பற்றி அடுத்த அத்தியாயம் விளக்கும்.

ஏழாம் அத்தியாயம், ஞானவிக்ஞான யோகம் முற்றிற்று.

# ௧௪. பரமனை நினை.

விஜயன் அன்பும், வணக்கமும், கருத்தும் கவனமும் ஒன்றுகின்றன; அவன் கண்ணனைப் புருஷோத்தமனாக அறிகிறான்; சென்ற உபதேச முடிவில் சொன்ன மூன்று வார்த்தைகளைப்பற்றி வினவுகிறான்:

புருஷோத்தமா, தத் என்னும் பிரமம் யாது? அத்யாத்மமாவது எது? கர்மம் யாது? அதிபூதமாவ தென்ன? அதிதெய்வம் எனப்படுவது எது?

கிம் தத் ப்ரஹ்ம கிம் அத்யாத்மம்
கிம் கர்ம புருஷோத்தம |
அதிபூதம் ச கிம் ப்ரோக்தம்
அதிதைவம் கிம் உச்யதே || (313)

மதுஸூதனா, அதியக்ஞன் யார்? இந்த உடலில் எவ்வாறுள்ளான்? தன்னடக்கமுள்ளவரால் இறுதி காலத்தில் நீ அறியப்படுவது எவ்வாறு?

அதியஞ: கதம்கோ-த்ர
தேஹேஅஸ்மின் மதுஸூதன |
ப்ரயாண காலே ச கதம்
ஞேயோ அஸி நியதாத்மபி || (314)

பகவான் அருளுகிறார்:-

அழிவற்ற பரம்பொருளே (பரமாக்ஷரம்) பிரம்மம்; (உடல், உயிர், மனம் புத்தியுடன் கூடிய) ஜீவஸ்வபாவமே அத்யாத்மம் எனப்படுகிறது. 'கர்மம்' என்பது, உயிர்த்தன்மைகளை உற்பத்தியாக்கும் விரிவான தியாகமாகும்.

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம்
ஸ்வபாவோ அத்யாத்மம் உச்யதே |
பூதபாவோத் பவகரோ
விஸர்க: கர்மஸம்ஜ்ஞித || (315)

பிரமம் மாசற்ற, பெயர்வடிவ வேறுபாடற்ற, அழிவற்ற உயர் பொருள். அவனுடைய சேதனமே ஜீவரூபமானது; பரப்பிரகிருதியே இறைவனது பாவனை, தன்மை, சுபாவம். இறைவன் வல்லமைஅனந்தகுண சின்மய சக்தி; அது தேகியான ஜீவாத்மாவில் வியாபிக்கும்போது அத்யாத்மம் எனப்படுகிறது. பகவத் சங்கல்பத்தாலேதான் அண்டசராசரங்களும் தோன்றி விளங்குகின்றன; ஜடத்தில் அவனது சித்து விளையாடுகிறது; ஆக்கல், அளித்தல், சிக்கல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களும் அவனது சந்நிதி மாத்திரத்தில் நடக்கின்றன; இந்த ஐந்தொழில் விளக்கமே "விஸர்கம்;" அதுவே வினையெழுச்சியாகும். இதுவே தெய்வசக்தியின் பெரிய தியாகம், பிரபஞ்ச யக்ஞம், பரிணாம விளக்கமாகும். அபரப்பிரகிருதியின் பரிணாமமே ஜடவுலகம், அது மாறி அழிவது. உடல், புலன், மனம், புத்தி. அஹங்காரம், ஐம்பூதம், விஷயாதிகள் இவற்றால் ஆன இப்பற்றையுடலைச் சார்ந்த உயிருணர்வே "அதிபூதம்", பிரகிருதி காரியமான உலகும் பொருள்களும்.

தோன்றி மறையும் பூத விவகாரங்களைக் குறித்தது அதிபூதம். (பூதவுடலில் இருக்கும்) ஹிரண்மய புருஷனே அதிதைவம். உடலெடுத்தவரில் சிறந்த விஜயா, நானே (ஜீவயக்ஞத்தை நடத்த) இங்கே இந்த உடலில் அதியக்ஞனாக (வேள்வி முதல்வனாக) இருக்கிறேன்,

அதிபூதம் க்ஷரோ பாவ:
புருஷஸ் ச அதிதைவதம் |
அதி யஜ்ஞோ அஹமே வாத்ர
தேஹே தேஹப்ருதாம் வர || (316)

இறைவன் புருஷோத்தமன்; பிரகிருதி சரீரத்தையும், சரீரியான புருஷனையும் அணைத்துத் தாங்கி நடத்தும் முதல்வன். அவன் நித்தியன், நிர்விகாரி; தன்னைப் பிரியாத பராப்பிரகிருதியால் ஐந்தொழில் வேள்வியை நடத்துகிறான்; ஜீவபரிணாமத்தை வகுக்கிறான்; நிலையான ஆத்மதத்துவத்தில் மேவிய சுபாவத்தையே இயற்கை மூலம் சிருஷ்டி கர்மமாக விரிக்கிறான். இயற்கையின் வசப்பட்டுப் பலவாக மாறும் தேகாத்மா க்ஷரபுருஷன்; பரமனுடன் கலந்த சுத்தாத்மா அக்ஷரபுருஷன்; அழிவிலி. க்ஷரம் அக்ஷரம் இரண்டும் கூடிய பரமாக்ஷரனாக இறைவன் விளங்குகிறான். அவனது தெய்வசக்திகள் அதி தெய்வங்கள். அவனிடமிருந்தே எல்லாம் வருகின்றன; அவனிடத்திற்கே முன்னேறிச் செல்கின்றன. பிறப்பும் இறப்பும் இந்த முன்னேற்றப் படிகளே. மூன்று காலங்களும் ஜீவ பரிணாமத் தொடரே. மனித நினைப்புகளும் சங்கிலித் தொடர்களே. நினைப்பே மனிதன்; அவன் எப்படி நினைக்கிறானோ அப்படியே ஆகிறான். நினைப்பு மனிதனை விடுவதில்லை; உடல் போன பிறகும் காற்றில் ஏறிய பூமணம்போல, நினைப்பு அவனைத் தொடருகிறது; மறுபிறவியிலும் புகுந்து பின்னுகிறது. ஐம்பூதங்கள் சேர்ந்தால் உடல்; அவை பிரிந்தால் உடல் மறைகிறது; இதுதான் இறப்பு என்பது, இறப்பது பூத சரீரமே; சுத்தான்மா இறவாதது. அது கர்மவாசனைக்கேற்றபடி மறுவுடல் எடுக்கிறது; பூர்வ வாசனைகளும் சங்கற்பங்களும் எண்ணங்களும் அதை இயக்குகின்றன. ஆதலின் எண்ணப்படியே ஒருவன் கதியாகும். எண்ணமே பிறவியை உண்டு பண்ணுகிறது. இறுதி காலத்தில் தீவிரமாயிருக்கும் எண்ணம்

உருக்கொள்கிறது. ஆதலால் மனிதன் எண்ணத்தை உயர்ந்த பொருளான இறைவனிடமே ஊன்றவேண்டும்.

முடிவு காலத்தில், எவன் என்னையே நினைத்து உடலைவிட்டுப் போகிறானோ, அவன் எனது ரூபத்தை, எனது சுபாவத்தை அடைகிறான். இதில் ஐயமில்லை.

அந்த காலே ச மாம் ஏவ
ஸ்மரன் முக்த்வா கலேவரம் |
ய: ப்ரயாதி ஸ மத்பாவம்
யாதி நாஸ்தி அத்ர ஸம்ஶய: || (317)

குந்தி மகனே, இறுதியில், எந்தெந்தத் தன்மையை நினைத்து ஒருவன் உடலை விடுகிறானோ, சதா அந்தப் பாவனை கொண்டவனாகி, அந்தந்தத் தன்மையே அடைகிறான்.

ஒருவன் வழக்கமாக நினைப்பதே இறுதியிலும் வரும். ஒவ்வொரு நினைப்பும் சித்தத்தில் பதிவாகும். அதுவே சித்திர குப்தம்; இறுதி காலத்தில் இப்படிப் பதிவான எண்ணங்களெல்லாம் கிளம்பி, மனத்திரையில் நாடகமாடும் எந்த எண்ணம் பலமாயிருக்கிறதோ அதுவே மறு பிறவியாகும். முன் எண்ணங்களை மாற்றி தெய்வத் தன்மைகளை நினைத்து, உடல் பிரியவே பிராயச்சித்தம் ஏற்பட்டது. உடல் பிரிந்தபிறகு செய்யும் அபரக்கிரியைகளெல்லாம் ஆத்மாவைச் சூழ்ந்து செல்லும் சூக்ஷ்ம சரீரமான மனோசுத்திக்கேயாம். கங்கையில் விழுவது, பிராயச்சித்தம் செய்வது, உத்தரக்கிரியைகள் இவற்றைவிட, உள்ளபோதே நல்ல சித்த விருத்தியுடன், சுய நலமற்ற தியாகத்துடன் வாழ்ந்தால், அதுவே சிறந்ததாகும். தன்னையறிந்தவனுக்குச் சடங்கு அனாவசியம். எக்காலத்திலும் இறைவனை நினைத்து, அவன் இச்சையை நிறைவேற்றும் யோகி அவனையே அடைகிறான்.

யம் யம் வா அபி ஸ்மரன் பாவம்
த்யஜதி அந்தே கலேவரம் |
தம்தம் ஏவ ஏதி கௌந்தேய
ஸதா மத்பாவ பாவித : || (318)

ஆதலால் எக்காலத்திலும் என்னையே நினை: (எனது ஏவலும் உனது அறமுமான) போர்புரி; மனத்தையும் புத்தியையும் என்னில் வைத்து என்னை நீ அடைவது உறுதி.

தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு
மாம் அனுஸ்மர யுத்ய ச |
மய்யர்பித மனோ புத்தி :
மாம் ஏவ ஏஷ்யஸி அஸம்ஸயம் || (319)

நினைப்பை அகங்காரத்திற்கு விடாமல், ஆண்டவனிடமே இயல்பாகச் செல்லும்படி பழக்கவேண்டும்.

பார்த்தா, பரமாத்ம தியானத்தையே பயிலும் யோகத்தில் ஈடுபட்டு, வேறெதனிடமும் செல்லாத சித்தத்தால், எப்போதும் சிந்திப்பவன், அந்தப் பரம திவ்ய புருஷனை (புருஷோத்தமனை) அடைகிறான்.

அப்யாஸ யோகயுக்தேன
சேதஸா நான்ய காமினா |
பரமம் புருஷம் திவ்யம்
யாதி பார்த அனுசிந்தயன் || (320)

அப்புருஷன் எப்படிப்பட்டவன் என்பதை இனிக்காண்போம்.

# ௫௫. பரமாத்மா

வேதவாக்கைக் கொண்டே கீதை புருஷோத்தமனை பரமாத்மாவை வர்ணிக்கிறது. ஸ்வேதாஸ்வதரோபநிஷத்தில் ஞானசித்தி பெற்ற முனிவர் இவ்வாறு அருளுகிறார்:—

இருளைக் கடந்து இரவிபோல் ஒளிரும் புருஷனை பரமாத்மனை அறிவேன்; அவனை அறிந்த அதிகாரி, சாவைத் தாண்டுகிறான். நித்திய வாழ்விற்கு வேறு வழியேயில்லை.

வேதாஹ மேதம் புருஷம் மஹாந்தம்
ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத் |
தமேவ விதித்வா அதிம்ருத்யுமேதி
நான்ய: பந்தா வித்யதே அயனாய || (321)

இந்தக் கருத்தையே பகவான் விளக்குகிறார்:—

" அவன் (பரமன்) கவி, முற்றறிஞன், புராணன், பழையோன், அந்தர்யாமியாயிருந்து அனைத்தையும் ஆளுவோன், அணுவினும் அணுவோன், அதிசூக்ஷ்மன், அனைத்தையும் தாங்குவோன், சிந்தனைக்கரிய வடிவோன், இருளைக் கடந்தவன். ஆதித்யவர்ணன், சூரியன்போல நித்தியசேதனப் பிரகாசன். பிரயாணகாலத்தில், அசையாமனத்துடன், பக்தியுடன் (அன்பிலூன்றி), புருவமத்தியில் பிராணனை நன்கு றுத்தி, யோக பலத்தால் எந்த அன்பன் ஸ்மரிக்கிறானோ, தியானிக்கிறானோ, அவன் அந்தப்பரம திவ்ய புருஷனை அடைகிறான்.

கவிம் புராணம் அநுஶாஸிதாரம்
அணோரணீயாம்ஸம் அநுஸ்மரேத்ய: |
ஸர்வஸ்ய தாதாரம் அசிந்த்ய ரூபம்
ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத் || (322)

ப்ரயாண காலே மனஸா அசலேன
பக்த்யா யுக்தோ யோக பலேன சைவ |
ப்ருவோர்மத்யே ப்ராணம் ஆவேஶ்ய ஸம்யக்
ஸ தம் பரம் புருஷம் உபைதி திவ்யம் || (323)

வேதவித்துக்கள் எதை அழிவற்றது (அக்ஷரம்) என்பரோ, ஆசையை நீத்த யதிதிகள் எதிற்புகுவரோ, எதை விரும்பி பிரமசரியம் அனுஷ்டிக்கின்றனரோ, அந்தப் பரமபதத்தை உனக்குச் சுருக்கியுரைக்கிறேன்.

யதக்ஷரம் வேத விதோ வதந்தி
விஶந்தி யத் யதயோ வீதராகா |
யத் இச்சந்த: ப்ரஹ்மசர்யம் சரந்தி
தத் தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே ||
(324)

## ௩௬. பரமபதம்.

பரமாத்மனில் சித்தமூன்றி நிலைப்பதே பரமபதம். சாகும்போது சங்கரா, நாராயணா என்பது போதாது; வாழும் போதே மனம் உள்ளொடுங்கிப் பரமனில் ஊன்றல்வேண்டும்: பரமாத்ம ஸ்மரணத்தை ஸஹஜமாக்க வேண்டும். மரண காலத்தில், உடலுக்கும் மனத்துக்கும் போர் நடக்கும்போது, உயிர்க்கிளி தப்பியோடப் படபடக்கும்போது, தெய்வ நினைப்பு வருவது மிகக் கடினம். நாம் செய்யும் ஒவ்வொரு செயலும் சித்தத்தில் முத்திரை போடுகிறது: அதுவே சித்திரகுப்தன் கணக்கு; மனத்தில் சுருள் சுருளாகப் படர்ந்த சங்கல்ப வடிவங்களே சித்திரம்; அச்சித்திரங்களால் வாழ்வுக் காட்சி இயங்குகிறது; அதுவே சித்திரகுப்த நாடகம். இகபரஜீவ ரகசியமெல்லாம் (குப்தம்—இரகசியம்) இந்தச் சித்திரகுப்த நாடகமே. இந்த குப்தச் சுருள் விரிந்து ஆடும் சலனக் காட்சிகள், எண்ணங்கள், பாசப் படலங்கள் கணக்கில. இந்தப் பாசச் சுருள்களே பிறவிக்குப் பிறவி தேகாத்மாவை இழுத்




துச் செல்கின்றன. இப்பிறவியிலாவது மனத்தை நித்திய சுத்த முக்தனான பரமாத்மனிடம் ஊன்றினால், சுமை குறையும். கிடைத்த பிறவியை மீண்டும் இருவினைக் குழாத்தில் அலைய விட்டால், பாசச்சுருள் இன்னும் சிக்கலாகிப்பெருத்து ஓயாத் தொல்லைதரும்: பகவான் இறைவனிடம் மனமூன்றிய ஜீவ யாத்திரையை உபதேசிக்கிறார்.

புலக்கதவுகள் அனைத்தையும் நன்றாக அடைத்து, மனத்தை இதயத்தில் அசையாது நிறுத்தி, பிராணனை ஒன்றாகூட்டி, (திவ்ய திருஷ்டியின் ஸ்தானமான) உச்சியில் ஏற்றி நிறுத்தி, யோகதாரணையில் ஊன்றி, ஏகாக்ஷரம், பரஹ்மம் ஆகிய ஓங்காரத்தை ஜபித்துக்கொண்டு (அதன் பொருள் வடிவான) என்னைச் சிந்தித்தே உடலைவிட்டுச் செல்லுவோன் பரம கதியடைகிறான்.

ஸர்வ த்வாராணி ஸம்யம்ய
மனோ ஹ்ருதி நிருத்ய ச |
மூர்த்னி ஆதாய ஆத்மன: ப்ராணம்
ஆஸ்திதோ யோக தாரணம் || (325)

ஓம் இதி ஏகாக்ஷரம் ப்ரஹ்ம
வ்யாஹரன் மாம் அனுஸ்மரன் |
ய: ப்ரயாதி த்யஜன் தேஹம்
ஸ யாதி பரமாம் கதிம் || (326)

பார்த்தா, என்றும் யோகத்தில ஈடுபட்டு, வேறு சிந்தையின்றி, சதா என்னையே நினைப்பவனுக்கு நான் எளியன்: அவன் என்னை அடைதல் எளிது.

அனன்ய சேதா: ஸததம்
யோ மாம் ஸ்மரதி நித்யஸ: |
தஸ்யாஹம் ஸுலப: பார்த
நித்ய யுக்தஸ்ய யோகின || (327)

உன்னத ஆத்ம வெற்றியாளரான மஹாத்மாக்கள், என்னை அடைந்து, துன்பவீடும், நிலையற்றதுமான மறுபிறப்பை எய்தார்.

ஏனெனில், அவர்களுடைய ஜீவ பரிணாமம் சச்சிதானந்த பிரம்ம சித்தியில் பூரணமாகி விடுகிறது.

மாம் உபேத்ய புனர்ஜன்ம
து:காலயம் அஶாஶ்வதம் |
நாப்னுவந்தி மஹாத்மான:
ஸம்ஸித்திம் பரமாம் கதா: || (328)

அர்ஜுனா, ப்ரம்மலோகம் முதல் (பிரம்மாண்டத்திற்குட்பட்ட) எல்லா வுலகத்தவர்க்கும் மறு பிறப்புண்டு. கௌந்தேயா, (நித்தியனை) என்னை அடைந்த பிறகு ஒருவனுக்கு மறுபிறப்பில்லை.

ஆப்ரஹ்ம புவனால்லோகா:
புனராவர்தினோ—ர்ஜுன |
மாம் உபேத்யது கௌந்தேய
புனர் ஜன்ம ந வித்யதே || (329)

## ௩எ. கால விளக்கம்.

ஆக்கம் அழிவு, கல்பம், பிரளயம், இவை இரவும் பகலும் போல வருகின்றன. படைக்கப்பெற்றவை யெல்லாம் காலத்தால் மாறி மறைகின்றன. பிறந்தது இறக்கிறது; இறந்தது பிறக்கிறது. காலம் ஜீவனைப் பரிணமைப்படுத்துகிறது. நமது முன்னோர்கள் காலத்தை நான்கு யுகங்களாக வகுத்தனர்.—

| | | | |
|---|---|---|---|
| கலியுகம் | ... | 4,32,000 | ஆண்டு |
| த்வாபரயுகம் | ... | 7,64,000 | ,, |
| திரேதாயுகம் | ... | 12,96,000 | ,, |
| ஸத்யயுகம் | ... | 27,28,000 | ,, |
| | ஆ. | 43,20,000 | |

சதுர்யுகமும் சேர்ந்து 43,20,000 ஆண்டுகளாகும். இது தெய்வபரிணாமத்தை ஊக்கும் யுகம். ஸத்ய யுகத்திலேதான் பூரண மனிதர் தோன்றுவர்: ஆயிரம் திவ்ய யுகம் பிரம்மாவுக்கு ஒரு நாள் ஆகும். கலியுகக் கொடுமையிலிருந்து படிப்படியாக யுகபரிணாமம் மேலேறி ஸத்ய யுகம் அடைவது பகலாகும். மறுபடியும் ஸத்யயுகத்திலிருந்து இழிந்து கலியுகத்திற்கு இறங்கி வருவது இரவாகும். பகல் கல்பம், ஆக்கம்; இரவு பிரளயம், நீக்கம். ஆயிரம் திவ்ய யுகம் ஒரு பிரம்ம தினம்; அப்படி முப்பது தினம் பிரம்ம மாதம்; அப்படி 12 மாதம் பிரம்ம வருஷம்: அப்படி 100 வருஷம் பரமன் ஆயுள் என்பர். அதன் முடிவில் பிரம்மாவும் மறையவேண்டியவனே. இதை யறிந்து மனிதன் என்றும் உள்ள இறைவனிடமே அன்பறிவை ஊன்றி, அவனையே கருதிக் கடைத்தேறவேண்டும் என்பதே கீழ்வரும் சுலோகங்களின் கருத்தாகும்.

ஆயிரம் (திவ்ய) யுகம் பிரம்மாவுக்கு ஒரு பகல்; ஆயிரம் யுகம் வரையில் இரவு; இதை (பிரம்ம தினத்தை) அறிந்தவர் இரவு பகல் உண்மையை அறிவர்.

ஸஹஸ்ர யுகபர்யந்தம்
அஹர் யத் ப்ரஹ்மணோ விது: |
ராத்ரிம் யுக ஸஹஸ்ராந்தம்
தே-அஹோராத்ரவிதோ ஜநா || (330)

காண்பனவெல்லாம், பிரம்ம தினத்தில், அவ்யக்தத்தினின்று (பிரம்மனின் சூக்ஷ்ம சரீரம்) வெளிப்படுகின்றன; பிரம்மராத்ரி வரும்போது அந்த அவ்யக்தத்திலேயே லயித்து விடுகின்றன.

மனத்தாலும் புலன்களாலும் காணும் பொருள்கள் "வ்யக்தம்"; பூதவியற்கையிலுதித்தவை. இந்த ஸ்தூல மஹா பூதங்களை உற்பத்தியாக்கும் சூக்ஷ்மமான அபரப்பிரகிருதியே

அவ்யக்தமாகும். அதை பிரம்மாவின் சூக்ஷ்ம சரீரமென்பர். இந்த சூக்ஷ்மத்திலிருந்தே ஸ்தூல வஸ்துக்கள் வந்து, அதற்கே மீள்கின்றன.

அவ்யக்தாத் வ்யக்தய: ஸர்வா:
ப்ரபவந்தி அஹராகமே |
ராத்ர்யாகமே ப்ரலீயந்தே
தத்ர ஏவ அவ்யக்த ஸம்ஜ்ஞகே || (331)

பார்த்தா, இந்தப் பூத சமுதாயங்கள் (உயிர்க் கூட்டம்) பிரகிருதி வசப்பட்டு, (காலவட்டத்திற் சிக்கி) இரவு வந்ததும் லயப்பட்டு, பகல் வந்ததும் உற்பத்தியாகின்றன.

இப்படி திவ்ய யுகங்கழிந்ததும், பிரம்மாவே தனது பிரம் மாண்டலத்துடன் மறைந்து போகிறான். எல்லாம் ஒரு மறை பொருளில் தோன்றி நின்று மறைகின்றன. பிரம்ம சிருஷ்டி தோற்றமும், மாற்றமும் அழிவும் உடையது.

பூதக்ராம ஸ ஏவாயம்
பூத்வா பூத்வா ப்ரலீயதே |
ராத்ர்யாகமே அவஸ: பார்த
ப்ரபவதி அஹராகமே || (332)

ஆனால் அந்த அவ்யக்தத்திற்கும் உன்னதமாக, அதற்கு விலக்ஷணமான, ஸநாதனமான (என்று முள்ள) அழிவற்ற நிலையுள்ளது. (அதுவே சச்சிதா னந்த பரமாத்ம நிலை); எல்லா உயிர்களும் அழிந் தாலும் அது அழிவதில்லை.

பரஸ்தஸ்மாத் து பாவோ-ன்ய:
அவ்யக்த: அவ்யக்தாத் ஸநாதன: |
ய: ஸ ஸர்வேஷு பூதேஷு
நஶ்யத்ஸு ந விநஶ்யதி || (333)

அவ்யக்தம் அக்ஷரம், அழிவற்றது எனப்படு கிறது; அந்த அக்ஷரம் உயிர் நிலை என்பர். எதை அடைந்தபின் (ஆசை ஆணவத்திற்கு) மீளுவதில்லை யோ, அது எனது பரந்தாமம், உன்னத நிலையாகும்.

அவ்யக்த: அக்ஷர: இத்யுக்த:
தம் ஆஹு: பரமாம் கதிம் |
யம் ப்ராப்ய ந நிவர்தந்தே
தத் தாம பரமம் மம || (334)

பார்த்தா, எவனுள் எல்லாவுயிர்களும் அடக்க மோ, எவன் எல்லாவுலகிலும் நிறைவானவனோ, (ஸர்வாந்தர்யாமியான) அவனே பரம புருஷன், புரு ஷோத்தமன். அனன்ய பக்தியால் (மாறா அன்பால்) அவன் அடைய நிற்கிறான்.

புருஷ: ஸ பர: பார்த
பக்த்யா லப்ய ஸ்த்வனன்யயா |
யஸ்யாந்த: ஸ்தானி பூதானி
யேன ஸர்வம் இதம் ததம் || (335)

எந்தக்காலத்தில் உடலை நீத்து யோகிகள் மீளா நிலையும், மீளும் நிலையும் பெறுவரோ அந்தக் காலத்தை விளம்புகிறேன்.

யத்ர காலே து அநாவ்ருத்திம்
ஆவ்ருத்திம் சைவ யோகின: |
ப்ரயாதா யாந்தி தம் காலம்
வக்ஷ்யாமி பரதர்ஷப || (336)

அக்னி (அனல்), ஜோதி (ஒளி), தினம் (பகல்) சுக்லபக்ஷம், உத்தராயணம் ஆறு மாதங்கள் இவற் றில் இறக்கும் பிரம்மஞானிகளான ஜனங்கள் பிரம் மத்தை அடைகின்றனர்.

அக்னிர் ஜ்யோதி ரஹ: ஸுக்ல:
ஷண்மாஸா உத்தராயணம் |
தத்ர ப்ரயாதா கச்சந்தி
ப்ரஹ்ம ப்ரஹ்ம விதோ ஜனா: || (337)

(இதற்கு எதிரிடையாக) புகை, இரவு, கிருஷ்ண பக்ஷம், தக்ஷிணாயனத்தின் ஆறு மாதங்கள். இவற்றில் இறக்கும் யோகி, சந்திரகாந்தியைப் பெற்றிருந்து, (சுவர்க்கத்தில் தனது சுபகர்ம பலன்களை அனுபவித்த பிறகு) மீளுகிறான்.

தூமோ ராத்ரி ஸ்ததா க்ருஷ்ண:
ஷண்மாஸா தக்ஷிணாயனம் |
தத்ர சாந்த்ர மஸம் ஜ்யோதிர்
யோகீ ப்ராப்ய நிவர்ததே || (338)

இந்த சுக்ல கிருஷ்ணகதிகள் உலகில் சாசுவதமாகக் கருதப்பட்டன. ஒன்றால் பிறவிக்கு மீளாமையும், மற்றொன்றினால் மறு பிறப்பும் எய்தும்.

ஸுக்ல க்ருஷ்ணே கதீ ஹ்யேதே
ஜகத: ஸாஸ்வதே மதே |
ஏகயா யாதி அனாவ்ருத்திம்
அன்யயா ஆவர்ததே புன: || (339)

*இவை ஜீவன் வெளிப்பட்டுச் செல்லும் இரகசிய மார்க்கங்கள். சுக்லகதி, ஒளிவழி, தேவயானம், அர்ச்சரமார்க்கம் எனப்படும். கிருஷ்ணகதி இருள் வழி, பிதுர்யானம், தூம மார்க்கம், புகை வழி எனப்படும். இவற்றிற்குரிய தேவதைகள் உண்டு. ஒளிவழி, இருள்வழி, தேவயானம், பிதுர்யானம் இவை உபநிஷத்தில் விரிக்கப்பெற்றுள்ளன. உலகில் இருட்*

கணங்களும், ஒளிக்கணங்களும் உள்ளன. அவை அவ்வக் காலங்களை ஆளும்; ஒவ்வொரு காலத்திற்கும் அபிமான தேவதைகள் உண்டு; அவை அதில் இறப்பவனை ஆளுகின்றன. இந்த யானங்கள் உருவகங்கள். தீ என்பது சக்தி. அறிவே பகல், ஒளி, பிறவியை வேரறுக்கும் வழி; அறியாமையே இருள், இரவு, பிறவித் துயருக்கு மீளும் வழி; எப்போதும் அறிவுடனிருந்தால் கவலையில்லை. தானாகித் தன்னைப்பிரியாத பரம்பொருளை எப்போதும் உள்ளும் புறமும் உணர்ந்திருப்பதே அறிவுடனிருப்பதாம்.

பார்த்தா, (இருள், ஒளி, ஆகிய) இந்த இரண்டு வழிகளையும் அறிந்த எந்த யோகியும் மயங்குவதில்லை; ஆதலால் அர்ஜுனா, எக்காலத்திலும் யோகயுக்தனாயிரு.

நைதே ஸ்ருதீ பார்த் ஜானன்
யோகீ முஹ்யதி கஸ்சன |
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு
யோகயுக்தோ பவார்ஜுன || (340)

பேச்சு, நடத்தை அனைத்திலும், போரிலும் சமாதானத்திலும் சுத்த பரமாத்மனான இதயவாசனுடன் உள்ளுறவு கலந்து யோகத்தில் இரு. இவ்வாறு எப்போதும் பரமாத்மக் கலப்புடனிருப்பவன் ஞான சக்தி பெற்று, ஒளி வழிச்சென்று நித்திய சுத்தானந்தம் பெறுகிறான். பிறவித்துயர் அவனைத் தீண்டுவதில்லை; அத்தகைய சுத்த ஞானியே உயர்ந்தவன்.

இந்த ரகசியம் அறிந்த யோகி வேதம், வேள்வி, தவம், தானம் இவற்றிற்கு என்ன புண்ணிய பலன் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதையெல்லாம் தாண்டி, எப்போதும், நித்தியமான, பரமாத்ம நிலையைப் பெறுகிறான்,

மறவா நினைவே பிறவா வழியாம்.

வேதேஷு யஜ்ஞேஷு தப: ஸு சைவ
தானேஷு யத்புண்ய பலம் ப்ரதிஷ்டம் |
அத்யேதி தத்ஸர்வம் இதம் விதித்வா
யோகீ பரம் ஸ்தானம் உபைதி சாத்யம் ||
(341)

எட்டாம் அத்தியாயம், அக்ஷரப்ரஹ்மயோகம் முற்றிற்று.

## ௯அ. இராஜ வித்தை.

பரமாத்மா ஸர்வாந்தர்யாமி, சச்சிதாநந்தன், புருஷோத்தமன், இயற்கைத் தலைவன், உருவன் அருவன், வினைவேள்வித் தலைவன், ஜீவாத ஸாரதி. அவனுடைய திருலீலை யரங்கமே உலகம்; இங்கு அனைத்தும் அவனே; அவனுடைய சேதன சக்தியே அனைத்தையும் புரிகின்றது; அகில கர்மங்களும் அவனுக்கே வேள்வியாக நடக்கின்றன. காலச்சக்தியை ஆளுவோன் அவனே; அனைத்தும் அவனுள் உள்ளன என்று இனி நேர்முகமாகக் காண்பதற்கு, பகவான் பக்தனைத் தயார் செய்கிறார். வித்தைகளுக்கு அரசான தமது அத்யாத்ம யோக மகிமையையும், தமது விபூதிப்பெருமைகளையும் முன்னே யுரைக்கிறார். இனி வரும் இரண்டு அத்யாயங்களும் விசுவரூப தரிசனத்திற்கு முன்னுரையாகும்.

அஸூயையற்ற பக்தனான உனக்கு, அதிரகசியமான ஞானத்தை விஞ்ஞானத்துடன் சொல்லுகிறேன்; அதையறிந்து, அசுபமான துக்கத்தினின்றும் விடுபடுவாய்.

இதம் து தே குஹ்யதமம்
ப்ரவக்ஷ்யாமி அனஸூயவே |
ஞானம் விஞான ஸஹிதம்
யத் ஞாத்வா மோக்ஷ்யஸே அஸுபாத் ||

(342)

இது ராஜவித்தை (கலைக்கரசு); இரகசியங்களில் சிறந்தது, சுத்தமானது; உத்தமமானது; பிரத்யக்ஷ பலனைத்தரும் தருமம். சாதனம் செய்ய மிகவும் சுகமானது, எளிதானது; அழிவற்றது.

ராஜவித்யா ராஜ குஹ்யம்
பவித்ரம் இதம் உத்தமம் |
ப்ரத்யக்ஷாவகமம் தர்மம்
ஸுஸுகம் கர்தும் அவ்யயம் || (343)

ஆனால் இதை அறிந்து பயில நம்பிக்கை வேண்டும். தர்க்கவாதக் கேள்விகளுக்கு இவ்வுண்மை எட்டாது. தீவிரமான அனுபவத்தில் இது கனியும்.

பரந்தபா, இந்தத் தருமத்தில் சிரத்தையற்ற மனிதர், என்னை அடையாமல், எமஸ்வரூபமான சம்சார சக்கிரத்திலேயே சுழல்கின்றனர்.

அஸ்ரத்த தாநா: புருஷா
தர்மஸ்யாஸ்ய பரந்தப |
அப்ராப்ய மாம் நிவர்தந்தே
ம்ருத்யு ஸம்ஸார வர்த்மனி || (344)

நான் அவ்யக்தமூர்த்தி, பரமாத்மா, அந்தர்யாமி; என்னாலே இவ்வுலகமெல்லாம் நிறைந்துள்ளது; எல்லாப் பூதங்களும், உயிர்களும் என்னிடத்தே நிலைக்கொண்டுள்ளன. நான் அவற்றுள் கட்டுப்பட்டு நிற்கவில்லை.

உலகில் அனைத்தும் அவனைச் சார்ந்தே வாழுகின்றன. அவன் எதிலும் சார்பற்ற சுத்த முக்தன். அண்டசராசரமும் அவன் விளக்கமே, பரமாத்மா தனது அவதாரங்களுக்கு அதிதமானவன். நாம் காண்பது அவன் ரூபமே; ஸ்வரூப மன்று.

மயா ததம் இதம் ஸர்வம்
ஜகத் அவ்யக்த மூர்திநா |
மஸ்தானி ஸர்வபூதானி
ந சாஹம் தேஷு அவஸ்தித : | (345)

எனது ஈஸ்வர யோகத்தை, யோக மகிமையைப் பார்! என்னில் இந்தப் பூதங்கள் இல்லை; (ஆனால்) நானே (இச்சாசக்தியால்) உயிர்களைத் தாங்குகிறேன். எனது ஆத்மாவிலேயே பூதபாவனை உண்டாகிறது. நான் அந்தப் பூதங்களில் கட்டுப் பட்டிருக்கவில்லை.

ந ச மத்ஸ்தானி பூதானி
பஶ்ய மே யோகமைஶ்வரம் |
பூத ப்ருத் ந ச பூதஸ்த :
மமாத்மா பூதபாவன : || (346)

எங்கும் பரவும் மகத்தான வாயு, எப்படி ஆகாசத்தில் நிலைத்துள்ளதோ அப்படியே எல்லா வுயிர்களும் என்னில் நிலைத்துள்ளன என்றறி.

யதாகாஶ ஸ்திதோ நித்யம்
வாயு : ஸர்வத்ரகோ மஹான் |
தத ஸர்வாணி பூதானி
மத்ஸ்தானீத் யுபதாரய || (347)

குந்திமகனே, கல்பமுடிவில் உயிர்களனைத்தும் என்னியல்பை யடைகின்றன; என் பிரகிருதியில்

லயமாகின்றன. கல்பத் தொடக்கத்தில் நான் அவற்றை மீண்டும் உண்டாக்குகிறேன்.

ஸர்வ பூதானி கௌந்தேய
ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் |
கல்பக்ஷயே புனஸ்தானி
கல்பாதௌ வ்ஸ்ருஜாம்யஹம் || (348)

எனது (சக்தியான) பிரகிருதியைச் சார்ந்து, தத்தம் இயல்பின் வசமான இவ்வுயிர்க்குலங்களையெல்லாம், யான் மீண்டும் மீண்டும் படைக்கிறேன்.

ப்ரக்ருதிம் ஸ்வாம் அவஷ்டப்ய
வ்ஸ்ருஜாமி புன : புன : ,
பூதக்ராமம் இமம் க்ருத்ஸ்னம்
அவஸம் ப்ரக்ருதேர் வஸாத் || (349)

தனஞ்ஜயா, அந்த (சிருஷ்டி) கர்மங்களிடையே உதாஸீனன்போல் அமர்ந்துள்ளேன்; அக்கருமங்கள் என்னைக் கட்டுப்படுத்தா.

ந ச மாம் தானி கர்மாணி
நிபத்னந்தி தனஞ்ஜய |
உதாஸீவத் ஆஸீனம்
அஸக்தம் தேஷு கர்மஸு | (350)

எனது தலைமையில், பிரகிருதி சக்தி அண்ட சராசரங்களையும் உண்டாக்குகிறாள். இக்காரணத்தாலேயே இவ்வுலகம் (வந்து சென்று) சுழல்கிறது.

மயா அத்யக்ஷேண ப்ரக்ருதி :
ஸூயதே ஸசராசரம் |
ஹேதுனா அனேன கௌந்தேய
ஜகத் விபரிவர்ததே || (351)

## ௩௧. வழிபடும் அன்பர்

பரம்பொருள் குணாதீதன், காலதேசாதீதன். அனைத்திற்கும் அவன் சாட்சியாயிருக்கிறான்; அவனுடைய மேற்பார்வையிலேயே சிற்சக்தியான பிரகிருதிதேவி உலகலீலையை நடத்துகிறாள்; அவளே ஏது, காரணம்; அவள் மூலமே கற்ப ப்ரளயச் சுருள்களை அவன் அவிழ்க்கிறான். அவனே ஜீவ பரிணாமத்தை ஏவும் பரமேசுவரன். அவனுடைய ஆடலுக்கேற்பட்ட தெய்வாம்சமே ஜீவதத்துவம். மனிதனின் அத்யாத்ம தத்துவம் தெய்வத்துடன் ஒன்றாகவே யுள்ளது. அகந்தைவிடுத்து ஆவியும் உள்ளமும், முற்றும் அவனுக்கே உரிமையாகி, அடைக்கலம் புகுந்து, அன்பிலுருகி, உள்ளும் புறமும் அவனுடைய ஆனந்தத்தையே தேடிக் கண்டுகலக்கும், மெய்யன்பர் அவன்மயமாவர்.

"நான் உயிர்களுக்கெல்லாம் மஹேஸ்வரன், எனது உயர் தன்மை யறியாத மூடர், யோக மாயையால், மானிடம் பூண்டிருக்கும் என்னைப் புறக்கணிக்கின்றனர்.

அவஜானந்தி மாம் மூடா:
மானுஷீம் தனு மாஸ்ருதம் |
பரம் பாவம், அஜானந்த:
மம பூத மஹேஸ்வரம் || (352)

வீணாசை, வீண்செயல், வீணறிவுபிடித்த மதியிலிகள், ஆளைமயக்கும் அரக்க, அசுர, இயல்பைப் பூண்டிருக்கின்றனர்."

மோகாஸா மோக கர்மாண:
மோகஞான விசேதஸ: |
ராக்ஷஸீம் ஆஸுரீம் சைவ
ப்ரக்ருதிம் மோஹினீம் ஸ்ரிதா: (353)

ஆசை, கொடுமை, பொய், அகந்தை, பொறாமை, மயக்கம் இவற்றைத் தம்மியல்பிற் கொண்டோர் அசுரர். இக்கீழியல்புகளினின்று பரிசுத்தமாகி, வீண்மயக்குகளை யொழித்து, அனைத்தும் இறைவன் என்றறியும் அறிவாளரே தெய்வத் தன்மை பெறுகின்றனர்; அவர்களே மஹாத்மாக்கள்.

"பார்த்தா! கடவுளியல்பை யடைந்த மஹாத்மாக்களோ, பூதமுதல்வன், உயிர்களுக்காதி, அழிவற்றவன் என்றறிந்து, மாறுமனத்துடன் என்னை வழிபடுகின்றனர்."

மஹாத்மாநஸ்து மாம் பார்த
தெய்வீம் ப்ரக்ருதிம் ஆஸ்ரிதா: |
பஜந்தி அனன்யமனஸ:
ஞாத்வா பூதாதிம் அவ்யயம் || (354)

திடவிரதிகளான அன்பர், எப்போதும் என்னையே போற்றி செய்து, என்னையடையவே முயன்று, என்னையே பணிந்து, சதா எனது தியானயுக்தராகி என்னையே உபாஸிக்கின்றனர்.

ஸததம் கீர்தயந்தோமாம்
யதந்தஸ்ச த்ருடவ்ரதா: |
நமஸ்யந் தஸ்ச மாம் பக்த்யா
நித்யயுக்தோ உபாஸதே || (355)

ஆண்டவனே அனைத்தும் என்பதை ஞானிகள் அறிந்து, அனைத்திலும் அவனையே வழிபடுவர்.

விராட்ஸ்வரூபனான என்னை, ஞானவேள்வியின் மூலம் வேறு சிலர் உபாஸிக்கின்றனர்; (ஸர்வம் பிரம்மம் என்ற) ஒரு திறத்தாலும் வழிபடுகின்றனர்; (காதலன் காதலி, ஆண்டான் அடிமை முதலிய) பல வடிவுகளில், எல்லா இடத்தும், பலவாறாகவும் வழிபடுகின்றனர்.

5

ஞானிகள் தம்மையும், உலகையும் அவன் மயமாகவே காண்கின்றனர். அவனையடைந்தால் எல்லாம் அடைந்த தாகும்; எல்லா வேள்வியுஞ் செய்ததாகும்.

ஞான யஞேன சாப்யன்யே
யஜந்தோ மாம் உபாஸதே |
ஏகத்வேன ப்ருதக்த்வேன
பஹுதா விச்வதோ முகம் || (356)

## சய. நான் யார்?

"நான் வேள்வி; பிதுர்க்களுக்கு அன்னமளிக்கையில் 'ஸ்வதா' என்றுரைக்குஞ் சொல்லும் நானே; நான் மூலிகை (ஸோமலதை); நானே மந்திரம், நான் நெய்; நான் தீ; நானே ஹோமக்கிரியை."

(க்ரது=வேள்வி, சக்திக்கனல்)

அஹம் க்ருது: அஹம்யஞ:
ஸ்வதாஹம் அஹம் ஔஷதம் |
மந்த்ரோ-ஹம் அஹமேவ ஆஜ்யம்
அஹம்அக்னி ரஹம் ஹுதம் || (357)

இவ்வுலகின் தாதா; இதன் அப்பன், அம்மை, பாட்டன் நானே; அறியத்தக்கவன் யான்; சுத்தன் யான்; ரிக், ஸாம, யஜுர் வேதங்களும் (அவற்றின் ஸாரமான) ஓங்காரமும் யானே."

பிதாஹம் அஸ்ய ஜகதோ
மாதா தாதா பிதாமஹ: |
வேத்யம் பவித்ரம் ஓங்கார:
ருக் ஸாம யஜுரேவச || (358)

தெய்வச்சுடருக்கு வழி காட்டுவதே வேதம், "ஓம்" எனும் பிரணவம் வேதப்பொருளாய் நிற்பது; யோகியர்க் குள்ளே இது எப்போதும் ஒலிக்கும். அது நித்ய சப்தம், ஏகா க்ஷரம், பிரம்மம்; அதுவே வேதமாக விரிந்தது: ஓம் என்பது அ-உ-ம், என்னும் மூன்று ஒலிகளைக்கொண்டது. இதற்குப் பலர் பலவிதமாகப் பொருளுரைப்பர்; ஜாக்ர, ஸ்வப்ன, ஸுஷுப்தி என்பவற்றை அ-உ-ம் முறையே குறிக்கு மென்பர். மூன்றுஞ் சேர்ந்த ஓம் துரியத்தைக் குறிக்குமென் பர். அ என்பது அவன் ஆண்டவன் அழிவற்ற பிரம்மம், பரமாத்மன்; உ என்பது உலகவடிவான விசுவாத்மா; ஆண்டவ னின் சின்மயம்; ம் என்பது ஆண்டவனின் ஆனந்தமயத்தி னின்று விரிந்த ஜீவாத்மா. அ, என்பது ஸத்; உ, சித்; ம், ஆனந்தம். பரமன், சக்தி, உயிர்க்குலம்; பரப்ரம்மமே இம் மூன்றுகவும் உள்ளது; அனைத்தையும் ப்ரம்மமாகக் காண்பதே ஓங்காரத்தின் உட்பொருள்.

அனைத்திற்கும் யானே கதி; நாயகன்; இறை வன்; சாட்சி; இருப்பிடம், சரண்; உற்ற நண்பன்; உலகின் தோற்றம், அழிவு, ஆதாரம், நிலை, அழியா விதை எல்லாம் நானே.

கதிர் பர்தா ப்ரபு: ஸாக்ஷீ
நிவாஸ: ஸரணம் ஸுஹ்ருத் |
ப்ரபவ: ப்ரலய: ஸ்தானம்
நிதானம் பீஜம் அவ்யயம் || (359]

(ஸூர்யன், அக்னி வடிவாக) நானே வெப்பந் தருகிறேன்; நானே மழையை வறட்டுகிறேன், பொழி கிறேன். நானேயமுதம், சாவின்மை; நானே சாவின் வேடம்; நானே உண்மை, ஸத், உள்ளது; நானே அஸத், இல்லது.

தபாம்யஹம் அஹம் வர்ஷம்
நிக்ருண்ஹாமி உத்ஸ்ருஜாமி ச |
அம்ருதம் சைவ ம்ருத்யுஸ்ச
ஸதஸச்சாஹம் அர்ஜுன || (360)

(எல்லாம் நான் என்ற இந்த வேதாந்த நிஷ்டையின்றி) மும்மறையாளர், ஸோமமுண்டோர், பாவம் விலகிப் பரிசுத்தமானோர், என்னை வேள்விகளால் வழிபட்டு, ஸ்வர்க்க ப்ராப்தியை வேண்டுகின்றனர்; தங்கள் புண்ணியப்பயனாக, இந்திரலோகமெய்தி, ஸ்வர்க்கத்தில், திவ்ய தேவ போகங்களை அவர்கள் அநுபவிக்கின்றனர்.

த்ரைவித்யாமாம் ஸோமபா: பூதபாபா
யஜ்ஞை ரிஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்தயந்தே ।
தே புண்யம் ஆஸாத்ய ஸுரேந்த்ர லோகம்
அஸ்னந்தி திவ்யான் திவி தேவபோகான் ||
(361)

அவர்கள் அந்த விசாலமான சுவர்க்கலோக இன்பத்தை யநுபவித்து, தங்கள் புண்ணியந் தீர்ந்ததும், மீண்டும் இந்தச் சாவுலகில் நுழைகின்றனர். இப்படி மூன்று வேதங்களின் முறைகளைப் பின்பற்றி, சுவர்க்காதி போக சுகங்களை விரும்புவோர், அடிக்கடி போக்குவரத்திற் காளாகின்றனர்.

தே தம் புக்த்வா ஸ்வர்க லோகம் விஸாலம்
க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விஸந்தி |
ஏவம் த்ரயீ தர்மம் அநுப்ரபன்னா:
கதா கதம் காமகாமா லபந்தே || (362)

தன்னிலும் அனைத்திலும் பரமனைக்கண்டு கலத்தலே வேதப்பொருள். கர்மகாண்டக்கிரியைகளைப் பற்றுடன்

புரிவோர் எய்தும் வானுலகின்பம் நிலையற்றது. உலகின்பத்தின் பெருகிய வடிவே வானின்பம். இவ்வுலகிலேயே கடவுட் கலப்புடன் தெய்வ சித்தியில் வாழலாம். அஃதுள்ளவனுக்கு எத்தகைய கரும வேள்வியும் கிரியையம் வேண்டா. அவனுடைய யோக க்ஷேமத்தை ஆண்டவன் வகிக்கிறான்.

"வேறு விருப்பின்றி, யாதொரு பயனும் நாடாமல், அனவரதம் என்னையே சிந்தித்து வழிபடுவோர், நித்ய யோகிகள்; அவர்களுடைய யோக க்ஷேமங்களை நானே வகிக்கிறேன்.

அனன்யாஸ்ஸ சிந்தயந்தோ மாம்
யே ஜநா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபியுக்தாநாம்
யோகக்ஷேமம் வஹாம் யஹம் || (363)

"கடவுளின்பத்துடன் ஒப்பிடும்போது, மோக்ஷ இன்பம் நிழலேயாகும்; அன்பன் தெய்வத்தன்மையில் உயர உயர அமரவாழ்வின் ஒளி, சக்தி, இன்பம் எல்லாம் அவனுட் பொழிகின்றன. கடவுளை அனவரதமும் நினைப்பதே யின்பம். பிரியா யோகம், அதன் ஸாதனம், காப்பு, இவற்றை ஆண்டவனே அருளுகிறான். மனிதர் பரம்பொருளான கடவுளைத் தமது மனப்படியே பலபான்மையாக வழிபடுகின்றனர்."

"குந்தியின்செல்வ! பிறதேவதைகளை நம்பிக்கையுடன் வழிபடும் ஸகாம பக்தர்களும், அறியாதவராய் என்னையே வழிபடுகின்றனர்."

யேஅபி அன்ய தேவதா பக்தா
யஜந்தே ஷ்ரத்தயான்விதா: |
தேஅபி மாமேவ கௌந்தேய
யஜந்தி அவிதி பூர்வகம்: || (364)

எனெனில், வேள்விகளனைத்திற்குந் தலைவனும், பலனுண்பவனும் (போக்தா) நானே; ஆனால் அதி யக்ஞ பரமாத்மாவான என்னை, மாந்தர் உள்ளபடி யறிவதில்லை; அதனால் வீழ்வடைகின்றனர்.

அஹம் ஹி ஸர்வ யஜ்ஞானம்
போக்தா ச ப்ரபு ரேவ ச |
ந து மாம் அபிஜானந்தி
தத்வேன அத: ச்யவந்தி தே || (365)

தேவரை வணங்குவோர் தேவரை யடைவர்; பிதுர்க்களை வணங்குவோர் பிதுர்க்களை யடைவார்; பூதந்தொழுவார், பூதங்களையே அடைவர்; அன்பர் என்னையேயடைவர்.

யாந்தி தேவவ்ரதா தேவான்
பித்ருன் யாந்தி பித்ருவ்ரதான் |
பூதானி யாந்தி பூதேஜ்யா
யாந்தி மத்யாஜினோ-பி மாம் || (366)

ஆதலின் மற்றெதை வணங்குவதினும், முழுமுதலான பரம்பொருளை வணங்குதலே முற்றின்பந்தரும். அவனை வணங்குதல் அனைத்தையும் வணங்குதலாகும். பூதங்களையும் தேவதைகளையும் வணங்குதற்கு ஆகமக்கிரியைகளும், செலவும் அதிகம். அவனை வணங்குதலோ மிக எளிது; அதற்கு வேண்டுவது உள்ளன்பே.

## ௪௧. அன்பன் அரியான்.

“இலையேனும், பூவேனும், பழமேனும், நீரேனும், எதையும் உள்ளன்புடன் அளிக்கும் நன் முயற்சியாளரின் அன்புக்காணிக்கையை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன்.”

பத்ரம் புஷ்பம் பலம் தோயம்
யோ மே பக்த்யா ப்ரயச்சதி |
ததஹம் ப்ரத்யுபஹ்ருதம்
அஸ்னாமி ப்ரயதாத்மன: || (367)

இதுவும் முடியாதானால், இயல்பாகச் செய்வதெல்லாம் எனக்கே அர்ப்பணிக்கலாம்.

குந்திமகனே! எதைச் செய்கிறாயோ, எதை யுண்கிறாயோ, எதை ஹோமஞ் செய்கிறாயோ, எதைக் கொடுக்கிறாயோ, எத்தவம் புரிகிறாயோ, அதையெல்லாம் எனக்கே அர்ப்பணமாகச் செய்.

யத் கரோஷி யதஸ்னாஸி
யத் ஜுஹோஷி ததாஸி யத் |
யத் தபஸ்யஸி கௌந்தேய
தத் குருஷ்வ மதர்பணம் || (368)

இவ்விதமாக, நலமுந் தீதுந்தரும் பலன் வடிவான வினைத்தளையினின்று விடுபடுவாய். கர்ம பலன்களைத் துறந்த யோகத்தில் ஈடுபட்டு, முக்தனாகி என்னையே யடைவாய்.

வாழ்வின் ஒவ்வோரணுவையும் பரமாத்மாவிற்கே நிவேதிக்கவேண்டும். அவனுக்காக, அவனுணர்வுடன், அவன் வழிபாடாகச் செயல்புரிந்து, அவனுக்கே அனைத்தையும், தன்னையும் ஈவதால், அகந்தையழிந்து, அவனுடன் பூரண ஐக்கியமுண்டாகிறது. அன்பு, அர்ப்பணம் இவையே எளிதில் தெய்வ சாயுஜ்ய மளிக்கும். இந்த அர்ப்பணத்திற்குச் சாதி வேற்றுமையில்லை. சாதி, சமய, சாத்திர, கோத்திர, மத வகுப்பு நிறபேதங்களும், ஏழை பணக்காரன் என்னும் வேற்றுமையும் கடவுளன்புக் கோயிலில் தலைகாட்டா.

ஸுபாஸுப பலை ரேவம்
மோக்ஷ்யஸே கர்ம பந்தனை : |
ஸந்யாஸ யோகயுக்தாத்மா
விமுக்தோ மாம் உபைஷ்யஸி || (369)

*"அனைத்துயிர்களிடமும் யான் சமமானவன்; பகைவன், பிரியன் என்பது எனக்கில்லை; ஆனால் என்னை அன்புடன் போற்றுவார் என்னுள் இருப்பர்; நானும் அவருள் இருப்பேன்."*

ஸமோஹம் ஸர்வ பூதேஷு
ந மே த்வேஷ்ய: அஸ்தி ந ப்ரிய: |
யே பஜந்தி து மாம் பக்த்யா
மயி தே தேஷு சாப்யஹம் || (370)

*அதி துராசாரனானாலும், அன்னியமின்றி என்னையே போற்றுவோன், ஸாதுவாகவே கருதத் தக்கவன்; ஏனெனில், அவன் நன்முயற்சியாளன்.*

அபி சேத் ஸுதுராசாரோ
பஜதே மாம் அனன்யபாக் |
ஸாதுரேவ ஸமந்தவ்ய:
ஸம்யக் வ்யவஸிதோஹி ஸ: || (371)

*அன்னவன் விரைவில் அறவோனாகி, நிலைத்த அமைதியெய்துவான். குந்திமகனே, என்னன்பன் என்றும் அழியான். உறுதி; அறிவாய்.*

க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா
ஸஸ்வத் ஸாந்திம் நிகச்சதி |
கௌந்தேய ப்ரதி ஜானீஹி
ந மே பக்த: ப்ரணஸ்யதி || (372)

ஏனெனில், பாபஜன்மங்களும் என்னைச் சரண் புகுந்து (மாதர்-வைசியர், நான்காம் வருணத்தோர் உட்பட) பரமகதியடைவர்.

மாம்ஹி பார்த வ்யபாஸ்ரித்ய
யே-பி ஸ்யு: பாப யோனய: |
ஸ்த்ரியோ வைஸ்யா ஸ்ததா ஸூத்ரா:
தே-பி யாந்தி பராம் கதிம் || (373)

எனில், புண்ணிய சீலரான அந்தணரும், ராஜ ரிஷிகளான அன்பரும், பரமகதி யடைவதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? நிலையற்ற, இன்ப மற்ற இவ்வுலகப் பிறப்பை எய்திய நீ, என்னையே பஜிப்பாயாக!

கிம் புனர் ப்ராஹ்மணா: புண்யா:
பக்தா ராஜர்ஷ யஸ்ததா |
அநித்யம் அஸுகம் லோகம்
இமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் || (374)

"எனது சிந்தனையில் நிலைத்த மனத்தனுயிரு; பரமாத்மாவான என் அன்பனுயிரு; சர்வ சக்தி மானுன என்னை வழிபடு; எங்கும் நிறைந்தவனுன என்னைப்பணி; என்னைப் பரமாகக்கொண்டு சரணடை; இங்ஙனம், ஆத்மாவை என்னில் ஒன்று வித்து, என்னையே அடைவாய்"

மன்மனா பவ மத்பக்தோ
மத்யாஜீ மாம் நமஸ்குரு |
மாம் ஏவ ஏஷ்யஸி யுக்த்வைவம்
ஆத்மானம் மத்பராயண: || (375)

இதுவே கீதாயோகம். எல்லா வுள்ளங்களிலும் இலகும் பரமாத்மாவையே அறிவாலறிந்தெண்ணி, உள்ளன்பாற் கலந்து, அவனுக்கே முற்றும் ஆளாகி, வேறு நினைப்பின்றி, அவன் கருவியாக வாழ்ந்து அவனுறவால், அவனையே யடைதலே இன்பம்.

ஒன்பதாம் அத்தியாயம்,
ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம் முற்றிற்று.

## ௪௨. காரணம் நானே!

பரமாத்மா ஸர்வவ்யாபி; அவனே எல்லாம். ஒரு மதம், சாதி, வகுப்பு, பெயர் வடிவில் அவன் கட்டுப்பட்டவ னல்லன்; அனைத்தும் அவன் அம்சமே. நாம் எப்படிப் பாவிக்கிறோமோ அப்படியே நமது இஷ்டதேவதையாய் அவன் விளங்குகிறான். தனது சர்வ சக்தியால், அவன் சிருஷ்டியுலகை யாளுகிறான். ஞானில் அவனே நாராயணனாக விளங்குகிறான்.

“மீண்டுங்கேளாய் பெருந்தோளுடையாய் எனது சிறுயர் மொழியை; நீ எனக்குகந்தவன்; நினது நலத்தை விரும்பி நவில்கிறேன்.

பூய ஏவ மஹாபாஹோ
ஶ்ருணு மே பரமம் வச: |
யத் தே-ஹம் ப்ரீயமாணாய
வக்ஷ்யாமி ஹிதகாம்யயா || (376)

எனது தோற்றத்தைத் தேவர்கணங்களும், முனிவரும் அறியார்; வானோர் முனிவோர் அனைவர்க்கும் யானே ஆதிகாரணன்.

நமே விது: ஸுரகணா:
ப்ரபவம் ந மஹர்ஷய: |
அஹம் ஆதிர்ஹி தேவானாம்
மஹர்ஷீணாம் ச ஸர்வஶ: || (377)

பிறவாதவன், அநாதி, உலகமஹேஸ்வரன், என்று என்னையறிவோன், மனிதருள்ளே மயக்கமற்றவன்; அவன் பாவமனைத்தினின்றும் விடுபடுகிறான்.

யோமாம் அஜம் அநாதிம் ச
வேத்தி லோக மஹேஸ்வரம் |
அஸம்மூட: ஸ மர்த்யேஷு
ஸர்வ பாபை: ப்ரமுச்யதே || (378)

புத்தி, ஞானம், மயக்கமின்மை, பொறுமை, உண்மை, அடக்கம், அமைதி, இன்பம், துன்பம், இருக்கை, இன்மை, விளைவு, அழிவு, அச்சம், துணிவு, அஹிம்சை, ஸமதை, மகிழ்வு, தவம், ஈகை, புகழ்ச்சி, இகழ்ச்சி இவ்வாறு உயிர்களின் இயல்புகள் பல வகை; இவையனைத்தும் என்னிடமிருந்தே பிறக்கின்றன."

பரமாத்மா இருவிகற்பங்களையும், முக்குணங்களையும் கடந்தவன் எனினும், அவனிடமிருந்தே அவை உற்பவிக்கின்றன; ஆனால் அவன் அவற்றிற் கட்டுப்பட்டவனில்லை; தனது சிருஷ்டியால் அவன் வேறுபடுவதில்லை. உலகாதீதனாயிருந்தே அவன் தனது சர்வசக்தியால் அனைத்தையும் அளித்தாளுகிறான்.

புத்திர் ஞானம் அஸம்மோஹ:
க்ஷமா ஸத்யம் தம: ஸம: |
ஸுகம் து:கம் பவோ-பாவோ
பயம் ச அபயம் ஏவ ச || (379)

அஹிம்ஸா ஸமதா துஷ்டி:
தபோ தானம் யஸோ-யஸ: |
பவந்தி பாவா பூதானாம்
மத்த ஏவ ப்ருதக் விதா: || (380)

"பண்டைய எழு மகரிஷிகளும், ஸநகாதியர் நால்வரும், மனுக்களும், என்னியல்பினர்; எனது சங்கற்பத்தால் உண்டானவர்கள்; மக்களனைவரும் இவர்கள் மரபினரே"

*மரிசி, அத்திரி, ஆங்கிரஸர், புலஸ்தியர், புலகர், கிரது, வசிஷ்டர், ஆகிய இந்த எழு மஹரிஷிகளும் தெய்வஞானம்சர்கள்; எழுவேததத்துவத்தின் பிரதிநிதிகள்* (ஸப்தர்ஷய:) *சயம்பு, சுவாரோசிஷேர், உத்தமர், தாமசர், ரைவதர், சாட்சுஷர், வைவஸ்வதர், சூர்யஸாவர்ணி, ரைப்யர், பிரமஸாவர்ணி, தர்மஸாவர்ணி, ருத்ரஸாவர்ணி, தேவஸாவர்ணி, இந்த்ரஸாவர்ணி ஆகியோர் பதினான்கு மனுக்கள். ஸனகர், ஸனந்தனர், ஸனாதனர், ஸனத்குமாரர் — பிரம்மாவின் மானஸ புத்திரர் நால்வர்.*

மஹ்ர்ஷய: ஸப்த பூர்வே
சத்வாரோ மனவஸ்ததா ।
மத்பாவ மானஸா ஜாதா:
யேஷாம் லோக இமா: ப்ரஜா: ॥ (381)

"எனது இத்தகைய பெருமையையும், யோகத்தையும், தத்துவத்தாலறிபவன், அசைவற்ற யோகத்தில் என்னோடொன்றுகிறான்; இதில் ஐயமில்லை.

யேஷாம் விபூதிம் யோகம் ச
மம யோ வேத்தி தத்வத: ।
ஸோ விகம்பேன யோகேன
யுஜ்யதே நாத்ர ஸம்ஸய: ॥ (382)

*அனைத்திற்கும் உற்பத்தி காரணம் யானே; எல்லாம் என்னிடமிருந்தே* (செயலியக்கமாகத்) *தழைக்கின்றன. இதை யறிந்து, அன்புறுதி மிக்க அறிஞர் என்னையே போற்றுவர்.*

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ
மத்த: ஸர்வம் ப்ரவர்ததே |
இதி மத்வா பஜந்தே மாம்
புதா பாவ ஸமன்விதா: || (383)

*அவர்கள் சித்தத்தை என்னில் வைத்து, உயிரை எனக் கர்ப்பணித்து, ஒருவருக் கொருவர் எனது பெருமையையுணர்த்தி, என்றும் என் புகழிசைத்து மகிழ்ந்து இன்புறுவார்கள்.*

மச்சித்தா மத்கதப்ராணு:
போதயந்த: பரஸ்பரம் |
கதந்தஸ்ச மாம் நித்யம்
துஷ்யந்தி ச ரமந்தி ச || (384)

*எப்போதும் எனது தியானத்திலீடுபட்டு, அன்பால் என்னை வழிபடும் அவர்களுக்கு, நான் புத்தி யோகந் தருகிறேன்; அதனுல் அவர்கள் என்னை யடைகின்றனர்.*

தேஷாம் ஸததயுக்தானும்
பஜதாம் ப்ரீதிபூர்வகம் |
ததாமி புத்தியோகம் தம்
ஏன மாமுபயாந்திதே || (385)

*அன்னவர்க்கு அனுக்ரகிக்கவே அவர்களுள்ளத் திருந்து, சுடர் விடும் அறிவு விளக்கால், அஞ்ஞான இருளைப் போக்குகிறேன்.''*

தேஷாம் ஏவ அனுகம்பார்தம்
அஹம் அஞானஜம் தம: |
நாஸயாமி ஆத்மபாவஸ்த:
ஞான தீபேன பாஸ்வதா || (386)

# சங. தேவ தேவா !

"நான்" என்னும், அகந்தை யுணர்வே மடவிருள்; எல்லாம் அவன் என்னும் அறிவே அதையொழிக்கும் ஞான தீபம். ஞானிக்கு அவனன்றி வேருக எதுவுமில்லை; அனைத்தையும் ஒரு யோகநாதனின் நித்திய சக்தி லீலையாகவே அவன் அறிகிருன். கடவுளாறத்தில், கடவுளுறவில், கடவுளின்பத்தில், கடவுளறிவில், கடவுளுண்மையில், கடவுளுக்காகவே வாழுகிருன். கீழியல்பினின்று ஆத்மஞானத்தால் ஜீவனைப் பிரித்துக் கடவுளியல்பிற் கூட்டி, பேதபுத்தியை யொழித்து, பரமாத்மாவுடன் அன்பிற்கலந்து நோக்கின், அவனே தனது சக்தியால் அனைத்துமாக விளங்குதல் காணலாம். இச்சை, மனம்' இதயம், உயிர், உடல், செயல் அனைத்தையும் பரமாத்மாவிற்கே முழுதுங்கொடுத்த நிலையிலேயே நமது கட்டுமெட்டுகள் விட்டு, எல்லாம் அவன் மயம், அவனுட்சி, அவனிச்சையாகும். இவ்வறிவை விஜயன் கருத்துறவுணர்ந்து, இன்னும் பரம்பொருளின் பெருமைகளைப்பற்றி அன்புடன் போற்றி வினவுகிருன்:

"நீயே பரப்ரம்மம்; பரந்தாமன் ; பரமசுத்தன், நித்ய திவ்ய புருஷன், ஆதிதேவன், அஜன்மா, எங்கும் நிறைந்த இறைவன் என்று தேவரிஷியான நாரதர், அஸிதர் தேவலர், வியாஸர் முதலியோரும், முனிவரனைவரும் இசைக்கின்றனர்; நீயும் அவ்வகையே மொழிகின்றனை.

பரம்ப்ரஹ்ம பரந்தாம
பவித்ரம் பரமம் பவான் |
புருஷம் ஶாஶ்வதம் திவ்யம்
ஆதிதேவம் அஜம் விபும் || (387)

ஆஹுஸ்த்வாம் ருஷய: ஸர்வே
தேவர்ஷிர் நாரதஸ்ததா |
அஸிதோ தேவலோ வ்யாஸ:
ஸ்வயம் சைவ ப்ரவிஷி மே || (388)

கேசவா! எனக்கு நீ மொழிந்தவையெல்லாம், உண்மையென் றறிந்தேன்; பகவானே! நினது திருவிளக்கத்தைத் தேவரும், அரக்கரும் அறியார்; (எனின் யானறிவேனோ?)

ஸர்வம் ஏதத் ருதம் மன்யே
யன்மாம் வதஸி கேஸவ |
நஹிதே பகவன் வ்யக்திம்
விதுர் தேவா ந தானவா: || (389)

புருஷோத்தமா! பூதபாவனா! பூதேசா! தேவ தேவா! உலகிற்கிறைவா! உன்னை நீயே அறிவாய்.

ஸ்வயமேவ ஆத்மனாத்மானம்
வேத்த த்வம் புருஷோத்தம |
பூதபாவன பூதேஸ
தேவதேவ ஜகத்பதே || 390)

எந்த திவ்ய மகிமைகளால், இவ்வுலகெங்கும் வாஸுதேவ மயமாக நிறைந்துள்ளாயோ, அந்த ஆத்ம வல்லபங்களை முழுதும் நீயே சொல்ல வல்லவன்.

வக்தும் அர்ஹஸி அஸேஷேண
திவ்யா ஹ்யாத்ம விபூதய: |
யாபிர் விபூதிபிர் லோகான்
இமாம் த்வம் வ்யாப்ய திஷ்டஸி (391)

யோகி, சதா தியானித்து நின்னை யுணர்வ தெங்ஙனம்? பகவானே, எவ்வெவ்வடிவில் உன்னை நான் சிந்திக்கத் தக்கது?

கதம் வித்யாம் அஹம் யோகின்
த்வாம் ஸதா பரிசிந்தயன் |
கேஷு கேஷு ச பாவேஷு
சிந்த்யோஸி பகவன் மயா || (392)

ஹே ஜனார்த்தனா! உயிருக்குயிரா யிருக்கும் நினது ஆத்மயோக சக்தியையும், மகிமையையும் மீண்டும் விரித்துரைத்தருள்! உனது சொல்லமுதைப் பருகப் பருகத் தெவிட்டவில்லை.''

விஸ்தரேண ஆத்மனோ யோகம்
விபூதிம் ச ஜனார்தன |
பூய: கதய த்ருப்திர்ஹி
ஸ்ருண்வதோ நாஸ்தி மே அம்ருதம் || (393)

## ௪௪. எல்லாம் நானே

நல்லது பொல்லது அனைத்திலும், கள்வரகத்தும், எந்தச் சக்தியால் ஆண்டவன் உள்ளான் என்று அர்ஜுனன் அறிய ஆவலுறுகிறான். ஆனால் கண்ணன் தனது முழுமகிமைகளையும் விரிவாகச் சொல்லவில்லை. உபநிடதங்கள் அதைப்பற்றிக் கூறுகின்றன; வைணவமும், சாக்தமும் உலகனைத்திலும் தெய்வானந்தத்தையும், பராசக்தி யாடலையுங் கண்டு, இக்கருத்தை விரித்துரைக்கின்றன. தானே அனைத்தின் சிறப்பாகவுமுள்ளதை பகவான் இங்கு விளக்குகிறார்:—

“ஐய! குருஸ்ச்ரேஷ்ட! எனது திவ்விய ஆத்மவிபூதிகளில் முதன்மையானதை உனக்குச் சொல்லுகிறேன்; எனது மகிமையின் விரிவிற்கு எல்லையில்லை.

ஹந்த தே கதயிஷ்யாமி
திவ்யா ஹ்யாத்ம விபூதய : |
ப்ராதான்யத : குருஶ்ரேஷ்ட
நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்யமே || (394)

*துயிலை வென்றவனே! எல்லாவுயிர்களின் உள்ளத்தமர்ந்த ஆத்மா யான்; உயிர்களின் ஆதியும், நடுவும், அந்தமும் யானே.*

அஹமாத்மா குடாகேஶ
ஸர்வபூதாஶய ஸ்தித : |
அஹம் ஆதிஶ்ச மத்யம் ச
பூதானும் அந்த ஏவ ச || (395)

*அதிதிமைந்தரில் யானே விஷ்ணு (வாமனன்); ஒளிகளில் யானே கதிரவன்; மருத்துக்களில் யானே மரீசி (வாயுதேவதை); நட்சத்திரங்களிற் சந்திரன் யானே.*

*அதிதி மைந்தர் பன்னிருவர் :—*

*தாதா, மித்ரன், அர்யமான், இந்திரன், வருணன், அம்சன், பகன், விவஸ்வான், பூஷன், ஸவிதா, த்வஷ்டா, விஷ்ணு.*

ஆதித்யானும் அஹம் விஷ்ணு :
ஜ்யோதிஷாம் ரவி ரம்ஶுமான் |
மரீசிர் மருதாம் அஸ்மி
நக்ஷத்ரானும் அஹம் ஶஶீ || (396)

*யானே மறைகளிற் சாமம்; தேவரில் இந்திரன்; புலன்களில் மனது; உயிர்களில் உணர்வு.*

வேதானும் ஸாம வேதோஸ்மி
தேவானும் அஸ்மி வாஸவ : |
இந்த்ரியானும் மனஶ்சாஸ்மி
பூதானும் அஸ்மி சேதனு || (397)

ஏகாதசருத்திரரில்யானே சங்கரன்; யக்ஷர், அரக்கருள் குபேரன்; அஷ்டவஸுக்களில் தீ; மலைகளில் மேரு.

சம்பு (சங்கரன்), ஹரன், பஹுரூபன், த்ரயம்பகன், அபராஜிதன், வ்ருஷாகபி, கபர்தி, ரைவதன், ம்ருகவ்யாதன், ஸர்வன், கபாலி இவர்கள் பதினொரு உருத்திரர்கள்.

அஷ்டவசுக்கள்:- தரன், த்ருவன், ஸோமன், அஹன், அனிலன், அனலன், ப்ரத்யூஷன், ப்ரபாஸன்

ருத்ராணும் ஸங்கரஸ்சாஸ்மி
வித்தேஸோ யக்ஷ ரக்ஷஸாம் |
வஸூனும் பாவகஸ்சாஸ்மி
மேரு: ஸிகரிணுமஹம் || (397)

புரோகிதரில்முதன்மையான பிருஹஸ்பதி நான் என்றறி; நான் படைத்தலைவரில் கந்தன்; நீர் நிலைகளில் கடல்.

புரோதஸாம் ச முக்யம் மாம்
வித்தி பார்த் ப்ருஹஸ்பதிம் |
ஸேனனீனும் அஹம் ஸ்கந்த:
ஸரஸாம் அஸ்மி ஸாகர: || (398)

மஹர்ஷிகளில் பிருகு; மொழிகளில் ப்ரணவம்; யக்ஞங்களில் நான் ஜபயக்ஞம்; மலைகளில் இமயம்.

மஹர்ஷீணும் ப்ருகுரஹம்
கிரம் அஸ்மி ஏகமக்ஷரம் |
யஞானும் ஜபயஞோஸ்மி
ஸ்தாவராணும் ஹிமாலய: || (399)

மரங்களனைத்திலும் அரசு, தேவரிஷிகளில் நாரதன்; கந்தர்வரில் சித்ரரதன், சித்தரிற் கபிலமுனி.

அஸ்வத்த: ஸர்வ வ்ருக்ஷாணாம்
தேவர்ஷீணாம் ச நாரத: |
கந்தர்வாணாம் சித்ரரத:
ஸித்தானாம் கபிலோ முனி: || (400)

*குதிரைகளுள் அமுதோடுதித்த உச்சைசவ்ரவம்; யானைகளில் ஐராவதம்; மனிதரில் ஜனத்தலைவன் நான் என்றறி.*

உச்சைஸ்ரவஸம் அஸ்வானாம்
வித்தி மாம் அம்ருதோத்பவம் |
ஐராவதம் கஜேந்த்ராணாம்
நராணாம் ச நராதிபம் || (401)

*ஆயுதங்களில் வஜ்ரம், பசுக்களிற் காமதேனு; சந்தான ஹேதுவான மன்மதன் நான்; நானே பாம்புகளில் வாஸுகி.*

ஆயுதானாம் அஹம் வஜ்ரம்
தேனூனாம் அஸ்மி காமதுக் |
ப்ரஜனஸ்சா அஸ்மி கந்தர்ப:
ஸர்பாணாம் அஸ்மி வாஸுகி: || (402)

*நான் நாகங்களில் ஆதிசேஷன்; ஜலசரங்களில் நான் வருணன்; பிதுர்க்களில் அர்யமான்; அடக்குபவரிற் சமன்.*

அனந்தஸ்சாஸ்மி நாகானாம்
வருணோ யாதஸாம் அஹம் |
பித்ருணாம் அர்யமா சாஸ்மி
யம: ஸம்யமதாம் அஹம் || (403)

தைத்யரில் ப்ரஹ்லாதன்; அளவைகளிற் காலம்; விலங்குகளிற் சிங்கம், பறவைகளிற் கருடன் நான்.

ப்ரஹ்லாதஸ் சாஸ்மி தைத்யானும்
கால: கலயதாம் அஹம் |
ம்ருகாணும் ச ம்ருகேந்த்ரோஹம்
வைனதேயஸ்ச பக்ஷிணும் || (404)

சுத்தகாரிகளிற் காற்று; படை தரித்தோரில் ராமன், மீன்களில் மகரம், நதிகளிற் கங்கை நானே.

பவன: பவதாம் அஸ்மி
ராம: ஸஸ்த்ர ப்ருதாமஹம் |
ஜஷாணும் மகரஸ்சாஸ்மி
ஸ்ரோதஸாம் அஸ்மி ஜாஹ்னவி || (405)

அர்ஜுனு, சிருஷ்டிகளுக்கு ஆதியும், இடையும், அந்தமும் யானே; வித்தைகளில் அத்யாத்ம வித்தை யானே; விவாதிகளில், தத்துவ நிர்ணயஞ் செய்வோரில் வாதம் யானே.

ஸர்காணும் ஆதி ரந்தஸ்ச
மத்யம் சைவாஹம் அர்ஜுன |
அத்யாத்ம வித்யா வித்யாணும்
வாத: ப்ரவததாம் அஹம் || (406)

எழுத்துக்களில் அகாரம் யானே; ஸமாஸங்களில் த்வந்த ஸமாஸம் (இரட்டைப்புணர்ப்பு); அழிவற்ற மஹாகாலம், விராட்ஸ்வரூபன், அனைத்தையும் அளிப்போன் யானே.

அக்ஷராணும் அகாரோஸ்மி
த்வந்த்வ: | ஸாமாஸிகஸ்ய ச |
அஹமேவ அக்ஷய : கால :
தாதாஹம் விஸ்வதோமுக: || (407)

அனைத்தையும் அழிக்குஞ் சாவு யானே; இனி வரும் பொருள்களின் உற்பவம் யானே. பெண்களி டையே கீர்த்தி, திரு, வாக்கு, ஸ்மிருதி, புத்தி, த்ருதி, க்ஷமை (பொறுமை) நானே.

ம்ருத்யு: ஸர்வ ஹரவ்ஸசாஹம்
உத்பவஸ்ச பவிஷ்யதாம் |
கீர்தி ஸ்ரீ வாக் ச நாரீணும்
ஸ்ம்ருதிர் மேதா த்ருதி: க்ஷமா || (408)

வேதகானத்தில் ப்ருஹத்ஸாமம் யான்; சந்தங் களில் நானே காயத்ரி; மாதங்களில் மார்கழி, பரு வங்களில் மலர்பொலியும் வசந்தம்.

ப்ருஹத்ஸாம ததா ஸாம்னும்
காயத்ரீ சந்தஸாம் அஹம் |
மாஸானும் மார்கஶீர்ஷோ-ஹம்
ருதூனும் குஸுமாகர: || (409)

நான் மோசங்களிற் சூது, எழிலாரின் எழில்; வெற்றியாளரின் வெற்றி, முயற்சியாளரின் முயற்சி; ஸாத்வீகரின் ஸத்வம்.

த்யூதம் சலயதாம் அஸ்மி
தேஜஸ் தேஜஸ்வினும் அஹம் |
ஜயோ-ஸ்மி வ்யவஸாயோ-ஸ்மி
ஸத்வம் ஸத்வவதாம் அஹம் || (410)

விருஷ்ணி மரபோரில் யான் வாசுதேவன்; பாண் டவரில் தனஞ்ஜயன்; முனிகளில் வியாஸன்; கவி களில் சுக்ரகவி.

வ்ருஷ்ணீனும் வாஸுதேவோ-ஸ்மி
பாண்டவானும் தனஞ்ஜய: |
முனீனும் அப்யஹம் வ்யாஸ:
கவீனும் உஸனு கவி: || (411)

அடக்கி யாளுவோரிடை யான் செங்கோல்; வெற்றி விரும்புவோரிடம் நீதி; இரகசியங்களில் மௌனம், அறிவாளிகளின் அறிவும் யானே.

தண்டோ தமயதாம் அஸ்மி
நீதி ரஸ்மி ஜிகீஷதாம் |
மௌனம் சைவாஸ்மி குஹ்யானும்
ஞானம் ஞானவதாம் அஹம் || (412)

உயிர்களனைத்தின் உற்பத்திக்குக் காரணமெதுவோ அது யான்; சராசரங்களில் உள்ளதெல்லாம் என்னை யன்றி எதுவுமில்லை! அனைத்தும் நானே.

யச்சாபி ஸர்வ பூதானும்
பீஜம் ததஹம் அர்ஜுன |
ந ததஸ்தி வினு யத் ஸ்யாத்
மயா பூதம் சராசரம் || (413)

இவ்வரிசையில் மஹாவிஷ்ணு, வாஸுதேவன், தன்னையும் விபூதிகளில் ஒன்ருக அகப்படுத்தி யுணர்த்துகிருர்; ஆதலின் பரப்ரம்மமே அனைத்தும்; அதுவே சுத்தாத்மாவாக உள்ளது. அதன் பெருமை எல்லையற்றது.

"பரந்தபா, எனது திவ்ய விபூதிகளுக்கு எல்லையில்லை. விரிவான என் பெருமைகளில், ஏகதேசமாய்ச் சுருக்கிக் கூறினேன்.

நான்தோ-ஸ்தி மம திவ்யானும்
விபூதீனும் பரந்தப ।
ஏஷ தூத்தேஸத: ப்ரோக்தோ
விபூதேர் விஸ்தரோ மயா ॥ (414)

உலகில் எதெது மாண்பு, செழுமை, காந்தி, அழகு சிறப்பு, சக்தியுடைத்தோ, அதெல்லாம் எனது தேஜாம்சத்தினின்று உண்டானதென் றறிவாயாக!

யத் யத் விபூதிமத் ஸத்வம்
ஸ்ரீமத் ஊர்ஜிதம் ஏவ வா ।
தத் தத் ஏவ அவகச்ச த்வம்
மம தேஜோம்-ஸ ஸம்பவம் ॥ (415)

அர்ஜுனா, இன்னும் அதிகம் அறிவதால் உனக்கு ஆவதென்ன? இவ்வுலகனைத்தையும் எனது ஒரு அம்சத்தால் தாங்கிக்கொண்டிருக்கிறேன்.

அதவா பஹுனைதேன
கிம் ஞாதேன தவார்ஜுன ।
விஷ்டப்யாஹம் இதம் க்ருத்ஸ்னம்
ஏகாம்ஸேன ஸ்திதோ ஜகத் ॥ (416)

பரம்பொருளின் சேதனசக்தி, எங்கும் பரவிநின்று அனைத்தின் உள்ளத்துங் கோயில் கொண்டு, அனைத்தையுந் தாங்குகிறது. ஒவ்வொன்றும் தெய்வத்தன்மை யுள்ளதே; அஃதின்றி எதற்கும் இருப்பில்லை; ஞானவொளியால் இது விளங்கும். ஒவ்வொன்றின் அத்யாத்மத் தன்மையே அததன் சுபாவம். தனியகந்தையொழிந்தால் அனைத்தும் ஒரு தெய்வ சக்திமயமென் றுணரலாம். அந்தச் சக்தியே ஒவ்வொன்றிலும் உயிராயிருப்பது; உண்மைத்திறனுயிருப்பது. ஒரு கள்வனில் திருமங்கையும், வால்மீகியுமாக எது தோன்றியது? அவ

னிடமும் மறைந்த தெய்வசக்தியன்றோ? இரும்புநேர் நெஞ்சக் கல்வனெனிலும், அந்தத் தெய்வ சக்தியை இடைவிட்டு நிற்க முடியாது. அந்தச் சக்தியே அதுதன் தன்மை. அழகு, ஆற்றல், வீரம், புகழ், அறிவு, எல்லாம் அதுவே! ஒரு சுத்த சக்தியே அனைத்துமாக விரிந்துள்ளது.

கீதாயோகம், பத்தாம் அத்தியாயம்,
விபூதி யோகம் முற்றிற்று.

## சரு. அருட்பார்வை

அனைத்துந் தானாகி நிற்குந் தெய்வசக்தியின் உலகளாவியவடிவை விஜயன் காணப்போகிறான்; தெய்வசக்தியின்றி உலகில் எதற்குந் தனிநிலையில்லை. எல்லாம் ஒரு பரம்பொருள் தனது நித்யசக்தியின்மூலம் புரியும் அகண்ட யோக விளக்கமே; சுத்தப்ரம்மம், பரம்பொருள், நிச்சலநிர்விகார, நிராலம்ப சுத்த நிலையிலேயேயுள்ளது. அது ஆக்குவதுமில்லை, அழிப்பதுமில்லை; அது அனைத்திற்குஞ் சாட்சியாயுள்ளது; அதனுடன் இணைபிரியாத சிற்சக்தியே எல்லா ஆடல்களையும் புரிகிறது; ஆடல் அதன் இன்றியமையாத இன்பவியல்பு; அந்தச் சக்தியின் மூலமே ப்ரம்மம் எங்கும் எல்லாமாயுள்ளது. எல்லாம் அதன் அம்சமே. பரப்ரம்மத்தின் சந்நிதி மாத்திரத்தில் சக்தி விலாசமான இவ்வுலக லீலை நடைபெறுகிறது.

அத்தகைய தெய்வசக்தி, இப்போது காலசக்தியாக நின்று எப்படிச் செயல்புரிகிறது? பரம்பொருளின் ஆத்ம விபூதிகள் எத்திறத்தன? அவன் எப்படித் தனது சக்தியின் மூலம் எங்கும் நிறைந்துள்ளான்? சர்வ சரீரியாய் அனைத்தையும் எங்ஙனந் தன்னுட்கொண்டுள்ளான்? உலகெலாந் தானாக நிற்கும் வகையென்ன? என்பதை விஜயன் காணக் கேட்கிறான்:—

என்மேல் அருள் பூத்து, பரம ரகசியமான அத்யாத்ம ஞானத்தை உபதேசித்தாய்; உன்னுரையாலே என் மயக்கம் ஒழிந்தது.

மதனுக்ரஹாய பரமம்
குஹ்யம் அத்யாத்ம ஸம்ஜ்ஞிதம் |
யத் த்வயோக்தம் வசஸ்தேன
மோஹோऽயம் விகதோ மம || (417)

கமலக்கண்ணு! உயிர்களின் ஆக்கமும் நீக்கமும், உன் அழிவற்ற பெருமையும் உன்னிடம் விரிவாகக் கேட்டேன்.

பவாப்யயௌ ஹி பூதானாம்
ஷ்ருதௌ விஸ்தரஶோ மயா |
த்வத்த: கமல பத்ராக்ஷ
மாஹாத்ம்யம் அபி சாவ்யயம் || (418)

பரமேச்வரா! புருஷோத்தமா, நின்னைக் குறித்து நீ அருளியபடியே, (சக்தி, ஞானம், பலம் வீரியம் பொருந்திய) நின் ஈச்வர ரூபத்தைப் பார்க்க விரும்புகிறேன்.

ஏவம் ஏதத், யதா ஆத்த
த்வம் ஆத்மானம் பரமேஶ்வர |
த்ரஷ்டும் இச்சாமி தே ரூபம்
ஐஶ்வரம் புருஷோத்தம || (419)

ஹே ப்ரபோ! யோகேச்வரா! அதைக் காண என்னால் முடியும் என்று நீ கருதினால், நின் அழிவற்ற ஆத்ம ஸ்வரூபத்தை எனக்குக் காட்டியருள்.

மன்யஸே யதி தத் ஸக்யம்
மயா த்ரஷ்டும் இதி ப்ரபோ |
யோகேஶ்வர ததோ மே த்வம்
தர்ஶய ஆத்மானம் அவ்யயம் || (420)

வீர விஜயன் அன்படியாளுகிறான்; பரமாத்ம நிலையி லிருந்து கண்ணன் உபதேசிக்கும் ஆத்ம ரகசியங்களை மன மூன்றிக் கேட்கிறான்.

கண்ணனைப் புருஷோத்தமன், அகண்டயோகநாதன், இறைவன், என்றறிந்து வணங்குகிறான்; உள்ளன்பு முதிர்ந்த இச்சிலையிலேயே, ஆண்டவன் தன் வாக்கை வடி வாகக் காட்டக் கருணைசெய்கிறான்.

பகவான் அருளுகிறார்: நூற்றுக் கணக்கான, ஆயிரக் கணக்கான, பலவிதம், பல நிறம், பலவடி வான என் அற்புத வடிவுகளைப் பாராய், பார்த்தா!

பஶ்ய மே பார்த ரூபாணி
ஶதஶ: அத ஸஹஸ்ரஶ:
நாநா விதானி திவ்யானி
நாநா வர்ண க்ருதீனி ச || (421)

ஆதித்யர், வசுக்கள், உருத்திரர், அசுவினிகள், மருத்துக்களைப் பாராய் பார்த்தா!

பஶ்யாதித்யான் வஸூன் ருத்ரான்
அஶ்விநௌ மருதஸ்ததா |
பஹூன் யத்ருஷ்ட பூர்வாணி
பஶ்ய ஆஶ்சர்யாணி பாரத || (422)

குடாகேசா, என் உடலில், சராசர வுலகெல் லாம், மற்றும் நீ காணவேண்டுவதெல்லாம் இப் போது ஒருங்கே காணாய்!

இஹ ஏகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம்
பஸ்ய அத்ய ஸசராசரம் |
மம தேஹே குடாகேஸ
யச்சாந்யத் த்ரஷ்டும் இச்சஸி || (423)

ஆனால் உன் ஊனக் கண்ணால் என்னைக் காணவே முடியாது. உனக்கு ஞானக் கண்ணைத் (திவ்ய திருஷ்டி, அருள் விழி) தருகிறேன். அதனால் என் ஈஸ்வர யோகத்தைப் (என் மகிமை, யோகசக்தி முதலியவற்றை) பார்!

ந து மாம் ஸக்யஸே த்ரஷ்டும்
அநேன ஏவ ஸ்வ சக்ஷுஷா |
திவ்யம் ததாமி தே சக்ஷு:
பஸ்ய மே யோகம் ஐஸ்வரம் || (424)

இதெல்லாம் கண்ட சஞ்சயன் திருதராஷ்டிர னுக்குச் சொல்லுகிறான்:—

அரசே, மஹேச்வரனான ஹரி, இவ்வாறு சொல்லி, தனது பரமேச்வர ரூபத்தைப் பார்த்த னுக்குக் காட்டியருளினான்.

ஏவம் உக்த்வா ததோ ராஜன்
மஹா யோகேஸ்வரோ ஹரி: |
தர்ஸயாமாஸ பார்தாய
பரமம் ரூபம் ஐஸ்வரம் || (425)

## ௪௩. விசுவரூப தரிசனம்

பரமாத்மா தனது பரம சிற்சக்தி வடிவை, முத்தொழி லாற்றும் உலக வடிவை அருள் விழிக்குக் காட்டுகிறான். மகாஞானியான சஞ்சயனும் அதைக்கண்டு திருதிராஷ்டிர

னுக்கு வர்ணிக்கிறான். இக்காலம் ரேடியோவில், இருந்த இடத்தில், உலகெங்கும் பேசும், பாடும் ஒலித்திரளைக்கேட்கிறோம்; வெகு தொலையில் நடப்பதை, டெலிவிஷனால் இருந்த இடத்தில், காண்கிறோம். கேவலம் பஞ்சபூத அற்புதங்களே இவ்வாறிருக்கையில், பரமாத்மா பக்தனுக்குத் தன் அகண்ட ஸ்வரூபத்தை எதிரே காட்டியதில் ஆச்சரியமில்லை. எலெக்ட்ரான் அணுக்களைப் பிடித்து மனிதமூளை ரேடியோ அற்புதம் செய்ய முடியுமானால், அணுவுக்கணுவாய், மகத்திற்கு மகத்தாய், எல்லாந் தானாய், தன்னுள் யாதுமாய் விளங்கும் பரமாத்மன், பக்குவமான பக்தனுக்கு அருள்விழி திறந்து, தன் விசுவரூபத்தைக் காட்டுதல் எளிதே. அர்ஜுனன் அங்கே கண்ட அதிசயங்களைச் சஞ்சயன் வர்ணிக்கிறான்.

பலபல வாய்கள், விழிகள் கொண்ட அநேக அற்புதக் காட்சி! பல திவ்யாபரணங்கள், போருக்காகப் பல தெய்விக ஆயுதங்கள் ஏந்தி, திவ்ய மாலைகளும் ஆடைகளும் அணிந்து, திவ்ய கந்தங்கள் பூசிய சர்வாச்சரியமான, அனந்தமான, எங்கும் முகமான விராட் ஸ்வரூபமான மஹாதேவ வடிவை விஜயன் கண்டான்.

அநேக வக்த்ர நயனம்
அநேகாத்புத தர்ஸனம் |
அநேக திவ்யா பரணம்
திவ்யா நேகோத்யதாயுதம் || (426)

திவ்ய மால்யாம் பரதரம்
திவ்ய கந்தானுலேபனம் |
ஸர்வாஸ்சர்ய மயம் தேவம்
அனந்தம் விஸ்வதோ முகம் || (427)

வானில் ஆயிரம் சூரியர்கள் ஒருங்கே உதித்தொளிர்ந்தால், அந்த மஹாத்மாவான விசுவமூர்த்தியின் ஒளிக்கு ஒருக்கால் ஒப்பிடலாம்.

திவிஸூர்ய ஸஹஸ்ரஸ்ய
பவேத் யுகபத் உத்திதா |
யதிபா: ஸத்ருஸீ ஸா ஸ்யாத்
பாஸஸ்தஸ்ய மஹாத்மன: || (428)

அப்போது பாண்டவன், அந்த தேவதேவனின் உடலில், பலவகையாய் வகுக்கப்பெற்ற, வையமனைத்தையும் ஒருங்கே கண்டான்.

தத்ர ஏகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம்
ப்ரவி பக்தம் அநேக தா |
அபஸ்யத் தேவதேவஸ்ய
ஸரீரே பாண்டவஸ் ததா || (429)

தனஞ்ஜயன், வியப்புற்று, மயிர்சிலிர்ப்ப, விசுவதேவனைக் கைகுவித்துத் தலை வணங்கி வழுத்தினன்:

தத: ஸ விஸ்மயா விஷ்டோ
ஹ்ருஷ்ட ரோமா தனஞ்ஜய: |
ப்ரணம்ய ஸிரஸா தேவம்
க்ருதாஞ்ஜலி ரபாஷத || (430)

ஆண்டவனே, நின்னுடலில் எல்லாத் தேவர்களையும், பலதிறப்பட்ட உயிர்க்குலங்களையும், மலரமர் பிரமனையும், ஈசனையும், எல்லா ரிஷிகளையும், தேவ ஸர்ப்பங்களையும் காண்கிறேன். (பிரம்ம லோகம் முதல், பாம்புகளுலவும் பாதாளம் வரைக்கும் காண்கிறேன்.)

பஶ்யாமி தேவான் தவ தேவ தேஹே
ஸர்வான் ததா பூத விஶேஷ ஸங்கான் |
ப்ரஹ்மாணம் ஈஶம் கமலாஸனஸ்தம்
ரிஷீன் ச ஸர்வான் உரகான் ச திவ்யான் ‖ (431)

வையத்திறைவா, விசுவ ரூபனே, தோள்கள், வயிறுகள், வாய்கள், விழிகள் பலபல கொண்ட எல்லையற்ற வடிவில், நின்னை எங்குமே காண்கிறேன். விசுவரூபனே, நின் ஆதி, நடு, முடிவைக்காண்கிலேன்.

அநேக பாஹூதர வக்த்ர நேத்ரம்
பஶ்யாமி த்வாம் ஸர்வதோऽனந்த ரூபம் |
நாந்தம் ந மத்யம் ந புனஸ்தவாதிம்
பஶ்யாமி விஶ்வேஶ்வர விஶ்வரூப ‖ (432)

மகுடமும், தண்டும், வலயமும், தாங்கினை. தேஜோ ராசியாய்த் திகழுவை யெங்கும்! எரியும் அனலும், சூரியனும்போன்று ஒளிகாந்தி, அளவிடற் கரிதாய், நினது காணரிய காட்சியைக் காண்கிறேன்!

கிரீடினம் கதினம் சக்ரிணம் ச
தேஜோ ராஶிம் ஸர்வதோ தீப்த மந்தம் |
பஶ்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத்
தீப்தானலார்கத்யுதிம் அப்ரமேயம் ‖ (433)

அறிதற்குரிய பரமே, அழிவறு பொருளே! உலகுயிர்க்கு உயர்ந்த உறையு ளாவாய்! மாறில்லா தாய்! மன்னறங் காப்போய்! ஸநாதன புருஷன் நீயென் றறிந்தேன்!

த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
த்வம் அஸ்ய விஸ்வஸ்ய பரம் நிதானம் |
த்வம் அவ்யய: ஸாஸ்வத தர்மகோப்தா
ஸநாதனஸ்த்வம் புருஷோ மதோமே || (434)

ஆதியந்தமும் நடுவுமில்லாய்! அளவறுந் திற லோய்! அளவறுங் கரத்தோய்! சுடர்மதி விழி யோய்! கனலெரி முகத்தாய்! உன் சுடரால் உல கெலாஞ் சுடுவதைக் காண்கிறேன்.

அநாதி மத்யாந்தம் அனந்த வீர்யம்
அனந்தபாஹும் ஸஸிஸூர்யநேத்ரம் |
பஸ்யாமி த்வாம் தீப்தஹுதாஸ வக்த்ரம்
ஸ்வதேஜஸா விஸ்வம் இதம் தபந்தம் || (435)

ஏ மகாத்மா! வான், புவிக்கிடையுள்ள வெளி யெலாம், திசையெலாம், நின்னாலேயே நிறைவுற் றுள்ளன! உன் அற்புத உக்கிர வடிவினைக்கண்டு, மூவுலகங்களும் நடுங்குகின்றனவே.

த்யாவா ப்ருதிவ்யோ ரிதமந்தரம் ஹி
வ்யாப்தம் த்வயைகேன திஸஸ்ச ஸர்வா: |
த்ருஷ்ட்வாத்புதம் ரூபம் உக்ரம் தவேதம்
லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மன் || (436)

சுரகணங்கள் உன்னுட் புகுகின்றனவே! அஞ்சிக் கைகுவித்து, உனைச் சிலர் துதிக்கின்றனர்; செழும் புகழ் கூறிச் சித்தரும் முனிவரும் உன்னை வாழ்த்திப் போற்றுகின்றார்கள்.

அபீ ஹி த்வாம் ஸுரஸங்கா விஸந்தி
கேசித்பீதா: ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி |
ஸ்வஸ்தீத் யுக்த்வா மஹர்ஷிஸித்தஸங்கா:
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி: புஷ்கலாபி:|| (437)

*ருத்ராதித்யர், வஸுக்கள், ஸாத்யர், விசுவ தேவர், அசுவினி தேவர், மருத்துக்கள், பிதுர்க்கள், யக்ஷ கந்தர்வர், அஸுரர் சித்தர் கணங்க ளனைவரும் உன்னையே நோக்குகின்றனர்.*

ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா
விஸ்வேடவஸ்வினௌ மருதஸ்ச ஊஷ்மபாஸ்ச |
கந்தர்வ யக்ஷாஸுர ஸித்தஸங்கா
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஸ்சைவ ஸர்வே || (438)

*வன் புயனே! பல வாய்களும் விழிகளும், தொடை கால் கைகள், வயிறுகளும், பல பயங்கரப் பற்களும் கொண்ட நின் பெரு வடிவைக் கண்டு, உலகெலாம் நடுங்குகின்றது! யானும் அவ்வாறே.*

ரூபம் மஹத்தே பஹுவக்த்ரநேத்ரம்
மஹா பாஹோ பஹு பாஹூருபாதம் |
பஹூதரம் பஹு தம்ஷ்ட்ராகராலம்
த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதா ஸ்ததாஹம் || (439)

*விண்ணளாவிப் பல நிறப் பொலிவுடன் விரிந்த கனலும் விழிகளோடு, உனைக் கண்டு உள்ளம் நிலை கொளாதயர்ந்தேன்!*

நப:ஸ்ப்ருஸம் தீப்தம் அநேக வர்ணம்
வ்யாத்தானனம் தீப்தவிஸால நேத்ரம் |
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்தராத்மா
த்ருதிம் ந விந்தாமி ஸமம் ச விஷ்ணோ || (440)

கோரப் பற்களுடையாய்! ஊழித் தீப்போல் காந்தும் உன் முகங்களைக் கண்டு, திக்குந் தெரிகிலேன்! சுகமுங் காணேன்! தேவர்க் கிறைவா! பூவிற்குறையுளே! அருள்புரிக!

தம்ஷ்ட்ராகராலானி ச தே முகானி
த்ருஷ்ட்வைவ காலானலஸன்னிபானி |
திஶோ ந ஜானே ந லபே ச ஶர்ம
ப்ரஸீத தேவேஶ ஜகந்நிவாஸ || (441)

கௌரவர், அவனிபர் குழுக்களுடனே உன்னுட் புகுகின்றாரே; பீஷ்மரும் துரோணரும், அந்தக் கர்ணனும், நம்பக்கமுள்ள முக்கிய வீரரும், கொடும் பற்களுடைய நின் பயங்கர வாய்களில் விரைவாய் வீழ்கின்றனர். நின் பற்களிடுக்கில் பொடிபடு தலையராய்ச் சிலர் காணப்படுகின்றனர்.

அமீ ச த்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:
ஸர்வே ஸஹை ஏவ அவனிபால ஸங்கை: |
பீஷ்மோ த்ரோண: ஸூதபுத்ரஸ்ததாஸௌ
ஸஹாஸ்மதீயை ரபி யோதமுக்யை: || (442)

வக்த்ராணி தே த்வரமாணா விஶந்தி
தம்ஷ்ட்ராகராலானி பயானகானி |
கேசித் விலக்னா தஶனாந்தரேஷு
ஸந்த்ருஶ்யந்தே சூர்ணிதை ருத்தமாங்கை: || (443)

ஆற்று வெள்ளங்கள் கடலையே நோக்கிப் பாய்ந்து வீழ்வதுபோலவே, இந்த நரலோக வீரர் அனைவரும் உன் கனல் வாய்களிலே வீழ்கின்றனரே!

9.

யத்ா நதீநாம் ப்ஹவோऽம்பு வேகா:
ஸமுத்ரம் ஏவ அபிமுகா த்ரவந்தி |
ததா தவாமீ நரலோக வீரா
விஸந்தி வக்த்ராணி அபிவிஜ்வலந்தி || (444)

*அதி விரைவுடனே, அழிவுறவே எரிசுடர் பாயும் விட்டில்கள்போல அழிவுறுதற்கே அதி விரைவுடனே, இம்மக்கள் உன்வாய்களில் வீழுகின்றனரே!*

யதா ப்ரதீப்தம் ஜ்வலனம் பதங்கா
விஸந்தி நாஸாய ஸம்ருத்த வேகா: |
ததைவ நாஸாய விஸந்தி லோகா:
தவாபி வக்த்ராணி ஸம்ருத்த வேகா: || (445)

*உன் கனல்வாய்களால் உலகெலாம் விழுங்கி, எல்லாப் புறத்துந் துழாவுகின்றாய்! விஷ்ணுவே! உலகெலாங் கதிர்களை நிரப்பி நின் கொடுஞ் சுடர்கள் சுடுகின்றனவே!*

லேலிஹ்யஸே க்ரஸமான: ஸமந்தாத்
லோகான் ஸமக்ரான் வதனைர்ஜ்வலத்பி: |
தேஜோபி ராபூர்ய ஜகத் ஸமக்ரம்
பாஸஸ்தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ || (446)

*இவ்வுக்கிர வுருவைக்கொண்ட நீ யார்? எனக்குரைத்தருள்க! தேவரிற் சிறந்தோய்! நினக்கு வணக்கம்; ஆதியாமுன்னை அறிய விருப்பம்! உன் காரியம் இன்னதென்று அறிகிலேன்!*

ஆக்யாஹி மே க: பவான் உக்ர ரூபோ
நமோऽஸ்து தே தேவ வர ப்ரஸீத |
விஜ்ஞாதும் இச்சாமி பவந்தம் ஆத்யம்
ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம் || (447)

# சஎ. நானே காலன்

பரமாத்மாவின் விசுவரூபத்தில், உலகைப் படைக்கும் பிரம்மாதி தேவர்களையும், பெரியோர்களையும் முனிவர்களையும் காண்பதுடன், புத்துலகுண்டாக்கப் பழையவுலகை எரித் தழிக்குங் காலனையும், உருத்திரக் காட்சியையும், ஊழிக் கூத்தையும் கனலுமிழ்ந்து, விழிகள் கொதிக்க, நரு நருவென்று அரக்கரைக் கடித்து விழுங்கும் இரத்தக் காளியின் அட்டகாசத்தையுங் காண்கிருன் விஜயன்; ஒரு புறம் இன்பக் காட்சி; உருத்திரக் காளியின் ஊழிக்கூத்து மறுபுறம். இதைக் கண்ட விஜயன், வீரன், அஞ்சி விதிர் விதிர்க்கிருன்; அன்பும் அமைதியும், இன்பும் அழகும் ஆண்டவனின் ஒரு தோற்றம்; அனைத்தையும் மிதித் தழித்து எரித்துச் சாம்பலாக்கும் உக்கிர உருத்திரத் தோற் றம் மறுபக்கம்; இதை மனிதனின் மெலிவு தாங்க முடியாது நடுங்குகிறது. தெய்வசக்தி புரியும் படைத்தல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களை யும் சமமாகப் பாவிப்பதே அறிவு, இன்ப வடிவையே வேண் டித் துன்ப வடிவை, அச்ச வடிவை வெறுத்துத் தீக்கோழி போலத் தலையை மண்ணிற் புதைத்துக்கொள்ளுதல் ஆராய்ச்சியன்று; கருணாநிதியான கடவுள், ஆனந்த நடம் புரியுஞ் சுந்தரன், இப்படிப்பட்ட அச்ச வடிவை ஏன் கொள்ளவேண்டும் என மனிதான்மா திகைக்கிறது; அர்ஜுனனும் அவ்வாறே வியந்து "இவ்வுருக் கொண் டதேன்?" என வினவுகிருன். காலசக்தி வடிவான விசுவ ரூபன் சொல்வதாவது :-

"உலகையழிக்கப் புகுந்துள காலன் யான்! இம்மக்களையொழிக்கவே முற்பட்டுள்ளேன். எதிரி லிருக்கும் வீரரனைவரும், உன்னைத்தவிர யாவரும், எஞ்சார்!

காலோऽஸ்மி லோக க்ஷயக்ருத் ப்ரவ்ருத்தோ
லோகான் ஸமாஹர்தும் இஹ ப்ரவ்ருத்த: |
ருதேऽபி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே
யே அவஸ்திதா: ப்ரத்யநீகேஷு யோதா: || (448)

ஆதலின் எழுந்து நில்! இசைபெறு! பகைவரை வென்று, வளம்பெறுமரசை யாட்சிசெய்! முன்னேயே யிவர்கள் என்னால் மாய்ந்தனர்! இடக்கை வீர, நீ புறக்குறியாகுக! போரைப் புரிவாய்!

தஸ்மாத் த்வம் உத்திஷ்ட யஶோ லபஸ்வ
ஜித்வா ஶத்ரூன் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் |
மயைவைதே நிஹதா: பூர்வமேவ
நிமித்த மாத்ரம் பவ ஸவ்யஸாசின் || (449)

துரோணன், பீஷ்மன், ஜயத்ரதன், கர்ணன், மற்ற யுத்த வீரரனைவரும், என்னால் மாய்ந்தனர்! (வெளிக்குறியாக) அவர்களை நீ கொல்! அஞ்சேல்! போர்செய்! போர்க் களத்திற் பகைவரை வெல்வாய்!"

த்ரோணம் ச பீஷ்மம் ச ஜயத்ரதம் ச
கர்ணம் ததான்யான் அபி யோதவீரான் |
மயா ஹதான் த்வம் ஜஹி மா வ்யதிஷ்டா
யுத்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்நான் || (450)

## ௪அ. வணக்கம்! வணக்கம்!

இவ்விதமாகத் தன் கருத்து, கட்டளை, காரியம், பலன் அனைத்தையும் கண்ணன் உரைத்தான். அதுவே கால சக்தியின் தேவை. புதிய சிருட்டிக்கு இந்த அழிவு வேண்டுமென்பது தெய்வசக்தியின் இச்சை. அழிவின் மீது ஆக்கம் வளரும். உருத்திரக்காளி விஷ்ணு ராஜ்யத்திற்கு வழிதுலக்குகிறாள். அழிவும் ஆக்கமும் உலகின் இயல்பு. "நான் இப் பகைவரை எனது இச்சையால் வீழ்த்திவிட்டேன்; பகை, வெறுப்பு, அச்சம் இன்றி எனது புறக்கருவியாக நின்று, எனக்காகப் போர்புரி!" என்கிறான் கண்ணன். அங்கே நடந்ததைச் சஞ்சயன் சொல்லுகிறான்.

கேசவன் சொல்லைக் கிரீடி கேட்டான். மெய் விதிர்த்துக் கைகுவித்து வணங்கி, மீண்டும் அஞ்சிப் பணிந்து, மொழிகுழறிக் கிருஷ்ணனிடம் உரைப்பான் :

ஏதத் ஶ்ருத்வா வசனம் கேஶவஸ்ய
க்ருதாஞ்ஜலிர் வேபமான: கிரீடீ |
நமஸ்க்ருத்வா பூ⁴ய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்₃க₃த₃ம் பீ⁴தபீ⁴த: ப்ரணம்ய || (451)

"ரிஷீகேசா, உனது நல்லிசையில் உலகம் களித்து மகிழ்வது சரியே. அரக்கர் அஞ்சித் திசை திசை ஓடுகின்றனர்! சித்தர் குழுவெலாஞ் சேவிக்கின்றனர்!

ஸ்தா₂னே ஹ்ருஷீகேச தவ ப்ரகீர்த்யா
ஜக₃த் ப்ரஹ்ருஷ்யதி அநுரஜ்யதே ச |
ரக்ஷாம்ஸி பீ₄தானி தி₃ஶோ த்₃ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்₃த₄ஸங்கா₄: || (452)

ஹே மஹாத்மா! எங்ஙனம் உன்னை வணங்கா திருப்பார்? பிரமனிற் சிறந்தவா, ஆதி கர்த்தா! அனந்தா! தேவேசா! ஜகந்நிவாஸா! உண்மை (ஸத்து) நீ! இன்மை (அஸத்து) நீ! அதனையுங் கடந்த அழிவறும் தத்பர பிரமம் நீ!

கஸ்மாத் ச தே ந நமேரன் மஹாத்மன்
கரீயஸே ப்ரஹ்மணோऽபி ஆதிகர்த்ரே |
அனந்த தேவேஸ ஜகன்னிவாஸ
த்வம் அக்ஷரம் ஸத் அஸத் தத்பரம் யத் || (453)

நீயே ஆதி தேவன்! புராண புருஷன் (தொல்லோன்)! உலகிற்கெல்லாம் உயர்பெரு நிலயம்! நீயேயனைத்து மறிவோன், அறியத் தகும் பொருள்! நீயே உயர் பதம்! அனந்த வடிவே! உலகம் உன்மயம்.

த்வம் ஆதிதேவ: புருஷ: புராண:
த்வம் அஸ்ய விஸ்வஸ்ய பரம் நிதானம் |
வேத்தா அஸி வேத்யம் ச பரம் ச தாம
த்வயா ததம் விஸ்வம் அனந்த ரூப || (454)

நீயே, வாயு, யமன், அக்னி, வருணன், சந்திரன், பிரமன், பிரமபிதா! ஆயிரந் தடவை வணக்கம், வணக்கம்! மீண்டும் மீண்டும் வணக்கம், வணக்கம்!

வாயுர் யமோக்னிர் வருண: ஸஸாங்க:
ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதாமஹஸ்ச |
நமோ நமஸ்தேऽஸ்து ஸஹஸ்ர க்ருத்வ:
புனஸ்ச பூயோऽபி நமோ நமஸ்தே || (455)

எல்லையில்லா வீரியமுடையோய், உன் முன் புறம் வணக்கம், பின்புறம் வணக்கம்! அனைத்து

மானவா! எல்லாப் புறமும் நினக்கு வணக்கம்! அளவறு திறலோய்! அனைத்திலும் நிறைந்தாய்! அனைத்துமாம் நீயே!

நம: புரஸ்தாத் அத ப்ருஷ்டதஸ்தே
நமோऽஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ |
அனந்த வீர்ய அமிதவிக்ரம ஸ்த்வம்
ஸர்வம் ஸமாப்னோஷி ததோऽஸி ஸர்வ: || (456)

நினது இத்தகைய மாண்பறியாமல், மனிதத் தோழனென்றுன்னை மதித்து, அன்பினாலும், அசட்டையினாலும் "ஹே க்ருஷ்ண! யாதவா! நண்பா!" என்று விநயமின்றி யழைத்துவந்தேன்!

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹேக்ருஷ்ண ஹேயாதவ ஹே ஸகேதி |
அஜானதா மஹிமானம் தவேதம்
மயா ப்ர மாதாத் ப்ரணயேன வாபி || (457

ஆடலில், படுக்கையில், இருக்கையில், உண்கையில், தனிமையில், நண்பர் முன்னிலையினில் உன்னை வேடிக்கையாய் அவமதித்துள்ளேன்! அச்சுதா! அளவிலாய், என்னை மன்னிப்பாய்!

யச்சாவ ஹாஸார்தம் அஸத் க்ருதோऽஸி
விஹார ஸய்யாஸன போஜனேஷு |
ஏக: அதவா அபி அச்யுத தத்ஸமக்ஷம்
தத் க்ஷாமயே த்வாம் அஹம் அப்ரமேயம் || (458)

சராசர உலகின் தந்தை நீயே! உலகெலாம் வணங்கத்தக்கவன் நீயே! பரமகுரு நீ! அற்புதப் பெருமையாய்! மூவுலகிலும் உன்னை ஒப்பாரில்லை; என்னில் உன்னினும் மீக்காருண்டோ?

பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வம் அஸ்ய பூஜ்யஶ்ச குருர்கரீயான் |
ந த்வத் ஸமோஸ்தி அப்யதிக: குதோऽன்யோ
லோகத்ரயேऽப்ய ப்ரதிமப்ரபாவ || (459)

ஆதலின் போற்றற்குரிய இறைவனே! நின்னை உடம்பு வணங்கிப் பணிந்து, அருள் கேட்கின்றேன்! தனையனைத் தந்தை, நண்பனைத் தோழன், காதலன் காந்தையைப் பிழை பொறுப்பதுபோல், தேவனே பொறுத்தருள் சிறியேன் பிழையை!

தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாம் அஹம் ஈஶம் ஈட்யம் |
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும் || (460)

முன்னே காணாதன கண்டு மகிழ்ந்தேன்! ஆயினும், அச்சத்தால் என்மனம் தளர்கின்றது. ஆதலின், தேவா, தேவர்க்கிறைவா! உலகின் நிலயமே! எனக்கு நின் பழைய வடிவையே காட்டியருள்!

அத்ருஷ்ட பூர்வம் ஹ்ருஷிதோऽஸ்மி த்ருஷ்ட்வா
பயேன ச ப்ரவ்யதிதம் மனோ மே |
ததேவ மே தர்ஶய தேவ ரூபம்
ப்ரஸீத தேவேஶ ஜகன்னிவாஸ || (461)

கிரீடம், கதை, சக்கரக் கையுடன் உன்னைக் காண விரும்புகிறேன். ஆயிரங் கரத்தோய்! விசுவ மூர்த்தி, அந்த நாற்கை வடிவுகொண்டிலகுவாய்.

கிரீடினம் கதினம் சக்ரஹஸ்தம்
இச்சாமி த்வாம் த்ரஷ்டும் அஹம் ததைவ |
தேனைவ ரூபேண சதுர்புஜேன
ஸஹஸ்ரபாஹோ பவ விஶ்வமூர்தே || (462)

அன்பன் வேண்டுகோளுக்குப் பகவான் இரங்கியருளுகிறார் :

"அர்ஜுனா, என் ஆத்ம யோகத்தால் அருள் பூத்து, உனக்கு என் பரவடிவைக் காட்டினேன்! தேசுமயமும், ஆதியும், எல்லையற்றதும் அகண்டமுமான இவ்வடிவை நின்னன்றி முன்னே கண்டவரில்லை!

மயா ப்ரஸன்னேன தவார்ஜுனேதம்
ரூபம் பரம் தர்ஸிதம் ஆத்ம யோகாத் ।
தேஜோமயம் விஸ்வம் அனந்தம் ஆத்யம்
யன்மே த்வதன்யேன ந த்ருஷ்டபூர்வம் ॥ (463)

குருவீர மணியே! மனித வுலகில், வேதம், வேள்வி, கல்வி, ஈகை, கிரியை, கடுந்தவம் இவற்றாலும் இவ்வடிவில் என்னை உன்னின்றி யாரும் காணவியலார்!

ந வேத யஜ்ஞ அத்யயனைர் ந தானை:
ந ச க்ரியாபிர் ந தபோபிருக்ரை: ।
ஏவம் ரூப: ஸக்ய அஹம் ந்ருலோகே
த்ரஷ்டும் த்வதன்யேன குருப்ரவீர ॥ (464)

இவ்வகையான என் கோர ரூபம் கண்டு கலங்கேல், மயங்கேல், அஞ்சுதலொழிக! இதோ என் முன்னுரு! மகிழ் மனத்துடன் மீண்டுங் காணாய்!

மா தே வ்யதா மா ச விமூட பாவோ
த்ருஷ்ட்வா ரூபம் கோரம் ஈத்ருக் மமேதம்
வ்யபேதபீ: ப்ரீதமனா: புனஸ்த்வம்
ததேவ மே ரூபம் இதம் ப்ரபஸ்ய ॥ (465)

10.

சஞ்ஜயன் சொல்லுகிறுன் :-

வாசுதேவன் அர்ஜுனனுக்கு இவ்வாறுரைத்து, தனது முன்வடிவை மீண்டுந்தோற்றினுன்; மஹாத்மாவான கண்ணன், சாந்தமூர்த்தியாகி, அச்சுறும் பார்த்தனுக்கு ஆறுதலீந்தான்.

இத்யர்ஜுனம் வாஸுதேவஸ்ததோக்த்வா
ஸ்வகம் ரூபம் தர்ஸயா மாஸ பூய : |
ஆஸ்வாஸ யாமாஸ ச பீதம் ஏனம்
பூத்வா புன : ஸௌம்ய வபுர்மஹாத்மா || (466)

சாந்த மூர்த்தியான கிருஷ்ணனைப் பார்த்து அமைதியெய்தி அர்ஜுனன் சொல்லுகிறுன் :

ஜனர்த்தன ! நினது சாந்த மானிட வடிவைக் கண்டு இப்போதே அமைதியுற்றேன் ; உணர்ச்சி மீண்டது ! இயல்நிலை யெய்தினேன்.

த்ருஷ்ட்வா இதம் மாநுஷம் ரூபம்
தவ ஸௌம்யம் ஜனர்த்ன |
இதானீம் அஸ்மி ஸம்வ்ருத்த :
ஸசேதா : ப்ரக்ருதிம் கத : || (467)

பரம் விசுவம் ஜீவம், ஆத்மஸத்தா, இயற்கை, உலக சக்தி, காலசக்தி, எல்லையற்ற பொருட்குலங்கள், இடம், காலம், காலங்கடந்த பொருள், உள்ளதனைத்தையும் ஒரு அகண்ட வடிவில் தானுகக் காட்டிய அந்த விசுவரூபக் காட்சி யாருக்கே கிட்டும் ? பகவான் அருளுகிறார் :

இந்தக் காணரும் வடிவினைக் கண்டனை ! இவ்வடிவினை என்றுந் தேவருங் காண விரும்பி நிற்கின்றார் !

ஸுதுர்தர்ஸம் இதம் ரூபம்
த்ருஷ்டவானஸி யன் மம |
தேவாஅப்யஸ்ய ரூபஸ்ய
நித்யம் தர்ஸன காங்க்ஷிண : (468)

வேதம், தவம், கொடை, வேள்வியாலும், நீ கண்டதுபோல் என்னைக் காணமுடியாது.

நாஹம் வேதைர் ந தபஸா
ந தானேன ந ச இஜ்யயா |
ஸக்ய ஏவம் விதோ த்ரஷ்டும்
த்ருஷ்டவானஸி மாம் யதா || (469)

உயர் தவத்தோய், அர்ஜுனு! அனன்ய பக்தியினுலேதான் (மாறிலா அன்பு) உள்ளவாறு என்னை இவ்விதம் அறிதலுங் காணலும் புகுதலும் இயலும்!

பக்த்யா த்வனன்யயா ஸக்ய :
அஹம் ஏவம்விதோऽர்ஜுன |
ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேன
ப்ரவேஷ்டும் ச பரந்தப || (470)

என் பணியாற்றுவோன், எனைப் பரங்கொண்டோன், எனக்கேயன்பன், பற்றை நீத்தோன், எவ்வுயிரையும் பகைக்காதவன் (எல்லா வுயிர்களுக்கும் அன்பன்), அவனே என்னை அடைவான் பாண்டவா!

மத்கர்மக்ருத் மத்பரம:
மத்பக்த: ஸங்கவர்ஜித: |
நிர்வைர: ஸர்வபூதேஷு
ய: ஸ மாம் ஏதி பாண்டவ || (471)

இதில் அணியணியாக யோக ஸாதனஞ் சொல்லப் படுகிறது. முதலில் கடவுட்பணி: அதாவது அகர்தையுந் தன்னலமும் விடுத்து, செயலையும் பயனையும் வினை முதல்வனான கடவுளுக்கேயீர்து, அவனுக்கே வேள்வியாக வினை புரிதல்; இத்தகையபணியின்மூலம் கடவுளிடம் தத்பரனாகி, அவனே தலைவனாகி நம்மைக் காப்பான் என்ற நம்பிக்கை பிறக்கிறது. அடுத்தது தீவிரமான கடவுளன்பு: பிறகு அவனைத்தவிர மற்றவற்றிற் சிர்தை செலுத்தாது, புறப்பற்றற்று அவனையே இதயத்திற் பற்றிப் பற்றுவிடா திருத்தல்: இதயத்தில் அவனை அன்பிற் கலர்தபின், அவன் மயமாகவே அனைத்தையுங் காணல்; அப்போது ஆருயிர்களனைத்திடமும் பேரன்பு பிறக்கிறது; அவனை அனைத்திலுங் காண்போர் எதைப் பகைக்கமுடியும்? ஆண்டவனன்பு, அகண்டமான ஆருயிரன்பாக விரிகிறது; இப்படித் தன்னிடமும் தானான அனைத்திடமும் அவனையே கண்டு அன்புசெய்வதே அவனையடையும் வழி. அவன் மயமாகவே உலகனைத்துங் காணின், அதுவே விசுவரூப மன்றோ? இறைவன் அனைத்துந் தானாகவே யுள்ளான்; உலகின் பொருள், பெயர் வடிவு, செயல் (பயன்) காட்சி, கருத்து, அனைத்திலும் அவனே யன்றோ! உண்மை ஞானிக்கு, உலகெலாம் நித்திய விசுவரூபக் காட்சியே யாகும்.

கீதா யோகம்

பதினோராம் அத்தியாயம்

விசுவரூப தரிசனம்

முற்றிற்று.

# சகூ. பக்தி யோகம்

இறை, உயிர், உலகம் இம் முப்பொருளையும் கற்பிதமென்று சோதிசெய்து ஆத்ம நிச்சலத்தில் ஊன்றுவது ஏகாத்ம ஞானம். அதற்கு 'ஆனந்தம் என்னுள்' என்பதே புஷ்பாஞ்ஜலி; பிரம்மாண்டம் என்னிடம் தோற்றமென்பதே நிவேதனம்; நானே நித்திய நிச்சல பிரம்மஸ்வரூபமென்பதே தியானம். தன்மயத்திற் கரைந்துவிடுதலே சித்தி. இதுவே நிர்க்குண ஸ்வரூப ஸாக்ஷாத்காரம். கீதை முக்தான்மாவிற்கும் பக்தியை வற்புறுத்துகிறது. ஜீவாத்மா பரமாத்மாவுடன் எப்போதும் எல்லையற்ற அறிவில் ஒன்றி, அவனுறவில் அவன்மயமான ஆருயிர்களையுங் கலந்து, அன்பு பேணுதல் வேண்டும். கடவுளுறவில், கடவுட் சுதந்தரத்தில் கீதையின் அன்பும், அருட்பணியுங் கைகோத்து நிலவுகின்றன. பரமாத்மனைச் சரண்புகுந்து, அவனில் வாழ்ந்து, அவனியல்பையே தன்னியல்பாக்கி, அன்பால் அவனையணைந்து, அவனறிவால் அவனறத்தில் வாழும் ஸாலோக, ஸாமீப்ய, ஸாரூப்ய, ஸாயுஜ்யத்துடன் ஸாதர்ம்ய முக்தியைக் கீதை உபதேசிக்கிறது. தனியகந்தையை அவ்யக்த பிரம்மத்தில் ஆழ்த்தலே கண்ணனின் முதல் உபதேசம். இப்போது விசுவ ரூபத்தையும், தனது அவதாரப் பெருமையையுங் கண்ணன் காட்டிப் பூரண பக்தியைப் புகட்டினான். நித்திய சுத்த பரமாத்மா நிர்விகாரி, மோன நிறைவு; அதுவே நாம்! அதற்கு அவதாரமில்லை. அதையே பராபக்தியால் "சுத்தோஹம்" என்று தியானோபாசனை செய்தலே உத்தம சாதனம். "எனில், மூர்த்தி பூசை செய்வதும், ஒரு அவதார புருஷனை வணங்குவதும் சிறப்பா?" என்று அர்ஜுனன் மனத்தில் ஐயமெழுந்தது. உருவா, அருவா, பிரம்மமா, மூர்த்தியா, எதைத் தொழுதல் ஏற்றமுடையது என்று அவன் வினவுகின்றான்.

---

* XII பக்தி யோகம்.

“இவ்வகை, என்றும் ஈடுபட்டு ஸகுண மூர்த்தியான உன்னை நன்று பழிபடும் அன்பரா? அல்லது, அக்ஷர நிர்குண ப்ரம்மோபாசகரா (அழிவில்லாத அருவணங்கிகளா) இவ்விரு திறத்தாரில், உத்தம யோக ஞானிகள் யாவர்?”

ஏவம் ஸததயுக்தா யே
பக்தா ஸ்த்வாம் பர்யுபாஸதே |
யேசாபி அக்ஷரம் அவ்யக்தம்
தேஷாம் கே யோகவித்தமா: || (472)

பகவான் சொல்லுகிறார்: என்னிடம் மனத்தை நாட்டி, எப்போதுந் தியானத்தில் உறவு கலந்து, பரம சிரத்தையுடன் கூடி, என்னை வழிபடுவோர் யாவரோ, அவர்களை சிறந்த யோகயுக்தர்கள் என்று நான் மதிக்கிறேன்.

மயி ஆவேஸ்ய மநோ யே மாம்
நித்யயுக்தா உபாஸதே |
ஸ்ரத்தயா பரயோபேதா:
தே மே யுக்ததமா மதா: || (473)

இனி, ஐம்புலன்களையும் அறவேயடக்கிக் கருதற்கரிதும், எங்கும் நிறைந்ததும், குணக்குறி யற்றதும், என்றுமுள்ளதும், அழிவில்லாததும் அசைவில்லாததுமான, கூடஸ்த (உறுதிகொண்ட) நிராகார பிரம்மத்தை, உபாசனை செய்பவர், (அந்தப்பிரம்மத்தையே தம்முளும் அனைத்துளுங் கண்டு) அனைத்திலும் ஸமபுத்தியுடையோராய், ஆருயிர்க்கெல்லாம் நலமே வேண்டுவோராகிய அவர்களும் என்னையே அடைகின்றனர்.

யே து அக்ஷரம் அநிர்தேஶ்யம்
அவ்யக்தம் பர்யுபாஸதே |
ஸர்வத்ரகம் அசிந்த்யம் ச
கூடஸ்தம் அசலம் த்ருவம் ||
ஸம்நியம்ய இந்த்ரியக்ராமம்
ஸர்வத்ர ஸமபுத்தய: |
தே ப்ராப்னுவந்தி மாமேவ
ஸர்வபூத ஹிதேரதா: || (454, 475)

எனின் அவ்யக்தபிரம்மத்தில் ஈடுபட்டோர்க்கு, சிரமம் அதிகம்; ஏனெனில், தேகாபிமானிகள் அவ்யக்த மார்க்கமடைவது மிகக் கடினம்.

க்லேஶ: அதிகதரஸ் தேஷாம்
அவ்யக்தாஸக்த சேதஸாம் |
அவ்யக்தா ஹி கதிர் து:கம்
தேஹவத்பி ரவாப்யதே || (476)

தற்போதம், தேகாத்ம புத்தி, ஒழிய அவர்கள் பல விதமான அடக்கு முறைகளை விதித்துக்கொள்ளவேண்டியிருக்கிறது; அப்படித் தன்னைச் சூனியமாக்கி, வாழ்வினின்று ஓடவேண்டாம். கீதை மிக எளிதம், விரைவும், இயல்பிற் கேற்றதுமான பூரண இன்பத்திற்கே அன்புவழி காட்டுகிறது. எல்லாம் வாஸுதேவன் என்று உள்ளும் புறமும் உணர்ந்து, உறவு கலந்தால், அவனுடைய அனந்த ஜோதி நம்முட் பாய்ந்தொளிரும். நமது செயல்களெல்லாம் புருஷோத்தம வேள்வியாகும்.

"பார்த்தா, என்னையே பரமாகக் கருதி, செயல்களையெல்லாம் எனக்கே அர்ப்பணித்து, மாறு யோகத்தால் என்னையே (தைலதாரை போன்று) என்றுந் தியானோபாசனைசெய்து, சித்தத்தை என்

விலேயே புகுத்திய அன்பரை, மரண ஸம்ஸாரக் கடலினின்று விரைவில் கரையேற்றுகிறேன்.

யே து ஸர்வாணி கர்மாணி
மயி ஸம்ந்யஸ்ய மத்பரா: |
அநன்யேன ஏவ யோகேன
மாம் த்யாயந்த உபாஸதே ||

தேஷாம் அஹம் ஸமுத்தர்த்தா
ம்ருத்யு ஸம்ஸார ஸாகராத் |
பவாமி நசிராத் பார்த
மய்யாவேஶித சேதஸாம் || (477, 478)

ஆதலின் என்பால் மனமுறுத்து; புத்தியை என்னுட் புகுத்து; பின்னர் என்னுளே யுறைவாய்; இதில் ஐயமில்லை.''

மய்யேவ மன ஆதத்ஸ்வ
மயி புத்திம் நிவேஶய |
நிவஸிஷ்யஸி மய்யேவ
அத ஊர்த்வம் ந ஸம்ஶய: || (479)

வாழ்வினின்று எனது கடவுளறமான நித்திய சுக வாழ்விற்கு உன்னைக் கைதூக்கிவிடுகிறேன். ஆனால் எப் போதும் அமைதியைக் கெடுக்குஞ் சீழியல்பின் வலிவால் மனம் நிலைப்பதரிது.

''தனஞ்சயா, அப்படி என்னிடஞ் சித்தத்தை உறுதியாகவூன்ற முடியாவிடின், அப்யாஸ யோகத் தால் (அதாவது கேட்டல், நினைத்தல், பஜனை ஜபம், நல்லோர் கூட்டம், முதலியவற்றால் பழகிப்பழகி) என்னையடைய விரும்பு.

அத சித்தம் ஸமாதாதும்
ந ஸக்னோஷி மயி ஸ்திரம் |
அப்யாஸ யோகேன ததோ
மாம் இச்சாப்தும் தனஞ்ஜய || (480)

இந்தப் பயிற்சியும் உனக்கு முடியாவிட்டால், (வினை வேள்வித் தலைவனை) என்பொருட்டே நீ பணி புரிவதை மேலாகக் கருது; எனக்காகவே எல்லாக் காரியங்களையுஞ் செய்தே (வேறொரு ஸாதனமு மின்றியே) நீ சித்திபெறுவாய்.

அப்யாஸேபி அஸமர்தோஸி
மத்கர்ம பரமோ பவ |
மதர்தமபி கர்மாணி
குர்வன் ஸித்திம் அவாப்ஸ்யஸி || (481)

கடவுளைக் கருதியே எக்காரியத்தையும் செய்தால், செய்கையில் அவன் சிந்தையே தழைத்து, மனத்தின் அலைவு நீங்கி அடக்கமும் ஏகாக்ரமும் உண்டாகிறது.

"இதுவுஞ் செய்யத் திறமையின்றேல், தன்னடக்கத்துடன், எனது யோகத்தைச் சரணடைந்து, எல்லாச் செயல்களின் பயன்களையுந் துறந்திடு!

அத ஏதத் அபி அஸக்தோஸி
கர்தும் மத்யோகம் ஆஸ்ரித: |
ஸர்வகர்மபலத்யாகம்
தத: குரு யதாத்மவான் || (482)

ஏனெனில், (நாமஜபம் முதலிய) பழக்கத்தினும், "(தன்னுட் பிரம்மத்தையுணரும்) ஞானம் உயர்ந்ததே; ஞானத்தினும் (மோனமாக ப்ரம்மாகாரந்

11.

தழைக்க) தியானஞ்செய்வது சிறந்தது; தியானத்திலும், கர்மபலத்யாகம் (வினை, பயன் இரண்டையும் ஆண்டவனுக்கீந்து அவன் கருவியாகவே செயல் புரிதல்) மேலானது; இந்தத் தியாகத்தால் உடனே பரம சாந்தம் நிலவுகிறது.''

ஶ்ரேயோ ஹி ஞானம் அப்யாஸாத்
ஞானாத் த்யானம் விஶிஷ்யதே |
த்யானாத் கர்மபலத்யாக:
த்யாகாத் ஶாந்தி: அனந்தரம் || (483)

# ருய. பக்த லக்ஷணம்

உள்ளது பரமாத்மா எனும் அறிவும், அனைத்தும் அவன் எனுந் தியானமும், எல்லாம் அவன் செயல் என்று அகந்தையற்ற அகத்துறவும், கர்மபல த்யாகத்தால் எய்தி, மனம் அவனுணர்வில் நிலைத்து, அவன் திறத்தையே எதிலுங் கண்டு சாந்தம் எய்துகிறது. இத்தகைச் சாந்தன் எப்படியிருப்பான்? என்ன செய்வான்?

அவன் எவ்வுயிரிடத்தும் வெறுப்புறமாட்டான்; நட்புக் கருணையும் பேணுவான்; யான் எனதென்னுஞ் செருக்கற்றிருப்பான்; சுகதுக்கத்தைச் சமமாய்க் கொள்வான்; பொறுமையுடையான்; என்றுங் களிப்புடையான்; தன்னடக்க முள்ளான்; என் உண்மையில் திடவுறுதிகொண்டான். மனத்தையும் புத்தியையும் எனக்கே ஈந்தோன் (என்னில் மனமார ஈடுபட்டோன்), அத்தகைய யோகியான எனதன்பனே, எனக்கினியான்.

அத்வேஷ்டா ஸர்வபூதானும்
மைத்ர : கருண ஏவ ச |
நிர்மமோ நிரஹங்கார :
ஸமது : க ஸுக : க்ஷமீ ||

ஸந்துஷ்ட : ஸததம் யோகீ
யதாத்மா த்ருடநிஸ்சய : |
மய்யர்பிதமனோபுத்தி :
யோமத்பக்த : ஸ மே ப்ரிய : || (484, 485)

எவனல் உலகோர் வருந்துவதில்லையோ, எவன் உலகால் அஞ்சுவதில்லையோ, எவன் களிப்பு, கலக்கம், அச்சத்தால் விளையும் ஆத்திரங்களினின்று விடுபட்டவனே, அவனே எனக்கினியவன்.

யஸ்மாத் ந உத்விஜதே லோக :
லோகாத் ந உத்விஜதே ச ய : |
ஹர்ஷாமர்ஷ பயோத்வேகை :
முக்தோய : ஸ ச மே ப்ரிய : (486)

எதையும் ஆசையோடு எதிர்பாராதவன் ; உட்புறத்தூயன் ; காரியத் திறலோன், எதிலுஞ் சார்பற்ற உதாஸீனன், கவலையற்றவன், (நான் எனும் அகந்தையுடன் வினைகளைத்) தொடங்குதலற்றோன் ; அத்தகையன்பனே எனக்கினியவன்.

அநபேக்ஷ : ஸுசிர் தக்ஷ :
உதாஸீனே கதவ்யத : |
ஸர்வாரம்ப பரித்யாகீ
யோ மத்பக்த : ஸ மே ப்ரிய : || (487)

களிப்பும், கவலையும் அற்றோன்; அவாவறுத்தோன், நலந்தீ தகற்றினோன்; அத்தகைய பக்திமான் எனக்கினியனாவான்.

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி
ந ஸோசதி ந காங்க்ஷதி |
ஸுபாஸுப பரித்யாகீ
பக்திமான் ய: ஸமே ப்ரிய: || (488)

பகைவர் நண்பர், இசை வசை, தண்மை வெம்மை, இன்பம் துன்பம் அனைத்திலுஞ் சமமாய், எதிலும் பற்றிலான்; பிறர்தரும் புகழ்ச்சியும் இகழ்ச்சியும் சமமாய்க் கருதும் மௌனசீலன்; எது எப்படியெய்தினும், என்றும் உட்களிப்பாளன்; இடப்பற்றில்லான் (எனதென்னும் அகந்தையுடன் எவ்விடமும் வசிக்காதவன்), புத்தியில் நிலைத்தவன்; அத்தகைய பக்திமான் எனக்கினியனாவான்.

ஸம: ஸத்ரௌ ச மித்ரே ச
தத்தா மானாபமானயோ: |
சீதோஷ்ண ஸுகது:கேஷு
ஸம: ஸங்க விவர்ஜித: ||

துல்யநிந்தாஸ்துதிர்மௌனி
ஸந்துஷ்டோ யேன கேனசித் |
அநிகேத: ஸ்திரமதி:
பக்திமான் மே ப்ரியோ நர: (489, 490)

யான் மேற்சொன்னபடி, என்னையே தலைக்கொண்டு, சிரத்தாவான்களாய், இந்த தர்மாமிருதத்தைப் போற்றி நிற்கும் அன்பர் எனக்கு மிகவும் இனியராவர்.

**யே து தர்ம்யாம்ருதமிதம்**
**யதோக்தம் பர்யுபாஸதே |**
**ஶ்ரத்ததானா மத்பரமா :**
**பக்தா : தே அதீவ மே ப்ரியா :** (491)

*அத்தகையன்பனுக்கு, எங்குமுள்ள இறைவனிடமே விருப்பன்றி வேறெதிலுந் தன்னலப்பற்றிராது. சமதை, நிராசை, அகர்தையின்மை, அகத்துறவு-இவையே உள்ளன்பின் அடிப்படை. இவ்வன்புடன் கடவுளுறவு பேணி, அவனின்பத்தில் அவனுக்காக, அவன் மயமான உயிர்களை வெறுக்காது, அறிவுடன் வாழ்வதே அறம்; இயல்பான ஜீவதர்மம். கடவுளுணர்வில் என்றும் நம்மை வாழச் செய்வதே நித்திய தர்மம்; அதுவே அனைத்தையும் அவனாகப் பேணி அன்புசெய்யும் ஸமதர்மம். அறமுதல்வன் கடவுள்; எல்லையற்ற அவனை அன்பாலடைந்து, சரண்புகுந்து, கலந்து இன்புற வாழ்வதே நமது ஜீவனை எல்லையற்ற கடவுளறத்தில் இன்புறச் செய்யும்.*

**கீதா யோகம்**
**(பன்னிரண்டாம் அத்தியாயம்)**
**இரண்டாம் பாகம்**
**பக்தி யோகம்**
**முற்றிற்று.**

## ருக. க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன்

இதுகாறுங் காட்டிவந்த ஞான பக்தி கர்மயோகத்தை விரிவாக உரைப்பதுடன், இனிவரும் ஆறு அத்யாயங்களிலும் புருஷோத்தமன் (பரப்ரம்மம்), ஜீவன், ப்ரகிருதி, அதன் முக்குணங்கள், அவற்றைத்தாண்டி குணாதீதனாகிக் கடவுளியலுக்கு உயரும் வழிமுதலியவையே விளக்கப்படுகின்றன. அர்ஜுனன் இன்னுந் தெளிவாக வினவுகிறான்:

"கேசவா! ப்ரகிருதி (இயற்கை), புருஷன் (ஆன்மா), க்ஷேத்ரம் (நிலம்), க்ஷேத்ரக்ஞன் (நிலமறிவோன்), ஞானம் (அறிவு), ஞேயம் (அறிபொருள்), இவற்றையறிய விரும்புகிறேன்."

ப்ரக்ருதிம் புருஷம் சைவ
க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞ மேவ ச |
ஏதத் வேதிதும் இச்சாமி
ஞானம் ஞேயம் ச கேஸவ || (492)

கண்ணன் விரிவாயுரைக்கிறான்:

"குந்திபுத்ரா! இத்தேகமே க்ஷேத்ரம் எனப்படுகிறது. (உள்ளிருந்து) இதை யறிபவனை க்ஷேத்ரக்ஞன் என்று தத்துவஞானிகள் சாற்றுகிறார்கள்.

இதம் ஸரீரம் கௌந்தேய
க்ஷேத்ரம் இதி அபிதீயதே |
ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு:
க்ஷேத்ரக்ஞ இதி தத்வித: || (493)

ஜீவனின் வினைக்களமாயிருக்கும் இவ்வுடல், நிலம், நிலதேகம் மட்டுமன்று; க்ஷேத்ரக்ஞனைச் சூழ்ந்திருக்கும் இயற்கை மதில்களனைத்துஞ் சேர்ந்தே க்ஷேத்ரம்,

"பாரதா, க்ஷேத்ரங்களனைத்திலும் நானே க்ஷேத்ரக்ஞன் என்றறி. க்ஷேத்ரம் எது, க்ஷேத்ரக்ஞன் யார் என்றறியும் அறிவே அறிவு என்பது என் மதம்.

க்ஷேத்ரஞம் சாபி மாம் வித்தி
ஸர்வ க்ஷேத்ரேஷு பாரத |
க்ஷேத்ரக்ஷேத்ரஞயோர்ஞானம்
யத் தத் ஞானம் மதம் மம || (494)

அந்த க்ஷேத்ரம் யாது, எத்தகையது? எத்தகை வேறுபாடுடைத்து? யாங்கணுற்றது? எதன் வடிவு? க்ஷேத்ரக்ஞன் யார்? எத்தகையோன்? என்பவற்றைச் சுருங்கக் கேள்.

தத்க்ஷேத்ரம் யச் ச யாத்ருக் ச
யத்விகாரி யதஸ்ச யத் |
ஸ ச யோ யத்ப்ரபாவஸ்ச
தத்ஸமாஸேன மே ஸ்ருணு || (495)

இந்த க்ஷேத்ர-க்ஷேத்ரக்ஞ தத்துவத்தைப் பற்றிப் பலவகையாகப் பல்வேறு வகையான வேத மந்திரங்களிலும், யுக்திக்குப் பொருத்தமாக நன்கு நிச்சயிக்கப்பட்ட ப்ரம்மஸூத்ர பதங்களிலும், ரிஷிகளாற் சொல்லப்பட்டுள்ளது.

ருஷிபிர் பஹுதா கீதம்
சந்தோபிர் விவிதை: ப்ருதக் |
ப்ரஹ்மஸூத்ர பதைஸ்சைவ
ஹேதுமத்பிர் விநிஸ்சிதை: (496)

---

* XIII க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாகயோகம்

மஹாபூதங்கள் (வான், காற்று, தீ, நீர், மண், முதலியவற்றின் சூக்ஷ்ம பாவனை), அஹங்காரம், புத்தி, அவ்யக்தம் (மூலப்ரக்ருதி, முக்குணமாயை) தசேந்திரியங்கள் (உடல், நாக்கு, மூக்கு காது, கண் ஆகிய ஞானேந்திரியங்களும், வாய், கை, கால், குதம், குறி ஆகிய கர்மேந்திரியங்களும்) மனம், பஞ்சேந்திரிய விஷயங்களான தன்மாத்திரைகள் (ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்) ஆகிய உச தேக தத்துவங்களும் க்ஷேத்ர வடிவு.

மஹாபூதானி அஹங்காரோ
புத்தி ரவ்யக்தம் ஏவ ச |
இந்த்ரியாணி தசைகம் ச
பஞ்ச ச இந்த்ரிய கோசரா: (497)

விருப்பு வெறுப்பு, இன்ப துன்பம், ஊனுடல் சேதனம் (உணர்வு), திண்மை இவை சுருக்கமாக, க்ஷேத்திரத்தின் விகாரம் எனச் சொல்லப்பட்டன.

இச்சா த்வேஷ: ஸுகம் து:கம்
ஸங்காதஶ் சேதனா த்ருதி: |
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேன
ஸவிகாரம் உதாஹ்ருதம் || (498)

*ஈசுவரசக்தியை அவ்யக்தம், 'பிரதானம், மூலப்ரகிருதி, அவ்யாக்ருதம், மாயை என்பர். இதினின்றே புத்தி வடிவமான மகத்தத்துவம் பிறந்தது. மகத் தத்துவத்தினின்று அஹங்காரம் உண்டாயிற்று. ஸாத்வீகாஹங்காரத்தினின்று மனமும், ராஜஸாஹங்காரத்தினின்று பதின் பொறிகளும், தாமஸாஹங்காரமான பூதாதிகளின் விகாரத்தால் தன்மாத்திரைகளும் பிறந்தன.*

## ருஉ. ஞானம், ஞேயம்

ஞானமாவ தென்ன? தற்புகழ்ச்சியின்மை, இடம்ப மின்மை, அஹிம்ஸை, பொறுமை, நேர்மை, குரு ஸேவை, உட்புறத் தூய்மை, உட்கரணத்தில் உறுதி, தன்னடக்கம்;

அமானித்வம் அதம்பித்வம்
அஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் |
ஆசார்யோபாஸனம் ஶௌசம்
ஸ்தைர்யம் ஆத்மவிநிக்ரஹ: || (499)

இந்திரிய விஷயங்களில் வைராக்யம் (புலன் பொறிகளிற் சிக்காமை), அகந்தை யின்மை, பிறப்பு இறப்பு, மூப்பு, நோய், துயர், குற்றம் இவற்றைச் சிந்தித்துப் பார்த்தல், பற்றின்மை;

இந்த்ரியார்தேஷு வைராக்யம்
அனஹங்கார ஏவ ச |
ஜன்ம ம்ருத்யு ஜரா வ்யாதி
து:க தோஷானு தர்ஸனம் || (500)

மனைவி மக்கள் வீட்டினிடம் எனதென்னும் அபிமானமின்மை; விரும்பியதுறினும், விரும்பாத துறினும் ஸமசித்தங் கொள்கை;

அஸக்தி: அனபிஷ்வங்க:
புத்ரதாரக்ருஹாதிஷு |
நித்யம் ச ஸமசித்தத்வம்
இஷ்டாநிஷ்டோபபத்திஷு || (501)

பரமாத்மாவான என்னிடம், நிலைத்த தியான யோகத்தால் மாறா வுள்ளன்பு வைத்தல், தூய தனி யிடங்களில் வசித்தல், (வீண்வாதமும், விஷயா ஸக்தியுமுள்ள) ஜனக் கும்பலை விரும்பாமை;

மயி ச அனன்யயோகேன
பக்தி: அவ்யபிசாரிணீ |
விவிக்ததேஸ ஸேவித்வம்
அரதிர் ஜனஸம்ஸதி || (502)

அத்யாத்ம ஞானத்தில் நிலைத்திருக்கை, 'எல்லாம் அவன்' எனுந் தத்துவஞானப் பொருளின் காட்சி—ஆகிய இவையே ஞானமென்க; இதற்கு மாறானது அஞ்ஞானம் எனப்படும்.

அத்யாத்ம ஞான நித்யத்வம்
தத்வ ஞானார்த தர்ஸனம் |
ஏதத் ஞானம் இதி ப்ரோக்தம்
அஞானம் யத் அத: அன்யதா || (503)

ஞேயமாவ தென்ன? "அறிதற்குரிய தெதுவோ, எதையறிந்தால் அமுதநிலை யெய்துமோ, அதைச் சொல்லுதும்: அதுவே ஆதியற்ற பரப்ரஹ்மம்; அது ஸத்தென்பதும், அஸத்தென்பது மில்லை."

ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி
யத் ஞாத்வா அம்ருதம் அஸ்னுதே |
அனாதிமத் பரம் ப்ரஹ்ம
ந ஸத் தத் ந அஸத் உச்யதே || (504)

"இல்லையென் றறிவோருக்கு பிரம்மம் இன்மையாகிறது; உண்டென் றுணர்வோருக்கு உண்மையாகிறது. முதலில் இது அஸத்தாயிருந்தது; அதனின்றே ஸத்து

உதித்தது; அது தன்னைத் தானே உண்டாக்கிக் கொண்டது;'' என்பது தைத்திரீய வாக்கு: பிரம்மன் ஸத் அஸத் இரண்டிலுங் கட்டுப்பட்டவனல்லன்; தனியேனும், சேர்ந்தேனும் அவன் இரண்டுமாவான்; இரண்டும் அல்லனுமாவான். அவன் நித்தியன்; பரவடிவுமாவான், பார் வடிவுமாவான், உயிர் வடிவுமாவான். அசேதனமான தூலம் முதல், உயிர், மனம், விக்ஞானம், ஆனந்தம் முதலிய சேதனப்படிக ளனைத்திலும் அவன் உள்ளான். அவனை "அது'' (தத்) என்று வேதங் குறிக்கிறது.

"அது எங்குங் கைகால், எங்கும் விழி, எங்கும் வாய், எங்குந் தலை, எங்குஞ் செவி விரிந்துள்ளது; அது உலகெலாம் அளாவி நிற்கிறது.''

அனைத்தும் அதுவாகவேயுள்ளது: அது காதின்றிக் கேட்டும், எல்லாச் செவிகளும் அதன் சக்தியாற் கேட்கின்றன. இப்படியே புலன்களிற் கட்டுப்படாமல் அது அனைத்தையும் உணரும்; அது மனத்தைக் கடந்தது.

ஸர்வத: பாணிபாதம் தத்
ஸர்வதோऽக்ஷி ஶிரோமுகம் |
ஸர்வத: ஶ்ருதிமத் லோகே
ஸர்வம் ஆவ்ருத்ய திஷ்டதி || (505)

அது சர்வேந்திரிய குணங்களோடொளிர்வது; எனினும், சர்வேந்த்ரியங்களுக்கும் புறம்பானது; பற்றற்றது; (தனது சக்தியின் ஆடல்) அனைத்தையுந் தாங்குவது, குணமற்றது; குணங்களை யுண்பது.

ஸர்வேந்த்ரிய குணாபாஸம்
ஸர்வேந்த்ரிய விவர்ஜிதம் |
அஸக்தம் ஸர்வப்ருச் சைவ
நிர்குணம் குணபோக்த்ரு ச || (506)

பூதங்களுக்கு உள்ளும் புறமுமானது; அசைவன அசையாதன இரண்டுமானது; அது நுட்பமானதால் அறிவிற் கெட்டாதது; (அறிஞர்க்கு) அருகிலுள்ளது; (தெளிவில்லாருக்குத்) தூரத்தில் இருப்பது.

பஹிரந்தஶ்ச பூதாநும்
அசரம் சரமேவ ச |
ஸூக்ஷ்மத்வாத் தத் அவிஜ்ஞேயம்
தூரஸ்தம் ச அந்திகே ச தத் || (507)

அறிதற்குரிய பிரம்மம் (மஹாகாசம்போல்) பகுப்பற்றது (ஏகமாய் நிற்பது); எனினும், (கடாகாசம்போல்) சராசர வஸ்துக்களிடம் தனித்தனியாகப் பிரிவுற்றதுபோலிருப்பது; பூத வடிவுகளைத் தாங்குவது அதுவே. அனைத்தையும் விழுங்குவதும் அனைத்தையும் உண்டாக்குவதும் அதுவே.

அதனின்றே அனைத்தும் எழுந்து, அதன் சக்தியினாலேயே தாங்கப்பெற்று, அதனுடைய ஏகத்வத்திலேயே கலந்து, மீண்டும் அதன் ஆனந்தத்தினின்றே அரும்புகின்றன.

அவிபக்தம் ச பூதேஷு
விபக்தம் இவ ச ஸ்திதம் |
பூதபர்த்ரு ச தத் ஜ்ஞேயம்
க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச || (508)

அந்த ப்ரம்மமே ஒளிக்கெல்லாம் ஒளி; அது இருளிற்குப் புறம்பானது; அதுவே அறிவு; அறிதற்குரியது; அறிவாற் கிடைப்பது; அனைவருள்ளத்தும் கோயில் கொண்டிருப்பது.

ஜ்யோதிஷாம் அபி தத் ஜ்யோதி :
தமஸ : பரம் உச்யதே |
ஞானம் ஞேயம் ஞானகம்யம்
ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம் || (509)

இவ்வாறு க்ஷேத்திரம், ஞானம், ஞேயம் மூன்றுஞ் சுருக்கியுரைக்கப்பட்டன ; இதை யறிந்த என தன்பன் எனது தன்மை யெய்துகிறான்.

இதி க்ஷேத்ரம் ததா ஞானம்
ஞேயம் சோக்தம் ஸமாஸத : |
மத்பக்த ஏதத் விஞாய
மத்பாவாய உபபத்யதே || (510)

அறிவும் அன்புமே முக்தி ரகசியம். இந்தப் பரப்ரம்மன், புருஷோத்தமன் தனது சிருட்டிகளுக்குக் காரணமான புருஷப்பிரகிருதிகளைத் தாங்கி அவற்றிற்கு மேம்பட்டிருப்போன்.

## ருங. புருஷன், பிரகிருதி

" ப்ரகிருதி (க்ஷேத்ரம், இயற்கை, முக்குண மாயை); புருஷன் (ஜீவாத்மா, க்ஷேத்ரக்ஞன்) இரண்டும் அனாதி என்றறி—(அவை நித்தியப்ரம்மனின் இரண்டு கூறுகள்). விருப்பு வெறுப்பான விகாரங்களும், முக்குணங்களும் பிரகிருதியிலேயே பிறப்பதென்றுணர்.

ப்ரக்ருதிம் புருஷம் சைவ
வித்தி அனாதீ உபாவபி |
விகாரான் ச குணான் ச ஏவ
வித்தி ப்ரக்ருதி ஸம்பவான் || (511)

(ஐம் பூதங்களும், தன் மாத்திரைகளு மான) காரியம், (மனம், புத்தி, அஹங்காரம், ஞான கர்மேந்திரியங்களான,) கரணம், செயல் இவற்றிற்கு ப்ரகிருதியே மூலமென்பர்; இதில் அமர்ந்த புருஷன் சுக துக்கங்களை அனுபவிக்க ஏதுவென்பர்.

கார்ய காரண கர்த்ருத்வே
ஹேது: ப்ரக்ருதி ருச்யதே |
புருஷ: ஸுகது:கானும்
போக்த்ருத்வே ஹேதுருச்யதே || (512)

புருஷன் பிரகிருதியிலமர்ந்து, பிரகிருதியிலுண்டாகும் குணங்களை யனுபவிக்கிறான். இந்தக் குணப் பற்றே, ஜீவன் (பலதிறப்பட்ட) நற்பிறப்பும், தீப்பிறப்பும் எய்தக்காரணம்.

புருஷ: ப்ரக்ருதிஸ்தோஹி
புங்க்தே ப்ரக்ருதிஜான் குணன் |
காரணம் குணஸங் கோऽஸ்ய
ஸத் அஸத் யோனி ஜன்மஸு || (513)

*தேகேந்திரியங்களான காரிய காரண வடிவாயுள்ள இயற்கையில் நானெனும் அதன்மைப் பற்றால்தான் ஜீவன் இடர்ப்படுகிறான். தனக்கும் மேற்பட்ட புருஷோத்தமனை முற்றஞ் சரணடைந்து அவனுடைய செயல்வடிவாகவே இயற்கையைக் காணவேண்டும். அப்போது ஜீவன் பரமாத்மாவுடன் ஒன்றி அவன்மய மாகிறான்;*

அந்நிலையில், "இந்த உடலில் புருஷன் இருந்தும் (முக்குணங்களுக்கு) அதீதனாகவும் (பர:), ப்ரகிருதியின் செயல்களுக்குச் சாட்சியாகவும், (அவனுடைய ஆடலை) அனுமதிக்கிறவனாகவும், அதை வகித்துத்

தாங்குகிறவனுகவும், அதன் பயன்களைப் புசிப்போனுகவும் உள்ளான்; அவன் மஹேசுரன் பரமாத்மா எனப்படுகிறுன்.

உபத்ரஷ்டா அனுமந்தா ச
பர்தா போக்தா மஹேஸ்வர : |
பரமாத்மேதி சாப்யுக்தோ
தேஹே அஸ்மின் புருஷ : பர : || (514)

*அவன் இயற்கையின் செயல்களில் அகந்தைப் பற்றுடன் தோய்தலில்லை; அதை அகந்தையுடன் தடுப்பதுமில்லை. அவன் சுத்த நித்ய புத்த முத்தனுகத் தாக்கற்றிருக்கிறுன்.*

இவ்வாறு புருஷனையும், குணங்களுடன் கூடிய பிரகிருதியையும் உள்ளபடியறிபவன், எவ்விதம் வாழினும், மறுபிறப்புறுன்.

*அவன் பிறப்பிறப்பற்ற பரமாத்ம நிலைபெறுகிறுன். இயற்கையின் செயல்களில் அகந்தைப்பற்றெழிக்கிறுன். அவை இவனை எவ்வகையிலுங் கட்டுப்படுத்துவதில்லை.*

ய ஏவம் வேத்தி புருஷம்
ப்ரக்ருதிம் ச குணை : ஸஹ |
ஸர்வதா வர்த மானேடபி
ந ஸ பூயோடபிஜாயதே || (515)

## ருச. பரமாத்ம சித்தி

*ஜீவன் கலந்து நின்று வாழவேண்டிய பரமாத்மாவை எப்படி அறிவது?*

"சிலர், பரமாத்வை சுத்த ஸூக்ஷ்மபுத்தியால் தியானித்து இதயத்தில் காண்கின்றனர்; சிலர், (ஆத்மாவைப் பிரகிருதியினின்று வேறுபடுத்தி) ஞானயோகத்தால் காண்கின்றனர்; இன்னுஞ் சிலர் (இச்சை, மனம், இதயம், காரியம், பயன் அனைத்தை யும் பரமாத்மனுக்கே வேள்வியாக்கும்) கர்மயோகத் தால் காண்கின்றனர்.

த்யானேன ஆத்மனி பஶ்யந்தி
கேசித் ஆத்மானம் ஆத்மனு |
அன்யே ஸாங்க்யேனயோகேன
கர்ம யோகேனசாபரே || (516)

இவ்வகையறியாத வேறு பிறர், தத்வ ஞானிக ளிடங் கேட்டு வழிபடுகின்றனர்; அப்படிக் கேட்ட உபதேசப்படி யொழுகுவராயின், அவர்களுஞ் சாவைத் தாண்டுவர்."

*அகர்தை மடமையில் வாழ்வதே சாவு; தெய்வ இயல் பில், கடவுளுணர்வில் முயன்றநின்று வாழ்வதே இறவாமை.*

அன்யே து ஏவம் அஜானந்த:
ஶ்ருத்வா அன்யேப்ய: உபாஸதே |
தேऽபி ச அதிதரந்தி ஏவ
ம்ருத்யும் ஶ்ருதிபராயணு: (517)

"பரதரேறே! தாவர ஜங்கமப் பொருள்களில், உற்பத்தியாகும், க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ ஸம்யோகத்

தால் ( பிரகிருதி புருஷச்சேர்க்கையால் ) எல்லாம் என்பதை அறிந்துகொள்.

யாவத் ஸம்ஜாயதே கிஞ்சித்
ஸத்வம் ஸ்தாவரஜங்கமம் |
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகாத்
தத் வித்தி பரதர்ஷப || (518)

இப்படிப் புருஷப் பிரகிருதி சம்மந்தத்தால் உண்டான அனைத்திலும், எல்லாவுயிர்களிலும் ஸமமாய் இறைவன் அமர்ந்துளான்; அழிவனவற்றில் அழியாதுள்ளான்; அப்படி அவனைக் காண்போனே நற்காட்சியாளன்.

ஸமம் ஸர்வேஷு பூதேஷு
திஷ்டந்தம் பரமேஸ்வரம் |
விநஸ்யத்ஸு அவிநஸ்யந்தம்
ய: பஸ்யதி ஸ: பஸ்யதி || (519)

அனைத்திலும் இறைவன் சமமாய் அமர்ந்துளான்; அப்படி அவனை ஒன்றாய்க் காண்போன், தன்னைத்தானே வருத்துவோனல்லன். அதனால் அவன் உயர்ந்த அத்யாத்ம நிலையெய்துகிறான்.

தன்னிலும் அனைத்திலும் ஒரு நோக்குடன், ஒரு இறைவனையே அவன் கண்டு கலக்கிறான். இந்த ஆத்ம வுறவால் ஜீவாத்மா விசுவாத்மாவாக விரிவெய்துகிறது.

ஸமம் பஸ்யன் ஹி ஸர்வத்ர
ஸமவஸ்திதம் ஈஸ்வரம் |
ந ஹினஸ்தி ஆத்மனா ஆத்மானம்
ததோ யாதி பராம்கதிம் || (520)

13.

"எல்லாவகையிலுஞ் செயல்களை இயற்றுவது இயற்கை; தான் கர்த்தாவன்று என்பதை எவன் காண்கிறானோ, அவனே உண்மைக் காட்சியாளன்.

ப்ரக்ருத்யா ஏவ ச கர்மாணி
க்ரியமாணானி ஸர்வஸ: |
ய: பஶ்யதி ததா ஆத்மானம்
அகர்தாரம் ஸ: பஶ்யதி || (521)

தனித்தனியாய்க் காணும் பூதராசிகள் (பரமாத்ம சக்தியான) ஒரே ஆதாரமுடையன; இதை நன்கறிந்தவன், அந்தப் பரமாத்ம சக்தியினின்றே பிரபஞ்சம் விரிந்ததென் றறிகிறான். அந்தப் (பரமாத்மாவின் எங்கும் நிறைவே அனைத்தின் விரிவெனக் காண்கிறான்;) அப்போதே எங்கும் நிறைந்த சச்சிதானந்த பரப்ரம்மத்தை உள்ளும் புறமும் பொருந்துகிறான்.

யதா பூதப்ருதக்பாவம்
ஏகஸ்தம் அனுபஶ்யதி |
தத ஏவ ச விஸ்தாரம்
ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா || (522)

இந்த ப்ரம்மம் ஆதியற்றது; குணமற்றது; குறைதீதம்; ஆதலால் இது அழிவற்ற பரமாத்மா; இது உடலுள்ளிருப்பினும், தான் எதையுஞ் செய்வதுமில்லை; எதிலும் பற்றுறுவது மில்லை.

அனாதித்வாத் நிர்குணத்வாத்
பரமாத்மா அயம் அவ்யய: |
ஶரீரஸ்த: அபி கௌந்தேய
ந கரோதி ந லிப்யதே || (523)

ஆகாசம் எங்கும் நிறைந்தது; தனது நுண்மையால், எதிலும் பற்றற்றுள்ளது; அதுபோலவே, உடல்களனைத்திலுங் கோயில் கொண்டிருந்தும், நுட்பமான ஆத்மா எதிலும் பற்றுறுவதில்லை.

யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யாத்
ஆகாஸம் ந உபலிப்யதே |
ஸர்வத்ர அவஸ்திதோ தேஹே
ததாத்மா ந உபலிப்யதே || (524)

ஸூரியன் ஒருவன் இவ்வுலகனைத்தையும் ஒளியுறுத்துகிறான்; அதுபோலவே, அறிவோனாகிய க்ஷேத்ரியான தேகி, எல்லா க்ஷேத்ரங்களையும் ஒளிர்விக்கிறான். (ஒரு ஆத்மாவினாலேயே எல்லாப் பொருள்களும் நிறைந்தொளிர்கின்றன.)

யதா ப்ரகாஸயதி ஏக:
க்ருத்ஸ்னம் லோகம் இமம் ரவி: |
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்னம்
ப்ரகாஸயதி பாரத || (525)

இவ்வாறு, க்ஷேத்திரத்திற்கும், க்ஷேத்ரக்ஞனுக்குமுள்ள பேதத்தையும், பிரகிருதியின் (பற்றினின்று) விடுபடும் வழியையும் அறிவுவிழிகளால் உள்ளபடியறிவோர், பரம்பொருளை யடைகின்றனர்."

க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோ ரேவம்
அந்தரம் ஜ்ஞானசக்ஷுஷா |
பூதப்ரக்ருதி மோக்ஷம் ச
யே விதுர் யாந்தி தே பரம் || (526)

க்ஷேத்ரம் முக்குண விகாரம்; மாற்றமும் அழிவு முற்றது; க்ஷேத்ரக்ஞன் சேதனன்; அவிநாசி, அவிகாரி, ஆன்மா என்று ஞானியறிகிறான்; அவன் எப்போதும் நித்தியப் பொருளில் நிலைத்து வாழுகிறான்.

கீதா யோகம்
பதிமூன்றாம் அத்தியாயம்
க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ
விபாக யோகம்
முற்றிற்று.

## * ருரு. பரம ஞானம்

"முக்குணவியற்கையிற் சிக்காதவன்; குணாதீதன்; ஆன்மா; நித்ய முக்தன்; பிறப் பிறப்பைக் கடந்த பரமாத்ம ஸ்வரூபனே நான்." என்ற கடவுளறிவுடன், உள்ளும் புறமும் பிரம்மாலிங்கனத்துடன் வாழ்வதே இறவாமை! இறவாமை யென்பது ஊனுடலை அழியாது சுமத்தல் என்பதன்று: புருஷப்ரகிருதிக்கப்பாலுள்ள புருஷோத்தம ஞானத்தால் "நான் சுத்த முத்த சமத்வ நித்யானந்தன்" என்றுணர்வதே அமர வாழ்வு. குணாதீதனாகி, புருஷோத்தம ஞானத்தில் வாழும் வகையை இனிக் கீதை உபதேசிக்கிறது.

"மீண்டுமுரைக்கிறேன், அறிவுகட்கெல்லாம் மிகவுமுயர்ந்த பரமஞானத்தை; அதைத் தெளிந்து, முனிவரெல்லாம் இங்கேயே பரமசித்தி யெய்தியுள்ளனர்.

பரம்பூய: ப்ரவக்ஷ்யாமி
ஞானானாம் ஞானம் உத்தமம் |
யத் ஞாத்வா முனய: ஸர்வே
பராம்ஸித்திம் இதோகதா: || (527)

இந்த ஞானத்தை மேற்கொள்வோர் எனது தர்மத்தை யெய்துவர் (கடவுளறத்தில் கடவுட் சமத்துவத்தில் வாழுவர்) படைப்பில் பிறவார்; ஊழியில் அழியார்.

*ஏனெனில், அவர்கள் அழிவற்ற பரமாத்மாவுடன், அவனுடைய சுத்த முக்த ஸமத்வ நித்திய தர்மத்தில் வாழுகின்றனர். அவர்கள் பிறப் பிறப்பின் கட்டற்றவர்கள்.*

---

* XIV குணத்ரய விபாக யோகம்.

இதம் ஞானம் உபாஶ்ரித்ய
மம ஸாதர்ம்யம் ஆகதா: |
ஸர்கே அபி ந உபஜாயந்தே
ப்ரலயே ந வ்யதந்தி ச || (528)

கடவுட்டன்மையில் வாழ்வதே உண்மையறம்; தெய்வ வித்தினின்றே இயற்கை நிலத்தில் உயிர்மரம் தழைத்தது. முக்குண மாயையான இப்பெரிய இயற்கையே பிறப்பிடம், கருநிலம். அது மாஹபூதம்; அஹங்காராதிகளுக்குக் காரணமாதலின் மஹத் எனப்பட்டது; காரிய விருத்திக்கு எதுவாயிருக்கும் இப்பிரகிருதியைச் சுருதிகள் ப்ரம்ம மாகவே கூறுகின்றன.

பாரதா! மஹத்ப்ரம்மம் (முக்குணமாயை) எனது கருநிலம்; எனது சேதனவிதையை அதன் கருவில் இடுகிறேன்; அதனின்றே அனைத்துயிர் களும் தோர்ந்தன.

மம யோனிர் மஹத்ப்ரஹ்ம
தஸ்மின் கர்பம் ததாம்யஹம் |
ஸம்பவ: ஸர்வபூதானாம்
ததோ பவதி பாரத || (529)

கருக்களனைத்திலும் பிறக்கும் பலவகையான உயிர்வடிவுகளுக்கெல்லாம் மஹத் ப்ரம்மமே தாய்; நானே வித்தூன்றிப் பிறப்பிக்குந் தந்தை."

ஸர்வ யோனிஷு கௌந்தேய
மூர்தய: ஸம்பவந்தி யா: |
தாஸாம் ப்ரஹ்ம மஹத் யோனி:
அஹம் பீஜப்ரத: பிதா || (530)

பரமாத்மாவே அம்மையப்பன்; அவனே இயற்கையில் உயிர்விதையை நடுவோன்; தனது தளியை, அறிவை, சேதனத்தை அசேதனமான ப்ரகிருதியில் இட்டு, அனைத்தையும் உண்டாக்குவதால், ஜீவராசிகளனைவரும் அவன் மயமே. அனைவருங் கடவுள் மைந்தரே, தெய்வான் மாக்களே; ஆன்மா எதிலுங் கட்டுப்படுவதில்லை; ஆனால் அவனை உடலுடன் பிணிப்பதெது?

"வலிய தோளனே! பிரகிருதியி லுண்டான ஸத்வம், ரஜஸ், தமஸ் (ஒண்மை, வேட்கை, மயக்கம்) என்னும் முக்குணங்களே அழிவற்ற ஆத்மாவை உடலோடு பிணிக்கின்றன.

ஸத்வம் ரஜ: தம: இதி
குண: ப்ரக்ருதி ஸம்பவா: |
நிபத்னந்தி மஹாபாஹோ
தேஹே தேஹினம் அவ்யயம் || (531)

பாவமற்றோய், அவற்றில் சத்வம் தூய தன்மையால் ஒளியுறுத்துவது; பிணியற்றது; இன்பம், அறிவு இவற்றின் பற்றால் இது தேகியைக் கட்டுப்படுத்துகிறது.

தத்ர ஸத்வம் நிர்மலத்வாத்
ப்ரகாஸகம் அநமயம் |
ஸுகஸங்கேன பத்நாதி
ஞானஸங்கேன சானக || (532)

அர்ஜுனா, ரஜோகுணம் ஆசைவடிவு; அது வேட்கையின் சேர்க்கையாற் பிறப்பது; அது வினைப்பற்றால் ஆன்மாவைப் பிணிக்கிறதென்றறி.

ரஜோ ராகாத்மகம் வித்தி
த்ருஷ்ணஸங்கஸமுத்பவம் |
தந்நிபத்நாதி கௌந்தேய
கர்ம ஸங்கேந தேஹினம் || (533)

*பாரதா! தேகாபிமானிகளை மயக்குந் தமோ குணம் அறியாமையிற் பிறப்பது; தவறு, தாமதம், தூக்கம் இவற்றால் அது தேகியைக் கட்டுப்படுத்து கிறது.*

தமஸ்து அஜ்ஞானஜம் வித்தி
மோஹனம் ஸர்வதேஹினம் |
ப்ரமாதாலஸ்ய நித்ராபி:
தந் நிபத்நாதி பாரத || (534)

*பாரதா! ஸத்வம் இன்பத்திலும், ரஜஸ் வினை களிலும் பற்று விளைவிக்கின்றன; தமஸ் அறிவை மறைத்து, மயக்கத்தால் ஜீவனைத் தளைக்கிறது.*

ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி
ரஜ: கர்மணி பாரத |
ஜ்ஞான மாவ்ருத்ய து தம:
ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத || (535)

*இம் முக்குணங்களும் அனைவரிடமும் உள்ளன; இன்பம் அறிவு ஒளியாகிய ஸத்வமும், ஆசை செயல் விருப்பம் ஆகிய ராஜஸமும், மயக்கம் தளர்வு ஆகிய தாமத குணமும் ஓரளவிற்கு அனைவரிடமும் உள்ளன; ஆனால் எந்தக் குணம் மற்றை யிரண்டினும் மேலோங்கி யுள்ளதோ அதைக்கொண்டே தன்மை யறியப்படுகிறது.*

*"பாரதா! ராஜஸ தாமத குணங்களையடக்கி ஸத்வம் மேலோங்குகிறது; ஸத்வம் தாமதம்*

இரண்டையும் அடக்கி ராஜஸம் ஓங்குகிறது; ஸத்வம் ராஜஸம் இரண்டையும் அடக்கித் தாமதம் ஓங்குகிறது.

ரஜஸ் தமஸ் சாபிபூய
ஸத்வம் பவதி பாரத |
ரஜ: ஸத்வம் தமஸ்சைவ
தம: ஸத்வம் ரஜஸ்ததா || (536)

இவ்வுடலில், (பொறி புலன் கரணங்களான) எல்லா வாயில்களிலும் ஒளியும், அறிவும் விளங்கும் போது, ஸத்வம் தழைத்தோங்கியதென் றறிக.

ஸர்வத்வாரேஷு தேஹேடஸ்மின்
ப்ரகாஸ உபஜாயதே |
ஞானம் யதா ததா வித்யாத்
விவ்ருத்தம் ஸத்வம் இத்யுத || (537)

பரதரேறே! லோபம் (கொடாமை), முயற்சி, தன்னலத்துடன் வினைத்தொடக்கம், மனச் சஞ்சலம், வேட்கை இவை ராஜஸ மிகையால் விளைகின்றன.

லோப: ப்ரவ்ருத்தி: ஆரம்ப:
கர்மணும் அஸம: ஸ்ப்ருஹா |
ரஜஸி ஏதானி ஜாயந்தே
விவ்ருத்தே பரதர்ஷப || (538)

குருகுலச் செல்வனே! தாமத மிகையால், (புலன், பொறி, கரண்ங்களில்) மடமையிருள், மந்தம், அசட்டை, மயக்கம் இவை விளைகின்றன.

14.

அப்ரகாஸ: அப்ரவ்ருத்திஸ்ச
ப்ரமாதோ மோஹ ஏவ ச |
தமஸி ஏதானி ஜாயந்தே
விவ்ருத்தே குருநந்தன || (539)

ஸத்வம் மேலிட்டிருக்கையில், ஜீவன் உடல் பிரிந்தால், மாசற்ற, நல்லறிவாளரின் உலகை யடைகின்றான்.

யதா ஸத்வே ப்ரவ்ருத்தே து
ப்ரலயம் யாதி தேஹப்ருத் —
ததா உத்தமவிதாம் லோகான்
அமலான் ப்ரதிபத்யதே|| (540)

ராஜஸம் மேலிட்டபோது உடல் நீத்தவன், வினைப்பற்றுடையோரிடையே பிறக்கிறான்; தாமத மேலீட்டில் உடல் பிரிவோன், மூடரிடையே பிறக்கிறான்.

ரஜஸி ப்ரலயம் கத்வா
கர்மஸங்கிஷு ஜாயதே |
ததாப்ரலீன: தமஸி
மூடயோனிஷு ஜாயதே || (541)

ஸத்கர்மங்கள் இன்பம், ஞானம், வைராக்கியம் முதலிய சுத்த, ஸாத்விகப் பயன்களைத் தருமென்பர்; ராஜஸவினை துன்பந்தரும்; தமஸ் மடமைதரும்.

கர்மண: ஸுக்ருதஸ்ய ஆஹு:
ஸாத்விகம் நிர்மலம் பலம் |
ரஜஸஸ்து பலம் து:கம்
அஞானம் தமஸ: பலம் || (542)

ஸத்வத்தினின்று அறிவும், ரஜஸினின்று அவாவும், தமஸினின்று தவறு, அசட்டை மயக்கம், மடமையும் விளைகின்றன.

ஸத்வாத் ஸம்ஜாயதே ஞானம்
ரஜஸோ லோப ஏவ ச |
ப்ரமாதமோஹௌ தமஸோ
பவத: அஞானம் ஏவ ச || (543)

ஸத்வத்தில் நிலைத்தோர் தெய்வத்தன்மையில் மேலோங்குகின்றனர்; ராஜஸர்கள் இடையில் (மனிதத் தன்மையில்) நிற்கின்றனர். மந்தம், அசட்டை மயக்கம் முதலிய இழிகுணங்களில் திரியுந் தாமதர் கீழே (விலங்குத் தன்மைக்குச்) செல்கின்றனர்.''

ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா:
மத்யே திஷ்டந்தி ராஜஸா: |
ஜகன்யகுணவ்ருத்திஸ்தா
அதோ கச்சந்தி தாமஸா: || (544)

## ருசு. குணாதீதன்

முக்குணங்கள் ஜீவனைப் பற்றிப் பலவிதமாக அலைக்கின்றன. குணதொந்தமற்ற சுதந்தர நிலையை இனிக் கேளுங்கள்:

"குணங்களே செயலாளர்; வேறில்லை; ஸாக்ஷி புருஷன் (திரிக்கு) ஆகிய ஆன்மா இதைக்கண்டு, குணாதீதமான பரமாத்மாவை உள்ளபடி யறிகையில், என்னியல்பை யடைகிறான்.

நான்யம் குணேப்ய: கர்தாரம்
யதா த்ரஷ்டானுபஶ்யதி |
குணேப்யஶ்ச பரம் வேத்தி
மத்பாவம் ஸோऽதிகச்சதி || (345)

ப்ரகிருதி சரீரத்தில்தோன்றிய இந்த முக்குணங் களைத் தாண்டி, பிறப்பு, இறப்பு, மூப்பு, துன்பத்தி னின்று விடுபட்டு, தேகியானவன் அமரவாழ் வெய்துகிறான்."

குணான் ஏதான் அதீத்ய த்ரீன்
தேஹீ தேஹஸமுத்பவான் |
ஜன்ம ம்ருத்யு ஜரா து:கை:
விமுக்த: அம்ருதம் அஸ்னுதே || (546)

அர்ஜுனன் வினவுகிறான் :—

" ஆண்டவனே! இம் முக்குணந் தாண்டியோன் அடையாளங்களென்ன? அவன் ஒழுக்க முறை யென்ன? எவ்வாறிந்த முக்குணங் கடக்கிறான்?"

கைர்லிங்கை: த்ரீன்குணான் ஏதான்
அதீத: பவதிப்ரபோ |
கிமாசார: கதம் ச ஏதான்
த்ரீன் குணான் அதிவர்ததே || (547)

பகவான் அருளுகிறார் :—

" பாண்டவா! (ஆன்மாவில் நிலைத்த குணாதீதன்) ஸத்வ வியல்பான ஒண்மை, ராஜஸமான செயல் முயற்சி, தாமதமான மயக்கம் இவை விளையினும் வெறுக்கான் ; நீங்கினும் வேட்கான்."

வரவு, செலவு, ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி இரண்டிலும் பற்றாறாது, அவன் ஆன்மாவிலேயே உறுதியாயிருப்பான்.

ப்ரகாஸம் ச ப்ரவ்ருத்திம் ச
மோஹம் ஏவ ச பாண்டவ |
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தானி
ந நிவ்ருத்தானி காங்க்ஷதி || (548)

எதையும் பாராட்டாமல் உதாசினனாக (தாக்கற்று) இருப்பான். குணங்களாற் சலியான்; குணங்களே குணங்களில் திரிகின்றன என்று, தான் பரமாத்மாவில் அசைவற்றிருப்பான்.

உதாஸீனவத் ஆஸீன:
குணைர் யோ ந விசால்யதே |
குணா வர்தந்த இத்யேவ
யோऽவதிஷ்டதி நேங்கதே || (549)

தனது ஆத்மாவில் நிலைத்திருப்போன்; இன்ப துன்பத்தைச் சமமாய்க் கருதுவோன்; ஓடு, கல், பொன்னையுஞ் சமமாக மதிப்போன்; தீரன்; அன்பினரிடையும் அன்பிலாரிடையும் ஸமநோக்குள்ளோன்.

ஸமது:க ஸுக: ஸ்வஸ்த:
ஸம லோஷ்டாஶ்ம காஞ்சன: |
துல்ய ப்ரியாப்ரியோ தீர:
துல்ய நிந்தாத்ம ஸம்ஸ்துதி: || (550)

பிறர் தன்னை இகழினும் புகழினும் ஒன்றெனக் கொள்வோன்; தனக்குறும் பெருமையுஞ் சிறுமையும் ஒன்றெனக் கொள்வோன்; நண்பர், பகைவர்பால் ஸமநோக்குடையான்; எதிலும் நான் எனத் தலைதயிடுத லற்றான்; (வினைத் தொடக் கற்றான்); அவனே முக்குணங் கடந்தவன் (குணாதீதன்) என்னப்படுகிறான்.

மேகங்களுக்கப்பாலுள்ள ஸூரியனைப்போல, அவன் எதிலுங் களங்கமுறான்; குணம் செய்கிறது; எல்லாம் இயற்கையின் ஆட்டம்; எனது நிலை அழிவற்ற, மாறுதலற்ற பரம்பொருள் என்றிருப்பான்.

மாநுபமாநயோஸ்துல்ய :
துல்யோ மித்ராரி பக்ஷயோ : |
ஸர்வாரம்ப பரித்யாகீ
குணாதீத : ஸ உச்யதே || (551)

மாசற்ற அன்புகொண்டு, பக்தியோகத்தால் எப்போதும் என்னைப் பணிவான், இம் முக்குணங்களைத்தாண்டி, பிரம்ம நிலைக்குத் தக்கவனாகிறான்.

மாம் ச ய: அவ்யபிசாரேண
பக்தி யோகேன ஸேவதே |
ஸ குணான் ஸமதீத்ய ஏதான்
ப்ரஹ்மபூயாய கல்பதே || (552)

அந்த அழிவற்ற பிரமம், அமரநிலை, நித்திய தர்மம், தனிநிலை யின்பத்திற்கும் யானே நிலயம்.

ப்ரஹ்மணோஹி ப்ரதிஷ்டாஹம்
அம்ருதஸ்ய அவ்யயஸ்ய ச
ஸாஶ்வதஸ்ய ச தர்மஸ்ய
ஸுகஸ்ய ஏகாந்திகஸ்ய ச || (553)

அனைத்துமான பரமாத்மனை இடையறாத உள்ளன்பாற் கலந்து நிற்றலே மேற்சொன்ன அனைத்தும். அவனன்பே குணக்கடலைத் தாண்டுவிக்குங் கப்பல்; அமரவாழ்வளிக்கும் அமுத கலசம்; நம்மை அவன் மயமாக்குங் காந்தம்.

கீதாயோகம்
பதினான்காம் அத்தியாயம்
குணத்ரய விபாகயோகம்
முற்றிற்று.

# * ௫எ. வாழ்க்கை - அரசமரம்

ஆன்மா அமைதி; இயற்கை ஆடல். இரண்டையுந் தனித்தனி நோக்கின் முரண்படத் தோன்றும்; இரண்டினும் உள்ளது பரம்பொருள், பரப்ரம்மம்; அஃதின்றி எஃதுமின்று. அதுவே உள்ளந்தோறும் "தான் தான்" என்று தாண்டவம் புரிவது. அனைத்தும் அதன் மயம். அதன் கிரியா சக்தியே அவ்யக்தம். அது தானே இயற்கையின் மூலம் உலகாயுள்ளது. புருஷன் மூலம் ஜீவாத்மாவாயுள்ளது. இந்த உயர் பரம்பொருளே புருஷோத்தமனும். வாழ்வை அவனுக்கு வேள்வியாக்குவதே இன்பம். அவனையடைந்து, ஆத்ம சாட்சியாக, ஆத்ம நிச்சயத்தில் நிலைத்து, உலகில் வாழ்பவன் பற்றற்றான். அகந்தைப்பற்றை யறவே நீக்கி, வாழ்வின் வேர் பரப்ரம்மனென்றறிந்து, அதன் ஒவ்வோ ரணுவிலும் அவனைக் கலந்து இன்புறும் பரம ரகசியத்தை பகவான் இந்த அத்தியாயத்தில் அருளிச்செய்கிறார்; தன்னின்று, தன் சக்தியாக விரிந்த வாழ்வை, ஒரு அரச மரமாக வர்ணித்து, உயர்ந்த ஆத்ம ரகசியங்களைப் புகட்டுகிறார்.

**மேலே வேரும், கீழே கிளையும் விரிந்த (உலக வாழ்வான) அரசமரம் அழிவற்றது. வேதமே அதன் இலைகள். அதை யறிந்தவனே வேத வித்தாவான்.**

அசுவத்தமரம் (அரசு) அதன் சமித்துக்களை அடிக்கடி உதிர்த்து, நாளுக்குநாள் புதிதாக மாறுகிறது. அது போன்றே வாழ்வும் அடிக்கடி பழயன கழிந்து புதிய கோடுகளுடன் விரிகிறது. இதனாலேயே அரச மரம் உதாரணமாகக் கொள்ளப்பட்டது. பிரபஞ்சம் ஓர் அரச மரம்போன்றது. அது அனாதிகாலமாக ஓங்கிக்கொண்

---

* XV புருஷோத்தம ப்ராப்தி யோகம்.

டிருப்பதால், "அவ்யயம்" அழிவற்றது எனப்படுகிறது; வாழ்வு பரப்ரம்ம சக்தியின் நித்திய லீலை. அதன் காட்சிகள் மாறினும் ஆடல் என்றும் நடந்துகொண்டேதானிருக்கிறது. வாழ்வின் மரம் (அரசமரம்) தலைகீழாயுள்ளது; என்? வாழ்வின் வேர் உன்னதமான துரியப்ராம்மத்தில், சச்சிதானந்தத்தில் ஊன்றப்பெற்றது. ஸத்தில் (உண்மை அல்லது உள்ள பொருள்) வேரூன்றி, சிற்சக்தியின் திறத்தால் ஆனந்த மயமாகப் பெருகுகின்றது. இம்மரம் கீழே அன்மமயமாகக் கிளை விரிகின்றது. இம்மரத்தின் இலைகள் வேதங்கள். வேதம் என்பது அத்யாத்ம ஞானம். பிரம்ம ஞானிகள் அருளால் பெற்ற கட்வு ளுண்மைகளின் தொகுப்பே எல்லையற்ற வேதங்கள். இலைகளின்றி மரம் உயிர்த்தலரிது; அதுபோன்றே, வாழ்வும் ஆத்ம ஞான வுண்மைகளாலேயே உயிர்த்துச் செழிக்கிறது. இந்த வாழ்வு பரப்ரம்மனில் வேர்கொண்டது; தனது சின்மய சக்தியையே அவன் இப் பிரபஞ்சமாகப் பரப்புகிறான்; அவனுடைய சிற்சக்தியே எங்கும் கிளைவிரிந்து ஜீவ ஜகத்தாகப் பரவியுள்ளது. அனைத்தும் பாப்ரம்ம மயமே. அனைத்திற்கும் வேருங் கிளையும் அவனே என்றறிவோனே வேதமறிந்தோன்.

பிரக்ஞானம் ப்ரஹ்மம் (அறிவே கடவுள்), அஹம் ப்ரஹ்மாஸ்மி (நான் பிரம்மமாயிருக்கிறேன்), தத்வமஸி (அது நீயாயிருக்கிறாய்), அயம் ஆத்மா (இவன் ஆன்மா)—என்பதே வரிசையாக நான்கு வேதங்களின் சாரமுமாகும். அதுவோ, இதுவோ, நானோ: நீயோ, தானோ இவையோ எவையோ எல்லாம் பரம்பொருள்; நமது உள்ளும் புறமும் வேருங் கிளையும் பூவுங் கனியும் ப்ரம்மம் என்றறிந்து அதில் நம்மை முற்றும் ஈடுபடுத்துவதே இன்பம். அனைத்தும் ப்ரம்மமென்றறிந்து கலந்து, அதுவானவனே வேத மறிந்தோன்.

ஊர்த்வமூலம் அத:ஸாகம்
அஸ்வத்தம் ப்ராஹு ரவ்யயம் |
சந்தாம்ஸி யஸ்ய பர்ணனி
யஸ்தம் வேத ஸ வேத்வித் || (554)

இம்மனித வுலகில் இவ் வாழ்வு மரம், வினைப் பற்றை வேராகக் கொண்டு, முக்குண நீருண்டு தழைத்து, சத்தாதி விஷயத் தளிர் செழித்து, மேலும் கீழும் பலவகை ஜீவராசிகளாகக் கிளைபரவிக் கிடக்கிறது.

கீழே தூல வாழ்விலும், மேலே மனித வாழ்விலும் பரவியுள்ளது. வினைப்பற்றை உண்டாக்கும் அகம்பாவத்தையே ஆணி வேராகக் கொண்டு, மன, வீரிய, தூல வுலகங்களில் பலவேருக விரிந்து பரவியுள்ளது.

அதஸ்ச ஊர்த்வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்யஸாகா:
குணப்ரவ்ருத்தா விஷய ப்ரவாலா: |
அதஸ்ச மூலான் யனுஸந்ததானி
கர்மானு பந்தீனி மனுஷ்ய லோகே || (555)

இங்கே இந்தப் பிரபஞ்ச மரத்தின் உருவம் காணக்கிடைப்பதில்லை. அதற்கு ஆதியில்லை, அந்தமில்லை, உறுதியான நிலைப்புமில்லை. (அகந்தை மமதையில்) திடமாக வேரூன்றிய இந்த அரச மரத்தை, பற்றின்மை (வைராக்கியம்) என்னும் வலிய வாளால் சிதைக்கவேண்டும்.

நரூபம் அஸ்ய இஹ ததோபலப்யதே
நாந்தோ ந சாதிர் ந ச ஸம்ப்ரதிஷ்டா |
அஸ்வத்தம் ஏனம் ஸுவிரூடமூலம்
அஸங்க ஸஸ்த்ரேண த்ருடேன சித்வா || (556)

இதனால் வாழ்வு முழுமையும் கனவு, கயிற்பாம்பு மலடி மகன், பொய் என்று அறவே வெட்டி யெறிய வேண்டுமென்ற பொருளன்று; அதைவெட்ட நாம் யார்? அது பிரம்மத்தில் ஊன்றித்தழைக்கும் அனந்த சிற்சக்தியின் எல்லையற்ற நித்திய லீலை; சக்தியுடன் இணைபிரியாத இறைவனன்றோ இவ்வுல குயிர்களின் அம்மையப்பன்! ஆனால் சிதைக்க வேண்டுவது எதை? மனிதவுலகில் வேரூன்றிய அகந்தை வாழ்வையே, இழியல்பின் தனியகந்தை வேற்றுமைகளையே; இவையே மனிதனை வினைப் பற்றேற்றி, மதிமயக்கி, உண்மையை அறியாது இடர்செய்கின்றன. நமது வாழ்வின் வேரும் விரிவும் தெய்வ சக்தியென்றறிந்து, தெய்வத்திற்கு அதைப் பூரண சரணாகதியாக்கி, அகந்தையை முற்றுந் துணித்து, எல்லாம் அவன் என்றும் அறிவில் உயர்வதே இன்பம்.

## ருஅ. பரமபதம்

எப்பதமடைந்தால் பின்னே (அகந்தை வாழ்விற்கு) மீளுவதில்லையோ அப்பெரும் பதமே முயன்று பெறத்தக்கது. இப் புராதனமான பிரவிருத்திமரம், எங்கிருந்து விரிந்ததோ அந்தப் புராண புருஷனைச் சரண் அடைகிறேன்.

தத : பதம் தத்பரிமார்கிதவ்யம்
யஸ்மின்கதா ந நிவர்தந்திபூய : |
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே
யத : ப்ரவ்ருத்தி : ப்ரஸ்ருதாபுராணி || (557)

உன்னத நிலை எது? அதுவும் நம்முள்ளே யிருக்கும் சச்சிதானந்தமே; அதுவே நம்முள்ளிலகும் வானரசு. அதையடைந்தபின் அபக்குவமான அகந்தை வாழ்விற்கு மீளுதல் இல்லை. அதுவே அமரவாழ்வு; அங்கே மனிதன்

தெய்வமாகிறான். அங்கேயே மனிதன் தனது அடி, முடி, இடை, உண்மை அனைத்தையும் நேரே காண்கிறான். "இந்தப் புராதனமான, வாழ்வுமரம் பரமாத்மாவில் வேரூன்றி யன்றோ கிளைவிரிந்து பாவுகின்றது! இதெல்லாம் அவனே யன்றோ? நான் என்று எதுவுமில்லை; எல்லாம் அவன்; அந்த ஆதிபுருஷன், புருஷோத்தமனைச் சரணடைகிறேன்." என்று மனிதான்மா அறிந்து அவனையடைந்து விடுகிறது. "நீயே மூல காரணன்; நீயே அனைத்தும்; நீயின்றி யானில்லை; நினக்கே யான்" என்று அவனை இரண்டறக்கலக்கும் நிலையே இன்பநிலை. அதுவே நித்திய சுத்த சச்சிதானந்த வாழ்வு.

கடோபநிஷத்திலும் "இதுவே ஸநாதனமான அரசமரம். அது மேலே வேரூன்றிக் கீழே கிளைபரவுகிறது; அது சுத்தம், ப்ரம்மம், அம்ருதம் எனப்படுகிறது. அதிலேயே உலகங்களெல்லாம் நிலைபெற்றுள்ளன; அதை எதுவும் மீறிச்செல்லொணாது; அதுவே இது." எனப்பட்டுள்ளது. சிருஷ்டிமரம் ப்ரம்மத்தினின்றே உண்டானதால் பிரம்மமெனப்படுகிறது. இதெல்லாம் ஒரு சச்சிதானந்தத்தின் விரிவென்றறிந்து, அடிக்கடி மாறும் அதன் தோற்றத்துள்ளே மாறாத பரப்ரம்மத்தைக் காண்பதே அறிவு. யான் எனது என்னும் அகந்தையைப் பற்றின்மை என்னும் வாளாற் சிதைத்து, கடவுளுணர்வில் மேலோங்கிச் செழித்து, அனைத்திற்கும் ஆதியான புருஷோத்தமனுக்கே நம்மை முற்றும் அர்ப்பணித்து, அவன் மயமாவதே சிறந்த நிலை. அழிவற்ற அவனுடன் கலந்து வாழ்வதே அழிவற்ற நிலை.

(அதை யார் அடையத் தக்கவர்?) செருக்கில்லாதவர், மயக்கமில்லாதவர்; பற்றின் குற்றம் முற்றும் வென்றோர், ஆசையை விலக்கியோர், சுகதுக்க

மெனுக் தொக்கம் நீங்கியோர், ஆத்ம ஞானத்தில் ஊன்றிய அறிஞர் அந்த அழியா நிலையை அடைவர்.''

நிர்மான மோஹா ஜிதஸங்கதோஷா
அத்யாத்மநித்யா விநிவ்ருத்தகாமா: |
த்வந்த்வைர் விமுக்தா: ஸுகது:கஸம்ஞை:
கச்சந்த்யமூடா: பதமவ்யயம்தத் || (558)

"இரவியும், மதியும், தீயும் அதனை ஒளியுறுத் துவதில்லை. (இப்புறவொளிகள் புலன்களைக் கடந்த பரஞ்சோதியாகிய அதற்கு அவசியமில்லை; ஆனால் அதன் கதிர்களாலேயே இவை நிலவுகின்றன). எப் பதமடைந்தபின் (இருளான அகந்தை வாழ்விற்கு) மீளுவதில்லையோ, அதுவே எனது பரமபதம்.

ந தத்பாஸயதே ஸூர்ய:
ந ஶஶாங்கோ ந பாவக: |
யத்கத்வா ந நிவர்தந்தே
தத்தாம பரமம் மம || (559)

## ருசு. நான் புருஷோத்தமன்

*தன்னின்று விரிந்த ஜீவப்ரபஞ்சம் முழுதும் புரு ஷோத்தமனான தானே என்பதை பகவான் இனி விளக்கு கிறார்.*

"இந்த ஜீவலோகத்தில், என் அம்சமே என்றுமுள்ள ஜீவாத்மாவாகி இயற்கையில் நிலைக் கொண்டு, மனம் ஐம்புலன்கள் ஆகிய ஆறு இந்திரி யங்களையும் கவருகின்றது"

பரம்பொருளே பலவாக விரிந்துளான்; நாவிற்சுவை யும், கண்ணிற் காட்சியும், அனைத்தின் திறனும் அவனே.

தான் கர்த்தா என்னும் தனியகந்தையாலேயே ஜீவன் அவனையறியாது மயங்குகிறது.

மமைவாம்ஸோ ஜீவலோகே
ஜீவபூத: ஸநாதன: |
மன: ஷஷ்டாநி இந்த்ரியாணி
ப்ரக்ருதிஸ்தாநி கர்ஷதி || (560)

அவன் மயமான ஜீவனே பிரகிருதி சரீரத்திலுள்ள போதும் ஆறு பொறிகளையுங் கவர்கிறது; உடலை விடும் போதுங் கவர்ந்து செல்கிறது.

(மலர் சந்தனம் கஸ்தூரிபோன்ற மணப் பொருள்களினின்று) மணத்தை மட்டும் காற்று பற்றிச் செல்கிறது; அதுபோலவே ஈசுவராம்சமான ஜீவாத்மாவும் தான் களையும் உடலினின்று, இந்த மனமாதி ஆறு பொறிகளையும் பற்றிக்கொண்டு, தான் அடையும் உடலுட் புகுகின்றது.

ஸரீரம் யதவாப்நோதி
யச்சாப்யுத்க்ராமதீஸ்வர: |
க்ருஹீத்வா ஏதாநி ஸம்யாதி
வாயுர்கந்தான் இவ ஆஸயாத் || (561)

என் அம்சமான இந்த ஜீவாத்மாவே மெய் வாய் கண் மூக்கு செவி மனமாகிய ஆறு பொறிக ளுள்ளும் நிலைக்கொண்டு, விஷயங்களை அனுபவிக் கிறது.

ஸ்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்ஸனம் ச
ரஸனம் க்ராணமேவ ச |
அதிஷ்டாய மனஸ் சாயம்
விஷயான் உபஸேவதே || (562)

உடலை நீக்கும்போதும், உடலில் நிற்கும்போதும், விஷயங்களை யுண்ணும்போதும், குணங்களைப் பொருந்தி நிற்கும்போதுங்கூட, மூடர் அவனைக் காண்பதில்லை. ஞானவிழியினர் காண்கின்றனர்.

உத்க்ராமந்தம் ஸ்திதம்வாபி
புஞ்ஜானம்வா குணான்விதம் |
விமூடா நானுபஶ்யந்தி
பஶ்யந்தி ஞானசக்ஷுஷ: || (563)

இந்த ஆத்மா இதயத்தமர்ந்தது; முயலும் யோகியர் தம்முட் காண்பர்; அந்தக்கரண சுத்தியற்ற அறிவிலிகள் முயன்றும் அதனைக்காண்பதில்லை.

யதந்தோ யோகின: ஶ்சைனம்
பஶ்யந்தி ஆத்மனி அவஸ்திதம் |
யதந்தோऽபி அக்ருதாத்மான:
நைநம்பஶ்யந்தி அசேதஸ: || (564)

அவர்கள் புறக்கண்களுக்குப் புலப்படுவதே காட்சியென்கின்றனர்; அல்லது தமது மூளையில் நூல்களையேற்றித் தத்துவப் பேய்களோடு தலையடித்துக்கொண்டு திரிகின்றனர். ஆத்மன் நாவிற் சுவைக்கிறான், கண்ணிற் காண்கிறான், மூக்கில் முகர்கிறான், காதிற் கேட்கிறான், மனத்தில் நினைக்கிறான்! காணும் பொருள் விட்டுக் காண்பவனைக் கண்டால் அவனே எங்குங் காண்பான்.

பரிதியினின்று பாரெலாம் வீசொளி, நிலவொளி, நெருப்பொளி, எனதொளி என்றறி.

யத் ஆதித்யகதம் தேஜ:
ஜகத் பாஸயதே அகிலம் |
யச்சந்த்ரமஸி யச்சாக்னௌ
தத்தேஜோ வித்தி மாமகம் || (565)

பூமியிற் புகுந்து, நானே எனது வல்லமையாலே, உயிர்களை யெல்லாந் தாங்குகின்றேன். அமுத கலை யுள்ள அல்லது ரஸவடிவான சந்திரனாகி, பயிர்களை யெல்லாம் நானே வளர்க்கிறேன். (உயிர்களையும் உயிர்கள் உண்ணும் பயிர்களையும் நானே வளர்க் கிறேன்).

காமாவிஸ்ய ச பூதானி
தாரயாமி அஹம் ஓஜஸா |
புஷ்ணாமிசௌஷதீ: ஸர்வா:
ஸோமோ பூத்வா ரஸாத்மக: || (566)

மேலும் நானே வைசுவானரன், (அக்னிதேவன்) ஆகி, உயிர்களின் உடலில் இடங் கொண்டுள்ளேன்; பிராணவாயு, அபானவாயு இரண்டுடனுங்கூடி (உண்ணல், தின்னல், நக்கல், பருகல் ஆகிய) நால்வகை யுணவையும் ஜீரணஞ் செய்கிறேன்.''

அஹம் வைவஸ்வானரோ பூத்வா
ப்ராணிநம் தேஹமாவஸ்ரித: |
ப்ராணபான ஸமாயுக்த:
பசாமி அன்னம் சதுர்விதம் || (567)

*தன் இருக்கையை எவ்வளவு தெளிவாக ஆண்டவன் விளக்குகிறான்! உயிராவதும் அவன்; உயிரில் உயிர்ப்பதும் அவன்! உயிரைத் தாங்குவதும் அவன்; உயிர் உண்ணப் பயிர் வளர்ப்பதும் அவன்; அவ்வுணவைத் தீயாக ஒவ்வொருவருள்ளுமிருந்து செரித்து ப்ராணதாரமாக்குவோனும் அவன்! இப்படி எதிலும் யாதுமாயுள்ள அவனை மார்தர் காணாததென்னே! இன்னும் என்ன?*

*"நான் எல்லா உளத்துங் கோயில் கொண்டுள்ளேன்!"* (பலர் நூல்களாலும் வேத வேதாங்க

விசாரணைகளாலுந் தேடுகின்றனர்; ஆனால் நானின்றி அவையில்லை) "ஸ்மிருதி, ஞானம், ஐயம் விலக்கல், ஊகம், எல்லாம் என்னிற் பிறந்தனவே; யானே எல்லா மறைகளின் மூலமும்; விளங்கற்கரியன், வேதாந்தத்தைச் செய்தவன் யானே; வேதமறிந்தவன் யானே."

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸம்நிவிஷ்டோ
மத்த: ஸ்ம்ருதிர் ஞானம் அபோஹனம் ச |
வேதைஸ்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:
வேதாந்தக்ருத் வேத விதேவ சாஹம் || (568)

தூலான்மா, பிராணான்மா, மனான்மா, விஞ்ஞான ஜோதியான்மா, ஆனந்தான்மா சிதான்மா, ஸதான்மா எல்லாம் அவனே! அனைத்தும் சத்தான்மாவின் புடைப் பெயர்ச்சிகளே.

"க்ஷரம் அக்ஷரம் என உலகில் இருவகைப் புருஷருள்ளனர்; அதில் (அசேதனமான) பூதவுடல்கள் க்ஷர புருஷன்; (சேதனனான) கூடஸ்தன், ஆன்மா, அக்ஷர புருஷன்."

த்வௌ இமௌ புருஷௌ லோகே
க்ஷரஸ்ச அக்ஷர ஏவச |
க்ஷர: ஸர்வாணி பூதானி
கூடஸ்த: அக்ஷர உச்யதே || (569)

க்ஷரம் மாறியழிவது; அக்ஷரம் அழிவற்றது, கூடஸ்தன், அசலன், ஆன்மா. அவனே காண்போன், சாட்சி புருஷன்.

"உத்தம புருஷன் இவரினும் வேறு; அவனே பரமாத்மா எனப்படுவோன்; மூவுலகங்களிலும்

(தூலவுலகு, மனவுலகு, அத்யாத்மவுலகு) குடி கொண்டு அவன் எல்லாவற்றையுந் தாங்குகின்றான்; அவனே அழிவிலான்; இறைவன்" (பரமாக்ஷரன்).

உத்தம: புருஷஸ்து அன்ய:
பரமாத்மா இதி உதாஹ்ருத: |
யோ லோகத்ரயம் ஆவிஸ்ய
பிபர்தி அவ்யய ஈஸ்வர: || (570)

இதுகாறும் "நான்" என்று பேசிவந்த கண்ணன், இப்போது, "அவன், பரமாத்மா" என்று படர்க்கையிற் பேசுவது கவனிக்கத் தக்கது; அடுத்த பாட்டில் மீண்டும் "நான்" என்று வருகிறது; கண்ணன் பரமாத்ம நிலையினின்றே, புருஷோத்தமத் தன்மையினின்றே பேசுகிறான்.

"ஏனெனில், நான் அக்ஷராதீதன்; க்ஷரத்தினுஞ் சிறந்தோன்; (அழியும் இயற்கையின் மிக்கோன்; மாயை சூழ்ந்த ஜீவனின் உயர்ந்தோன்) இதனால், உலகினாலும், வேதத்தாலும் புருஷோத்தமன் எனச் சிறப்புற்றுள்ளேன்.

யஸ்மாத் க்ஷரம் அதீதோ஽ஹம்
அக்ஷராதபி சோத்தம: |
அதோ஽ஸ்மி லோகே வேதே ச
ப்ரதித: புருஷோத்தம: || (571)

பாரதா, எந்த ஞானி என்னைப் புருஷோத்தமனென்றறிகின்றானோ, அவனே அனைத்தும் அறிந்தோனவன்; எல்லாவிதத்தும், எல்லாத் தன்மையிலும், நிலையிலும் அவனே என்னை வழிபடுகின்றான்."

யோ மாமேவம் அஸம்மூட:
ஜாநாதி புருஷோத்தமம் |
ஸ ஸர்வவித் பஜதி மாம்
ஸர்வபாவேன பாரத || (572)

*உலகிலுள்ள தெல்லாம் க்ஷராக்ஷரச் சேர்க்கையா லுண்டானவை; அவற்றினும் உயர்ந்து அனைத்துமாகி, அனைத்தையும் ஆளும் புருஷோத்தமனை அறிந்தவன் அனைத்தையும் அறிந்தவனே. அவனை அறிந்து கலப்பதே அறிவு.*

பழுதிலா விஜயா! என்னால் சொல்லப்பெற்ற இது,அதிரகசியமான யோக சாஸ்திரமாகும். இதனை யறிந்த புத்திமானே செய்யத் தக்கதைச் செய்தோனவன்.

இதி குஹ்யதமம் ஸாஸ்த்ரம்
இதம் உக்தம் மயா அநக |
ஏதத் புத்த்வா புத்திமான் ஸ்யாத்
க்ருத க்ருத்யஸ்ச பாரத || (573)

*என்னை அவனே ஆத்மாவாகவும், சர்வாத்மாவாகவும், பரமாத்மாவாகவும் அறிகிறான்; அவன் அழியும் இயற்கையில் கட்டுப்படான்; ஜீவனை எனக்கே அர்ப்பணிப்பான்; எல்லாவற்றிலும் என்னையே அறிவான்; பிறப்பு, இறப்பு, தோற்றம், மறைவு, உலகு, உயிர் இன்ப துன்பம் எதிலுஞ் சலியாது என்னில் நிலைப்பான். இதுவே பிறவிப் பயன்; என்னையறிந்து கலந்து என்மயமாவதே செயற் கருஞ் செய்கை.*

*கீதாயோகம்*
*பதினைந்தாம் அத்தியாயம்*
*புருஷோத்தம யோகம்*
*முற்றிற்று.*

# * கூசு. தெய்வத் தன்மை

எல்லா வுடலும் இறைவனாலயமே ; ஸர்வத்திலும் உள்ளது ஸமம் ப்ரம்மம். ஒவ்வொருவரும் அதுமயமாகலாம் ; அறிவு முதிர்விற் கேற்றபடி அவரவர் தூல, மன வாழ்வைக் கடந்து அத்யாத்ம வாழ்விற்கு முன்னேறுகின்றனர். அழியாப் பேராற்றலும், பரஞ்சோதி மகிமையும், அகண்ட ஞான விரிவும், பரிபூரணானந்தமும், நித்திய சாந்தமும், சுத்த முக்த ஸமத்வமும் நிறைந்த தெய்வப் பொருளை நம் முட் கூடிவாழலாம் ; அதுவே நமது இயல்நிலை ; இயல் வாழ்வு. கீழியல்பின் அகந்தை அகழியும், முக்குண மதில்களுமே அவ்வாழ்வினின்று நம்மை மறைப்பன. மனமயக்கங்களில் உழலும் மனிதன், தன்னை உள்ளன்புடன் பரமாத்மாவிற்குச் சரணாக்கி, நானெனும் அகந்தையை எல்லாம் அவன் எனும் உண்மையில் போக்கினால், அவனருள் நாளுக்கு நாள் நம்மைக் குறையகற்றி விக்ஞான நிறைவுறுத்தி, சச்சிதானந்தத்திற்கு உயர்த்தும். விக்ஞான சேதன சக்தியாலேயே, மனிதன் தெய்வ வாழ்வு பெற வாய்க்கும். ராஜஸ ஆசையகந்தைகளும், தாமஸச் சோம்பலும், தெய்வத்தன்மைக்குப் பகையாகும் ; இத்தன்மையர் அரக்கர். அறிவொளி நிறைந்த ஸாத்வீகம் பூரணமடைந்தால், தெய்வ வாழ்விற்கு விரைவாக முன்னேறலாம். மனிதனுக்கும் தெய்வத் தன்மைக்கும் இணைப்பாயிருப்பது ஸாத்வீகமே. அதன் பெருக்கமே நம்மை ராஜஸ தாமதத் தீமைகளினின்று விடுவிக்கும். பூரண அமைதியும், அத்யாத்மவொளியும் பெருதமட்டும், ஸாத்வீகத்தை வளர்த்தல் வேண்டும். அதன்பின் அதையுங் கடந்து, குணாதீதனாதல் வேண்டும். ஸாத்வீகத்தால் சுத்த நிலைக்கு முன்னேறும்

---

* XVI தெய்வாஸுர ஸம்பத்விபாக யோகம்

வழியையே இனிக் கீதை உபதேசிக்கிறது. அதற்கு முன் னுரையாக தேவாசுரர் தன்மைகளை விளக்குகிறது. முதலில் தெய்வத்தன்மை விளக்கப்படுகிறது.:-

அச்சமின்மை, (ஆசை யகந்தையின்றி) உள்ளத் தூய்மை, ஆத்மஞான யோகத்துறுதி, ஈகை, பொறி புலனடக்கம்,(புருஷோத்தமனுக்கே தன்னை யளிக்கும்) வேள்வி, தெய்வநூற் பயிற்சி, தவமும், (நடத்தை யில்) செம்மையும் ;

அப⁴யம் ஸத்வஸம்ஸு²த்³தி⁴:
ஞானயோக³ வ்யவஸ்தி²தி: |
தா³னம் த³மஸ்ச யஞ்ஸ்ச
ஸ்வாத்⁴யாயஸ் தப ஆர்ஜவம் || (574)

அஹிம்ஸை, வாய்மை, சீற்றமின்மை, தியாகம் (வினையிலும் பயனிலும் பற்றை விடுதல்) உள்ளமைதி, புறங்கூறாமை (நிந்தியாமை) உயிர்கள்பால் இரக்கம், இந்திரிய விஷயங்களில்) அவாவுதலின்மை, மென்மை, (தகாதனசெய்ய) நாணுதல், சபலமின்மை ;

அஹிம்ஸா ஸத்யம் அக்ரோத⁴:
த்யாக³: ஸாந்தி ரபைஸு²னம் |
த³யா பூ⁴தேஷ்வ அலோலுப்த்வம்
மார்த³வம் ஹ்ரீ: அசாபலம் || (575)

தேஜஸ் (தவவொளி) பொறுமை, திண்மை, துணிவு, உட்புறத்தூய்மை கொடுமையின்மை,செருக் கில்லாமை—பாரதா இவையே தெய்வத்தன்மை படைத்தவன் வளமையாம்.

தேஜ : க்ஷமா த்ருதி : ஶௌசம்
அத்ரோஹோ நாதிமானிதா |
பவந்தி ஸம்பதம் தைவீம்
அபிஜாதஸ்ய பாரத !! (576)

## ௬௧. அசுரத் தன்மை

அரக்கத்தன்மையை விளக்குவோம் :- உலக வாழ்வே தேவாசுரயுத்தமாயிருக்கிறது. வாளனும், கனகனும், கம்சனும், சுயோதனனும், கடவுளியல்பினரை எதிர்த்துக் கொண்டே யிருக்கின்றனர். கடவுளரசு உலகிடைவராமல், சாத்தானும் அஹரிமானும், சனியும், சகுனியும் வஞ்சத் தீமை செய்துகொண்டே யிருக்கின்றனர்; நல்லதிற்கு ஒரு புல்லனின் எதிர்ப்பு இருந்துகொண்டே யிருக்கிறது. அறவோர் அரக்கருடன் பொருதியே தீரவேண்டியிருக்கிறது; ஆண்டவன் சிலரை நல்லோராயும் சிலரை அரக்கராயும் படைத்தானா? இல்லை. அவன் அனைவருள்ளுந் தன்னையே வைத்துளான். மனிதனின் கீழியல்பு, வீரிய வகந்தை பொறாமை, மமதை இரக்கமின்மை, கொடுமை, பொய்களுக்குப் புல்லடிமைப்பட்டு அரக்கத்தன்மையுடன் உலகை யழிக்கிறது. இத்தன்மை மனிதனுள் எப்படிப் புகுந்தது? வீரியவுலகத்தில் பகைவன்மைகள் உலவுகின்றன; அவை கண்ணுக்கெட்டாதன; அவை தேவருக்கு எதிர்செய்வன. இருள் வன்மைகள், ஒளிசெயும் தெய்வ சக்திகளை எதிர்ப்பதற்கு உலகில் சில வீரியத்தினவெடுத்த ஆசை அகந்தை அசுத்தாத்மாக்களைப் பற்றிக்கொண்டு தருமத்திற்குச் சதிசெய்கின்றன. அவைதாமே மனித வடிவிலும் பிறப்பதுண்டு. தங்கள் காரியமான பிறகு அவை மறைந்து விடும். உலகில் எவரும் கொடியரல்லர். இராவணன் மிகச் சிறந்த சிவ பக்தன், தவசீலன்; ஆனால் காம

வடிவாக பகைவன்மைகள் இராமனை யெதிர்க்க அவனை வசப்படுத்தின ; கம்சனை அச்சவடிவாக, இரணியனை நாத்திக அகர்தை வடிவாகப் பற்றின. ஒரு பெரிய தெய்வசக்தியால், இவை நலிந்தோடுகின்றன. எனினும் மனிதஜாதியே வீரிய ஆசைகளினின்று, மனப்பிழைகளினின்று, அத்யாத்ம வாழ்விற்கு உயர்ந்து தெய்வவொளி பெற்றாலே இவ் விருள் வன்மைகள் இல்லாதொழியும். ஆத்மபரிபூரணம் பெற்று ப்ரம்ம சக்தி பொலியும் யோகிகள் சங்கத்தை (தெய்வ மனிதரின் சங்கத்தை) உலகில் நாட்டி, தெய்வச்சுடர் கொளுத்துவதே இப் பகைவன்மைகளை ஒழிக்கும் வழி. ஏவாளையும் ஆதாமையும் ஆசைகாட்டியேய்த்த சாத்தான், ஏசுநாதரின் யோக சக்தியின்முன் நிற்க முடிந்திலது. அசுரசக்திகள் மனிதரிடை எத்தன்மை கொண்டுலவுகின்றன என்று கண்ணன் விரிவாக வுரைக்கிறான்; கண்ணன் வர்ணிக்கும் அசுரர் எதிரிலேயே துரியோதனக் கும்பலில் உருவெடுத்துள்ளனர். இன்று அதே அசுரரே ஆயுத பலத்தால் உலகைக் கொலைக்களமாக்குகின்றனர்.

“இடம்பம், இறுமாப்பு, மதிப்பு (கர்வம்), சினம், கொடுஞ்சொல் (முரட்டுத்தனம்), (அனைத்தையும் ஆளும் கடவுளுண்டென்று) அறியாமை—இவையே, பார்த்தா, அஸுரத்தன்மை யடைந்தவன் வளமை.

தம்ப₄ : த₃ர்ப : அபி₄மானஶ்ச
க்ரோத₄ : பாருஷ்யம் ஏவ ச |
அஜ்ஞானம் ச அபி₄ஜாதஸ்ய
பார்த₂ ஸம்பதம் ஆஸுரீம் (577)

தெய்வ வளமை, முக்திக்குரியது; அஸுர வளமை பற்றிற் குரியது. பாண்டவா, நீ தெய்வ வளமை யெய்தி யுள்ளாய்; கவலைப்படாதே!

தைவீ ஸம்பத் விமோக்ஷாய
நிப3ந்தா4ய ஆஸுரீ மதா |
மாஸுச: ஸம்பதம் தைவீம்
அபி4ஜாத: அஸி பாண்டவ || (578)

பார்த்தா, இவ்வுலகில் தேவ இயல்பு, அஸுர இயல்பு என இருவகையாக உயிர்ப்படைப்பியலும். தேவ வியல்புள்ளதை விரித்துரைத்தேன்; அஸுர வியல்புள்ள படைப்பைக் கேளாய்!

த்3வௌ பூ4தஸர்கௌ3 லோகே அஸ்மின்
தை3வ: ஆஸுர ஏவ ச |
தை3வோ விஸ்தரஸ: ப்ரோக்த:
ஆஸுரம் பார்த2 மே ஸ்ருணு || (579)

விக்ஞான வுலகினின்று தேவதைகளும், வீரியவுலகினின்று அஸுர பலங்களும் உலகில் மனிதவுருக் கொண்டு பிறக்கின்றன. ஒருமுறை அஸுரத்தன்மை புகுந்தால், அதன் அகந்தைத் தினவு முற்றும் அழிந்த பின்பே மனிதன் மீளுகின்றான்; கடவுளையேற்ற பின்பே அது அழியும்; அப்போது ஆண்டவனே அவனை அகந்தைச் சேற்றினின்று விடுவிக்கிறார்.

"அஸுரமாக்கள் செய்தற்குரியது, விடுதற்குரியது இன்னதென்றறியார்; தூய்மையும், ஒழுக்கமும் வாய்மையுங் காணார்.

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச
ஜநா ந விது3 ராஸுரா: |
ந ஸௌசம் நாபி சாசார:
ந ஸத்யம் தேஷு வித்3யதே || (580)

"உலகம் (தெய்வ சக்தியை ஆதாரமாகக் கொண்டு) நிலைத்திருக்கவில்லை; அது (தெய்வப் படைப்பென்பது) பொய்; அது கடவுளற்றது; ஆண் பெண் சேர்க்கையாலேயே ப்ரபஞ்சம் உண்டானது; அது காம போகங்களைக் காரணமாயுடையது; இதைத் தவிர வேறென்ன? என்கின்றனர்.

அஸத்யம் அப்ரதிஷ்டம் தே
ஜகத் ஆஹு: அநீஶ்வரம் |
அபரஸ்பரஸம்பூதம்
கிம் அன்யத் காம ஹைதுகம் || (581)

தனு கரண புவன போகாதிகளுடன் கூடிய உலக வாழ்வு தெய்வசக்தியின் இச்சைப்படி அமைந்ததென்பதை அவர்கள் எண்ணுவதில்லை; அறிஞர் அனுபவத்தையும் ஒப்பார்; அறநூல்களின் உண்மையுந் தேறார்; ஐந்தொழில் முதல்வனை யறியார்; அவர்களுக்குப் 'புவிவாழ்வெல்லாம் போகசாலையே. இவ்வுடல் வாழ்வே இன்பமாகும்; இதற்கு மிஞ்சியதில்லை என்பார்; தேகமே ஆன்மா, போகமே இன்பம்; பாபபுண்ணியம், பகவான், ஆன்மா, பந்தம் முக்தி என்பன பொய்; பிரம்ம மயமாயிருக்கும் இவ்வுலகும் பொய்; (உலகம் ஸதஸத்விலக்ஷண அநிர்வசனியமென்பது சங்கர வேதாந்தம்.) இகமே சுகம் என்பர் இந்தப் பாமராத்திகர்.

இந்தப் பொய் நோக்கத்தில் நிலைபெற்று புன்மதிகொண்ட கெடுவியல்பாளர், சிறுமதியர், உலகத்திற்கே கேடுசூழ்ந்து, அதன் அழிவிற்காகக் கொடுந்தொழில் புரிகுவர்.

ஏதாம் த்ருஷ்டிம் அவஷ்டப்ய
நஷ்டாத்மான: அல்பபுத்தய: |
ப்ரபவந்தி உக்ரகர்மாண:
க்ஷயாய ஜகத: அஹிதா: || (582)

இடம்பமும் செருக்கும் மதமும் பிடித்து, அடங்காக் காமவாய்ப்பட்டு, மடமையாலே பொய்மதங் கொண்டு, இழுக்கான நடையுடன் செயல்புரிகின்றனர்.

காமம் ஆஸ்ரித்ய துஷ்பூரம்
தம்ப மான மதான்விதா: |
மோஹாத் க்ருஹீத்வா அஸத்க்ராஹான்
ப்ரவர்தந்தே அஸுசிவ்ரதா: || (583)

ஆசை யகந்தையால் வாழ்வைப் பாழாக்கும் அவர்கள் இறக்குமட்டும் எண்ணற்ற பொய் நினைப்புகள் பூண்டு, பாழுங் காம போகங்களிலேயே உழன்று, "இதுவே இன்பம்" என்று நிச்சயித்து நூற்றுக் கணக்கான ஆசாபாசங்களிற் கட்டுண்டு, காம க்ரோதங்களில் மூழ்கி, தங்கள் விஷய போகங்களுக்காகவே அநியாயஞ் செய்து பொருள் குவிக்க விழைகின்றனர்.

சிந்தாம் அபரிமேயாம் ச
ப்ரலயாந்தாம் உபாஸ்ரிதா:
காமோபபோகபரமா:
ஏதாவத் இதி நிஸ்சிதா: ||

ஆஸாபாஸ ஸதை꞉ ப꞉த்தா꞉
காமக்ரோத꞉ பராயணா꞉ |
ஈஹந்தே காமபோ꞉கார்த꞉ம்
அன்யாயேன அர்த꞉ஸஞ்சயான் || (584—585)

*"இந்த லாபம் இன்று பெற்றேன்! இந்த மனோரதமும் இனிக் கைகூடுவேன்! என்னிடம் இந்தச் செல்வமுள்ளது; மேலும் நாளை இன்னதை எய்துவேன்.*

இத꞉ம்அத்ய மயா லப்த꞉ம்
இமம் ப்ராப்ஸ்யே மனோரத꞉ம் |
இத꞉ம் அஸ்தி இத꞉ம் அபி மே
ப꞉விஷ்யதி புனர்த꞉னம் || (586)

*அந்தப் பகைவன் என்னால் மாய்ந்தான்! இனி மற்றவர்களையும் கொன்றுவிடுவேன். நானே ராஜா! நான் போகி, நான் சித்தன்! நான் பலவான்! நானே சுகி.*

அஸௌ மயா ஹத꞉ ஸத்ரு꞉
ஹனிஷ்யே ச அபரான் அபி |
ஈஸ்வர꞉ அஹம் அஹம் போ꞉கீ
ஸித்த꞉꞉ அஹம் ப꞉லவான் ஸுகீ || (587)

*நான் பெரிய பணக்காரன், ஜனக்கட்டுள்ளவன்; எனக்குச் சமானம் வேறு யார்? வேட்பேன், ஈவேன், களிப்பேன், என்று (நகாரமடிக்கும்) மடமையில் மயங்கினோர்.*

ஆட்ய꞉ அபி꞉ஜனவான் அஸ்மி
க꞉ அன்ய꞉ அஸ்தி ஸத்ருஸோ மயா |
யக்ஷ்யே தா꞉ஸ்யாமி மோதி꞉ஷ்யே
இதி அஜ்ஞான விமோஹிதா꞉ || (588)

பல வகையாகச் சித்தஞ் சுழன்று மருண்டோர், மோகவலையிற் சிக்கி, விஷய போகங்களிற் பற்றுண்டோர் (பாழும் அகந்தைத் தீமைகளான) அசுத்த நரகில் வீழுகின்றனர்.

அநேக சித்தவிப்ராந்தா:
மோஹ ஜால ஸமாவ்ருதா: |
ப்ரஸக்தா: காமபோகேஷு
பதந்தி நரகே அஸுசௌ || (589)

இவர்கள் தற்புகழ்ச்சியாளர், முரடர், செல்வச் செருக்குடன் மதம் பிடித்தவர்; பேருக்காகவும், இடம்பத்திற்காகவும், முறை தவறி வேள்விசெய்வோர்;

ஆத்ம ஸம்பாவிதா: ஸ்தப்தா: |
தனமான மதான்விதா: |
யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே
தம்பேன அவிதிபூர்வகம் || (590)

அகங்காரம், பலம், கர்வம், காமம், குரோதம் பிடித்து, பிறரைத் தூற்றி, பிறர் உடல்களிலும் விளங்கும் (பரமாத்மாவான) என்னைப் பகைக்கின்றனர். (பிறரை வெறுப்பது இறைவனை வெறுப்பதாகும்.)

அஹங்காரம் பலம் தர்பம்
காமம் க்ரோதம் ச ஸம்ஶ்ரிதா: |
மாம் ஆத்மபரதேஹேஷு
ப்ரத்விஷந்த: அப்யஸூயகா: || (591)

இப்படி வெறுக்குங் கொடியரை, அமங்கலரை, கசடரை, மக்கட்பதடிகளை, உலகில் அடிக்கடி அஸுரப் பிறப்புகளில் வீழ்த்துகிறேன்.

தான் அஹம் த்விஷத: க்ரூரான்
ஸம்ஸாரேஷு நராதமான் |
க்ஷிபாமி அஜஸ்ரம் அஶுபான்
ஆஸுரீஷு ஏவ யோனிஷு || (592)

குந்திபுத்ரா! அம்மடையர், ஜன்ம ஜன்மமாய் அஸுரப் பிறப்படைந்து (அவர்களுள்ளும் இலகும் பரமாத்மாவான) என்னை யடையாமல், அதோகதி யடைகின்றனர். (மனித விலங்காகவே வாழுகின்றனர்).

ஆஸுரீம் யோனிம் ஆபன்னா:
மூடா ஜன்மனி ஜன்மனி |
மாம் அப்ராப்ய ஏவ கௌந்தேய
ததோ யாந்தி அதமாம் கதிம் || (593)

காமம், குரோதம், லோபம் இவையே மூவகையான நரக வாயில்கள்; ஜீவனையழிப்பன இவையே; ஆதலின் இந்த மூன்றையும் விடுக! (பொறாமைக்காரன் மனமே நரகம்; சினம் நரகத்தீ; தீயகாமம் நரகவேதனை.)

த்ரிவிதம் நரகஸ்ய இதம்
த்வாரம் நாஶனம் ஆத்மன: |
காம: க்ரோதஸ் ததா லோப:
தஸ்மாத் ஏதத் த்ரயம் த்யஜேத் || (594)

இந்த மூன்று இருள் வாயில்களினின்று விடுபட்டே, மனிதன் ஆத்ம நலத்தைப் போற்றி உயர்ந்த நிலையடைகிறான்.

ஏதைர் : விமுக்த : கௌந்தேய
தமோத்வாரை : த்ரிபிர் நர : |
ஆசரதி ஆத்மன : ஸ்ரேய :
ததோ யாதி பராம் கதிம் || (595)

சாத்திர விதியை மீறி, தன்னிச்சைப்படி செய்வோன் வெற்றிபெறான், இன்புறான், உயர்நிலை யடையான்.

ய : ஸாஸ்த்ரவிதிம் உத்ஸ்ருஜ்ய
வர்ததே காமகாரத : |
ந ஸ ஸித்திம் அவாப்னோதி
ந ஸுகம் ந பராம் கதிம் || (596)

ஆதலின் செய்யத்தக்கது தகாததைத் தேர்வதில் உனக்கு சாத்திரமே பிரமாணம். இதைத் தெரிந்து, சாத்திரம் விதிக்கும் செயல்களைச் செய்யக்கடவாய்.

தஸ்மாத் ஸாஸ்த்ரம் ப்ரமாணம் தே
கார்யாகார்யவ்யவஸ்திதௌ |
ஞாத்வா ஸாஸ்த்ரவிதானோக்தம்
கர்ம கர்தும் இஹார்ஹஸி || (597)

*சாத்திரமென்பது வாழ்வு நெறி; மனித சமுதாயத்தின் ஒன்றிய வாழ்வு, ஒழுக்கம், தூய்மை, கலை, மதம், அறிவு, நாகரிகம் வளர அவ்வப்போது ஆகிய விதிகளின் தொகுப்பு.*

கடவுளறிவுடன் மனித ஜாதி தெய்வத் தன்மைக்கு ஈடேறும் நெறியையே சாத்திரம் காட்ட வேண்டும். அது மாசறு சாட்சியாளர் தமது ஆத்மானுபவத்தில், கடவுட்புலமையில், அறிந்து தெளிந்து, மாந்தர் அத்யாத்ம முன்னேற்ற மடைவதற்காக ஏற்பட்டது. தனது ஆசை யகந்தை வழியில் கண்டபடி செல்பவன் கண் கெட்டுக் கீழ் நிலையில், விலங்கு வாழ்வில் விழுவான். அகந்தை யொழிந்து, தன்னடக்கமும் முத்தூய்மையு மெய்தி, கடவுளறிவு துளிர்க்கு மட்டும் உலகிற்கெல்லாம் பொதுமறையான பெரியோரின் அருள் மொழிகளைப் போற்றி யொழுகுதல் வேண்டும். பிறகே அவனுக்குத் தனது கடவுளியல்பைக் கண்டொழுகும் சுதந்திரம் ஏற்படும். இதை மிகவும் உன்னதமான சாத்திரம்; அதையே ஒருவன் கருத்துடன் பற்றிநின்றால் சுத்த நிலைபெற்று இன்புறலாம். கண்ணன் தனது அன்பனை ஸாத்விக முறையிற் பயிற்றிப் பின்பு அனைத்தறனையும் அறவே விடுத்துத் தன்னையே சரண்புகும் உன்னத நெறிக்கே தயாராக்குகிறான்.

கீதா யோகம்
பதினாறாம் அத்தியாயம்
தேவாஸுர ஸம்பத் விபாக யோகம்
முற்றிற்று.

## ௬௨. முவ்வகை சிரத்தை.

அர்ஜுனன் கேட்கிறன் :

" ஆனல் சாத்திர விதிகளை விடுத்து, சிரத்தையுடன் (நம்பிக்கையுடன்) வழிபடுவோரின் நிலைமையென்ன, ஸத்வமா? ராஜஸமா? தாமதமா?"

யே ஸாஸ்த்ரவிதிம் உத்ஸ்ருஜ்ய
யஜந்தே ஸ்ரத்தயான்விதா: |
தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண
ஸத்வம் ஆஹோ ரஜஸ் தம: || (598)

சாத்திரம் காலத்திற்கேற்ப மாறுகிறது; அப்படி மாருவிடின் அது வழவழத்து, வழக்கற்றுப் போகிறது; மனித வாழ்வின் சுத்த சுதந்தர ஸமத்வ நலனுக்கே அது ஏற்பட்டது. ஒரு காலத்தில் வழங்கிய சாத்திர விதிகள், பிற்காலத்தில் மறுக்கப்பட்டுப் புதிய விதிகள் உண்டாகலாம்; ஸமதர்மமும் ஆத்மசக்தியும் மிகுந்துவரும் நாட்களில், பழைய வகுப்புப் பகுப்பறங்களும் போரறங்களும் பயனற்று வீழ்ந்துவிடலாம் மனிதஜாதியின் ஆத்மஞானம் முன்னேற முன்னேறப் புறத்தினின்று வற்புறுத்தப்படும் சாத்திர விதிகளின் அவசியமே இல்லாமற் போகலாம். மனித தர்மம் ஒரு ஜீவ நதியைப்போன்று நித்திய சச்சிதானந்த வாழ்வை நோக்கிச் செல்லுகிறது. புதுப்புது வாழ்வு நயங்களை அது வேண்டுகிறது; அகண்ட ஸமத்துவத்தின் பாதையிலுள்ள தடைக் கற்களைத் தகர்த்தே மனிதான்மா வீறிட்டுப் பாய்கிறது. புத்தர் புதிய ஸமத்வ நெறியைப் புகட்டினர்; ஏசுநாதர் பழமையும் புதுமையும் சேர்ந்த அன்பு நெறியை யியம்பினர்; மனிதஜாதி முழு

---

* XVII ச்ரத்தாத்ரய விபாக யோகம்.

தையும் அத்யாத்ம சுத்த சுதந்திர ஸமத்வ ஸத்ய ஜோதி வாழ்வில் ஒரு கடவுட் குலமாகச் சேர்க்கவே இன்று பாரத சக்தி பாடுபடுகிறாள். ஒவ்வொருவரும் எப்போதும் உண்மை யான தம் ஆத்ம வொளியை நோக்கியே கடவுளுணர் வுடன் சுதந்திரமாக, உலகளாவிய ஸமரஸத்துடன் வாழுங் காலம் வந்துகொண்டிருக்கிறது. மாறிக்கொண்டிருக்கும் சாத்திரங்களை விடுத்து, மனிதன் தனது தூய மனச் சாட்சி விட்டபடி சிரத்தையுடன் வாழ்வின் வேள்வியைச் செய்தால், அதன் பலனென்ன என்று விஜயன் வினவு கிறான்.

சிரத்தையால் காரியத்தில் மனம் ஒன்றுபடு கிறது.

பகவான் சொல்லுகிறார்:—ஸாத்வீகம் ராஜஸம் தாமதம் என, சிரத்தை மூவகைத்து; அது (சாத் திர அறிவில்லாமலே) மனித ரியல்பின் வழியே தோன்றும்.

த்ரிவிதா பவதி ஶ்ரத்தா
தேஹினாம் ஸா ஸ்வபாவஜா |
ஸாத்விகீ ராஜஸீ சைவ
தாமஸீ சேதி தாம் ஶ்ருணு || (599)

பாரதா, அவரவர் உள்ளக் கிடக்கைக் கேற்ற வாறே சிரத்தை பிறக்கிறது. மனிதன் சிரத்தா மயன்; எதனில் மனிதன் நம்புகின்றானோ அதுவே யாகிறான்.”

ஸத்வானுரூபா ஸர்வஸ்ய
ஶ்ரத்தா பவதி பாரத |
ஶ்ரத்தாமய: அயம்புருஷ:
யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ: || (600)

மனம்போல மங்கலம், நம்புதல்போல நலம். சிரத்தையினால் உண்மையும் செயலும் உள்ளிருந்து அரும்பும்; அதுவே நமது புறவாழ்வாகும்; சிரத்தையே மனிதன். தெய்வத்தன்மையே நமது நோக்கம்; அதில் சிரத்தை பூண்டால் அதுவேயாகலாம்; ஆனால் குணத்தையே மணம் பிடித்து மனிதவியல்பு செல்வதால், அததற்கேற்ற நம்புதலும், அந்த நம்புதலுக் கேற்ற வாழ்வும் செயலும் உண்டாகின்றன.

"ஸத்வ இயல்பினர் தேவரைப் போற்றுவர்; யக்ஷர் அரக்கரைத் தொழுவர் ராஜஸர்; பிரேத பூத கணங்களைத் தாமஸ ஜனங்கள் தொழுவர்.

யஜந்தே ஸாத்விகா தேவான்
யக்ஷ ரக்ஷாம்ஸி ராஜஸா: |
ப்ரேதான் பூதகணன் ச அன்யே
யஜந்தே தாமஸா ஜனா: || (601)

சாத்திர விதிகளை மீறி, இடம்பமும் அகந்தையுங்கொண்டு, காமமும், போகமும், வீரிய பலமும் மூண்டு, (கொலைகள் காயக்லேசங்களுடன் கூடிய) கொடிய விரதங்களைச் சிலர் செய்கின்றனர்.

அஸாஸ்த்ர விஹிதம் கோரம்
தப்யந்தே யே தபோ ஜனா: |
தம்பாஹங்கார ஸம்யுக்தா:
காம ராக பலான்விதா: || (602)

யாக்கையாய் நிற்கும் ஐம்பூதத் தொகுப்புகளையும், உள்ளுடலில் (அந்தக் கரணத்தில்) விளங்கும்

அந்தர்யாமியான என்னையும் வருத்தும் அந்த அறிவிலிகள் அசுர வைராக்யமுள்ளவர்களென்றறி."

கர்ஷயந்த: ஸரீரஸ்தம்
பூதக்ராமம் அசேதஸ:|
மாம்சைவ அந்த: ஸரீரஸ்தம்
தான் வித்தி ஆஸுரநிஸ்சயான் || (603)

வீண் ஹடங்கள், வேண்டாத உபவாஸாதிகள், சிறு தெய்வங்களுக்குப் பலியிடல், போன்ற கொடும் விரதங்கள் அருவருக்கத் தக்கன. உடலை ஆண்டவனின் கோயிலாய் எண்ணிப் போற்றவேண்டும். உடம்பார் வாடின் உயிரார் வாடுவர்.

## ௬௫. மூவகை உணவு.

"மாந்தர் விரும்பும் உணவும் மூவகை; அவ்வாறே வேள்வி, தவம் ஈகையுமாகும்; அவற்றின் வேறுபாடுகளையும் கேளாய்:

ஆஹாரஸ்து அபி ஸர்வஸ்ய
த்ரிவிதோ பவதி ப்ரிய:|
யஜ்ஞஸ்தபஸ்ததா தானம்
தேஷாம் பேதம் இமம் ஸ்ருணு || (604)

நீளாயுள், புத்தி, பலம், ஆரோக்யம் (நோயின்மை) இன்பம், இனிமை, இவற்றை வளர்ப்பன; (ஆரஞ்சு, திராக்ஷை போன்று) ரஸமுள்ளன, சுவை பொருந்தியன; (கொட்டை வகைகளைப் போன்று) எண்ணெய்ப் பசையுள்ளன, மெதுவாயுள்ளன; (நன்கு மென்றுண்ணும்படி) திடமாயுள்ளன; மனத்திற்குப் பிடித்ததாயுள்ள ஆகாரங்கள் ஸாத்விகர் விரும்புவன.

ஆயு: ஸத்வ பல ஆரோக்ய
ஸுக ப்ரீதி விவர்தனா: |
ரஸ்யா: ஸ்நிக்தா ஸ்திரா ஹ்ருத்யா
ஆஹாரா: ஸாத்விகப்ரியா: || (605)

கசப்பு, புளிப்பு, உப்பு, சூடு மிக்கன, (மசாலைகளைப்போன்று) எரிப்பும் உலர்ச்சியும் மிக்கன, தாகிப்பன—இவ்வுணவுகள் துயரும் பிணியும் விளைப்பன. இவையே ராஜஸர் விரும்புவன.

கட் வம்ல லவண அத்யுஷ்ண
தீக்ஷ்ண ரூக்ஷ விதாஹின: |
ஆஹாரா ராஜஸஸ்ய இஷ்டா:
து:கஸோகா மயப்ரதா: || (606)

நாட்பட்டது, சுவைகெட்டது, நாற்றமெடுத்தது, பழுதுபட்டது, எச்சிலானது, அசுத்தமானதும் தாமதர் விரும்பும் உணவுகள்.

யாதயாமம் கதரஸம்
பூதி பர்யுஷிதம் ச யத் |
உச்சிஷ்டம் அபி ச அமேத்யம்
போஜனம் தாமஸப்ரியம் || (607)

பால் பழம் கொட்டை வகைகள், பசுங் காய்கறிகள், கீரைகள், தானியங்கள், இவை நலமுடையன. அதிக உப்புரைப்பு புளிப்புள்ளவைகள் நோயுண்டாக்கும். உணவிற் சிறந்தது பழவகையே. அதற்கடுத்தது சுசி ருசியான சைவவுணவு. மிதமான ஸத்வாகாரமே யோகிக்கேற்றது. பேராசையோடு உண்ணும் எதுவும் நோயுணவாகும்.

பலன் விரும்பாது, விதி முறைப்படி செய்யத் தக்கதென்று மனந்தெளிந்து, செய்யப்படுவது ஸாத்விக வேள்வி.

அபலா காங்க்ஷிபிர்யஜ்ஞ :
விதித்ருஷ்டோ ய இஜ்யதே |
யஷ்டவ்யம் ஏவ இதி மன :
ஸமாதாய ஸ ஸாத்விக : || (608)

பாதரிற் சிறந்தோய்! இடம்பத்திற்காக, பலனைக் கருதிச் செய்யப்படுவது ராஜஸ வேள்வி.

அபிஸந்தாய து பலம்
தம்பார்தமபிசைவயத் |
இஜ்யதே பரத ஸ்ரேஷ்ட
தம் யஜ்ஞம் வித்தி ராஜஸம் || (609)

முறைதவறி, அன்னதானமின்றி, மந்திரமின்றி, ஈகையின்றி, சிரத்தை யின்றிச் செய்யப்படுவது தாமத வேள்வி.

விதிஹீனம் அஸ்ருஷ்டான்னம்
மந்த்ரஹீனம் அதக்ஷிணம் |
ஸ்ரத்தாவிரஹிதம் யஜ்ஞம்
தாமஸம் பரிசக்ஷதே || (610)

பிறர் பசி தணித்தல் அன்னதானம். உலகில் அறிவும், கலையும், தொழிலும், இன்பமும் பெருக, தக்கோர்க்கு ஈதலே தக்ஷிணை. கொடுப்பதை ஆண்டவன் பெயரால் கொடுக்கவேண்டும். மந்திரம் "ஓம் தத் ஸத்.

## ௬௪. முத்தவங்கள்.

தேவர், அந்தண்மையாளர், பெரியோர், அறிஞரைப் பணிதல்; தூய்மை, நேர்மை, பிரமசரியம் (புல னடக்கம்), அஹிம்சை, (நோவுறுத்தாமை) இவையே உடலாற் செய்யுந் தவமாகும்.

தேவ த்விஜ குரு ப்ராஜ்ஞ
பூஜனம் ஸௌசம் ஆர்ஜவம் |
ப்ரஹ்மசர்யம் அஹிம்ஸா ச
ஸாரீரம் தப உச்யதே || (611)

இனிமையும், நலமும் உண்மையுமாகிப் பிறரை வருத்தாச் சொல்லும், (அறிவு, கலை, நல்லொழுக்கம், ஆத்ம ஞானம், கடவுள் நம்பிக்கையைத் தூண்டும்) கல்விப் பயிற்சியும் வாக்காற் செய்யும் தவமெனப் படும்.

அனுத்வேக கரம் வாக்யம்
ஸத்யம் ப்ரிய ஹிதம் ச யத் |
ஸ்வாத்யாயாப்யஸனம் சைவ
வாங்மயம் தப உச்யதே (612)

(காமம் வெகுளி மயக்கமற) மனத்தெளிவு, அமரிக்கை, மௌனம், தன்னடக்கம், நினைப்புத் தூய்மை இத்தகையன மனத் தவமெனப்படும்.

மன : ப்ரஸாத : ஸௌம்யத்வம்
மௌனம் ஆத்மவிநிக்ரஹ : |
பாவஸம்ஸுத்தி : இதி ஏதத்
தபோ மானஸம் உச்யதே || (613)

மனத்தினின்றே வாக்கு எழும்; மனமடங்கினல் வாக்கடங்கும். ஆதலின் வாய் மௌனமும் மனச்செயலே,

உள்ளப் பொருளில் ஊன்றி யிருத்தல், அறிவி லடக்கம் இவையே மௌனம்.

பலனைக் கருதாத நிஷ்காம யோக யுக்த புருஷனால், பரம சிரத்தையுடன் மேற்கொள்ளப்படும் அந்த முத்தவங்களும் ஸாத்விகமென்பர்.

ஶ்ரத்தயா பரயா தப்தம்
தபஸ்தத் த்ரிவிதம் நரை: |
அபலாகாங்க்ஷிபிர் யுக்தை:
ஸாத்விகம் பரிசக்ஷதே || (614)

பிறர் மதிப்பும், கௌரவமும் மரியாதையும் வேண்டி, பெருமைக்காகச் செய்யப்படுவது ராஜஸ தபஸ் எனப்படும்; அது நிலைப்பற்றது; சலிப்புற்றழிவது.

ஸத்கார மான பூஜார்தம்
தபோ தம்பேன சைவ யத் |
க்ரியதே தத் இஹ ப்ரோக்தம்
ராஜஸம் சலம் அத்ருவம் || (615)

மடப்பிடிவாதத்துடன் தன்னை வருத்தி, பிறரைக் கெடுக்கச் செய்யப்படுவது தாமதத் தவம் எனப்படும்.

மூடக்ராஹேணா ஆத்மன: யத்
பீடயா க்ரியதே தப: |
பரஸ்ய உத்ஸாதனார்தம் வா
தத் தாமஸம் உதாஹ்ருதம் || (616)

## ௬௫. மூவகை ஈகை.

இனி மூவித ஈகையறிக;—"கொடுத்தற்குரிய தென்று, இடம், காலம், ஏற்பவன் தகுதி நோக்கி, கைம்மாறு வேண்டாது கொடுக்கும் கொடையே ஸாத்வீகமெனப்படும்."

அறிவு, அறம், தவம், தொழில், மனித ஜாதியின் உன்னதி ஒற்றுமை ஆத்மவுன்னதி முதலிய முயற்சிகளுக்கும், காலத்திற் கேற்றபடி உலக நலத்திற்கான இயக்கங்களுக்கும் பலவகையில் ஈவது சாத்விக ஈகையாகும்.

தாதவயம் இதி யத் தானம்
தீயதே அனுபகாரிணே |
தேஸே காலே ச பாத்ரே ச
தத்தானம் ஸாத்விகம் ஸ்ம்ருதம் || (617)

மனக் கசப்புடன் கைம்மாறு கருதி, பலன் எதிர்பார்த்து, கொடுக்கப்படுவது ராஜஸமாகும்.

யத் து ப்ரத்யுபகாரார்தம்
பலம் உத்திஸ்ய வா புன: |
தீயதே ச பரிக்லிஷ்டம்
தத் தானம் ராஜஸம் ஸ்ம்ருதம் || (618)

மரியாதையின்றி, அலட்சியமாக, இடத்தகுதி, காலத்தகுதியற்று, பாத்திரமின்றி தகாதார்க்குத் தரப்படுவது தாமஸ தானமெனப்படும்."

அதேஸ காலே யத்தானம்
அபாத்ரேப்யஸ்ச தீயதே |
அஸத்க்ருதம் அவஜ்ஞாதம்
தத் தாமஸம் உதாஹ்ருதம் || (619)

குருட்டுத்தனமாக, ஆராய்ச்சியின்றி மூடக்கொள்கைகளால் அளிக்கப்படுவதும், எற்பவனைச் சோம்பேறியாக்குவதும், வீண் பயனுறத்தச் செய்வதும் அதம தானமாகும். உலகம் தெய்வத் தன்மையி லோங்க, தன்னை முற்றும் ஆண்டவனுக்கு அருட்கருவியாகக் கொடுத்தலே உத்தமோத்தமமாகும்.

## ௯௯. ஓம் தத் ஸத்.

இனி மந்திரம் விளக்கப்படும். சச்சிதானந்த பரப்ரம்மத்தை "ஓம் தத் ஸத்" என்னும் முப்பெயர் குறிக்குமென்பர். அதனுல், முன்பு வேதங்களும், ப்ராம்மணங்களும், யக்ஞங்களும் வகுக்கப்பட்டன.

ஓம்தத்ஸத் இதி நிர்தேஸ:
ப்ரஹ்மணஸ் த்ரிவித: ஸ்ம்ருத: |
ப்ராஹ்மணஸ்தேன வேதாஸ்ச
யஞாஸ்ச விஹிதா: புரா || (620)

ஆதலால் முறைப்படி செய்யும் வேள்வி, ஈகை, தவச் செயல்களை, ப்ரம்ம வாதிகள், "ஓம்" என்று உச்சரித்துத் தொடங்குகின்றனர்.

தஸ்மாத் ஓம் இதி உதாஹ்ருத்ய
யஞ தான தப: க்ரியா: |
ப்ரவர்தந்தே விதானேக்தா:
ஸததம் ப்ரஹ்மவாதினம் || (621)

பலவகையான வேள்வியும் தவமும், நற்செயல்களும், ஈகையும் கைம்மாறு வேண்டாமல் மோட்

சத்தை விரும்புவோரால் 'தத்' என்ற உச்சரிப்புடன் செய்யப்படுகின்றன.

தத் இதி அனபிஸந்தாய
பலம் யஜ்ஞதப:க்ரியா: |
தான க்ரியாஸ்ச விவிதா:
க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி: || (622)

பார்த்தா, "உள்ளது, உயர்ந்தது" என்ற பொருளில் "ஸத்" என்பது வழங்கப்படுகிறது. உத்தம மங்கல வினைகளில், "ஸத்" சப்தம் வழங்கப்படுகிறது.

ஸத்பாவே ஸாதுபாவே ச
ஸத் இதி ஏதத் ப்ரயுஜ்யதே |
ப்ரஸஸ்தே கர்மணி ததா
ஸத் ஸப்த: பார்த் யுஜ்யதே || (623)

வேள்வி, தவம், ஈகையிலும் இருப்பது "ஸத்" எனப்படுகிறது; "தத்" எனும் ப்ரம்மத்தின் பொருட்டு (ப்ரம்மார்ப்பணமாகச்) செய்யப்படும் கர்மமும் ஸத் என்றே சொல்லப்படுகிறது.

யஜ்ஞே தபஸி தானே ச
ஸ்திதி: ஸத் இதிசோச்யதே |
கர்ம சைவ ததர்த்தியம்
ஸத் இதி ஏவ அபிதீயதே || (624)

பார்த்தா! சிரத்தை யின்றிச் செய்யப்படும் வேள்வியும், ஈகையும், தவமும், வினையும், "அஸத்" எனப்படும். அது இகத்திலும் பரத்திலும் நலம் பெறாது.

அச்ரத்தயா ஹுதம் தத்தம்
தபஸ்தப்தம் க்ருதம் ச யத் |
அஸத் இதி உச்யதே பார்த
ந ச தத் ப்ரேத்ய நோ இஹ || (625)

ஓம் தத் ஸத் என்ற மந்திரத்துடன், "பரமாத்மாவே, நீயே உலகம், நீயே சக்தி, நீயே உண்மை, நீயே இன்பம், நீயே நன்மை, நீயே எல்லாம், இறைவன், உலகம், உயிர்கள் எல்லாம் நீயே" என்று எண்ணி முழு நம்பிக்கையுடன் வாழ்வனைத்தையும் அவனுக்கே வேள்வியாக்குவதே உன்னதமான தானம், தவம், யக்ஞம், ஞானம், பக்தி, கர்மம், எல்லாமாகும்! ஓம் தத் ஸத்!

கீதா யோகம்
பதினேழாம் அத்தியாயம்
ச்ரத்தாத்ரய விபாக யோகம்
முற்றிற்று.

## ௬௭. தியாகமும் துறவும்

இந்த இறுதியத்தியாயம் கீதையின் மஹா வாக்கியத்தை முழக்குகிறது.

அர்ஜுனன் வினவுகிறன்:

"வலியதோளாய்! ஹ்ருஷீகேச! கேசியைக் கொன்றோய்! ஸந்யாஸம் (துறவு) தியாகம் (விடுகை) இவற்றின் உண்மையைத் தனித்தனி அறிய விரும்புகிறேன்."

அர்ஜுன உவாச:

ஸந்யாஸஸ்ய மஹாபாஹோ
தத்வம் இச்சாமி வேதிதும் |
த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேஸ
ப்ருதக் கேஸி நிஷூதன || (626)

வீட்டை யொழித்துக் காட்டிற்கோடி, காவியணிந்து கந்தாம் வசித்து, வயிற்றைக் கட்டி, உடலை யுலர்த்தி வாழ்வை வெறுத்தலே, பொதுவாக, ஸந்யாஸம் எனச் சாற்றப்படுகிறது. இப் புறத்துறவு பெரும்பயனின்று! கீதையின் துறவு எத்தகையது எனக் காண்போம்:—

"காம்ய கர்மங்களை விடுகையே ஸந்யாஸமெனக் கவிகள் அறிகின்றனர். (வினைமுதல்வன், இறைவன்; செய்வது சக்தி என்றறிந்து) எல்லாச் செயல்களின் பயன்களையும் ஈசுவரார்ப்பணமாக்கி விடுவதே தியாகம் என்று அறிஞர் கூறுவர்.

---

* XVIII தியாகம்.

காம்யானாம் கர்மணாம் ந்யாஸம்
ஸந்யாஸம் கவயோ விது: |
ஸர்வகர்ம பலத்யாகம்
ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணா: || (627)

வினை மாசுள்ளது; அது விடுதற்குரியது என்று சில அறிஞர் சொல்லுகின்றனர்; வேறு சில அறிஞர், வேள்வி, ஈகை, தவச் செயல்கள் விடுதற்கரியன என்று சொல்லுகின்றனர்.

த்யாஜ்யம் தோஷவத் இதி ஏகே
கர்ம ப்ராஹுர் மனிஷிண: |
யஞ தான தப: கர்ம
ந த்யாஜ்யம் இதி சாபரே || (628)

பாதரிற் சிறந்தோய்! தியாகத்தைக் குறித்து எனது முடிவைக் கேள்! புருஷப்புலியே, தியாகம் மூன்றுவிதம் எனச் சொல்லப்பட்டுள்ளது.

நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர
த்யாகே பரதஸத்தம |
த்யாகோ ஹி புருஷவ்யாக்ர
த்ரிவித: ஸம்ப்ரகீர்தித: || (629)

வேள்வி, ஈகை, தவச்செயல்கள் விடுதற்குரியன வன்று; அவை செய்தற்குரியனவே; வேள்வியும், ஈகையும், தவமும், புத்திமான்களைப் புனிதப்படுத்துவன.

யஞதான தப: கர்ம
ந த்யாஜ்யம் கார்யம் ஏவ தத் |
யஞோ தானம் தபஶ்சைவ
பாவனானி மனிஷிணாம் || (630)

*பார்த்தா! இவையும் இவைபோன்ற காரியங்களும், பற்றையும் பயனையும் விடுத்துச் செய்தற்குரியன வென்பதே என் உறுதியான நன்மதம்.*

ஏதானி அபி து கர்மாணி
ஸங்கம் த்யக்த்வா பலானிச |
கர்தவ்யானி இதி மே பார்த
நிஸ்சிதம் மதமுத்தமம் || (631)

*முறையான செயலை நீத்தல் அழகல்ல; அறியாமையினாலவற்றை விடுதல் தாமதத்யாகமென்பர்.*

நியதஸ்ய து ஸந்யாஸ:
கர்மண: ந உபபத்யதே |
மோஹாத் தஸ்ய பரித்யாக:
தாமஸ: பரிகீர்தித: || (632)

*இது துன்பம், உடல் வருத்தும் என்றஞ்சி ஒரு செயலை விடுவோன், ராஜஸத்யாகி யாவன்; தியாக பலம் அவனுக்கு வாய்க்காது.*

து:கமித்யேவ யத்கர்ம
காயக்லேஸ பயாத் த்யஜேத் |
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம்
நைவ த்யாக பலம் லபேத் || (633)

*அர்ஜுனா! இது செய்தற்குரியது என்று, முறையான செயலை, பற்றும் பயனும் விடுத்துப் புரிவது ஸாத்வீக த்யாகமெனப்படும்.*

கார்யமித்யேவ யத்கர்ம
நியதம் க்ரியதேऽர்ஜுன |
ஸங்கம் த்யக்த்வா பலம் சைவ
ஸ த்யாக: ஸாத்விகோ மத: || (634)

வாழ்வை எல்லாம், அத்யாத்ம யோகமாக்கி, மனித ஜாதி முழுதும் தெய்வஜாதியாக அகண்ட,ஸமரஸானந்தத்தில் வாழுதற்குரிய செயல்களே முறையான செயல்கள். அவற்றை எதுவரினும் அஞ்சாது, தளராது, பதறாது, நம்மை நடத்துவோன் கடவுள் என்றறிந்து அவனாணையைப் போற்றிப் புரிதல் வேண்டும். வேள்வி, தவம், தானம் எல்லாம் அதுவே.

சுத்த ஸாத்விகி, ஐயமறுத்தவன், மேதாவியான தியாகி, செய்யத்தக்க காரியத்தை, அசுகம் என்று வெறுப்பதில்லை ; சுகமென்று பற்றுறுவதுமில்லை.

ந த்வேஷ்டி அகுஸலம் கர்ம
குஸலே ந அனுஷஜ்ஜதே |
த்யாகீ ஸத்வஸமாவிஷ்ட :
மேதாவி சின்னஸம்ஸய : || (635)

அவன் சாதாரண மனிதருக்குரிய வாதம், சந்தேகம், கூச்சம், தாமதமின்றி, உன் துறவுடன், சமசித்தத்துடன், தன்னலமற்று, இகபர சகத்திலும் இச்சையின்றி, துன்பம் வரினும் அச்சமின்றி ஆண்டவனுக்காகவே வினை வேள்வியைத் துணிந்து செய்கிறான்.

யாக்கைவாழ் வுள்ளவன் வினைகளை முற்றும் விடுத்தலரிது ; வினைப்பயனை விடுத்தவனே தியாகி யெனப்படுகிறான்.

ந ஹி தேஹப்ருதா ஸக்யம்
த்யக்தும் கர்மாணி அஸேஷத : |
யஸ்து கர்மபலத்யாகீ
ஸ த்யாகீ இதி அபிதீயதே || (636)

அவ்வாறு தியாகிபற்றவன், விரும்புவது, விரும்பாதது, இரண்டுங் கலந்தது என மூவகைக் கர்ம

பலனை இறந்தபின் அடைகிறான்; (வினை, பயன் இரண்டிலும் பற்றைத்) துறந்தவனுக்கு எக்காலும் அத்தகைப் பலன் இல்லை.

அநிஷ்டம் இஷ்டம் மிஸ்ரம் ச
த்ரிவிதம் கர்மண: பலம் |
பவதி அத்யாகினும் ப்ரேத்ய
ந து ஸந்யாஸினும் க்வசித் || (637)

எனெனில் அத்தகைய ஆத்மஞானி 'நான், எனது' என்பதொழித்தவன்; செய்யாமற் செய்பவன்; 'செய்வ தியற்கை; பலன் உண்ப திறைவன்' என்பதறிந்தவன்.

"திண்புயத்தனே! எல்லாக் காரிய நிறைவிற்கும் சாங்கிய சித்தாந்தத்திற் சொல்லப்பட்ட இந்த ஐந்து காரணங்களையும் என்னிடம் நன்கறிவாயாக :-

பஞ்ச ஏதானி மஹாபாஹோ
காரணானி நி போத மே |
ஸாங்க்யே க்ருதாந்தேப்ரோக்தானி
ஸித்தயே ஸர்வ கர்மணும் || (638)

அவ்வைந்தாவன :- (க) அதிஷ்டானம் (இடம், உடல்) (உ) கர்த்தா (செய்வோன், ஜீவன்) (ஙு) பல விதக் கரணங்கள் (அந்தக்கரணமும், புறக்கரணமு மான பொறிபுலன்கள், பூதங்கள்) (ச) சேட்டைகள் (பலவகைப்பட்ட செயல் முயற்சிகள்) (ரு) தைவம் (காரியங்களை மறைவாயிருந்து இயக்கும் அமானுஷ்ய மான சக்திகள்)

அதிஷ்டானம் ததா கர்தா
கரணம் ச ப்ருதக்விதம் |
விவிதாவ்ஸச ப்ருதக் சேஷ்டா:
தைவம் சைவாத்ர பஞ்சமம் || (639)

சரியாயினும், சரியற்றதாயினும் மாந்தர் மன மொழி மெய்களால் எவ்வினை தொடங்கினும், மேற் சொன்ன ஐந்தே அச்செயல்களின் காரணம்.

ஶரீர வாங் மனோபி : யத்
கர்ம ப்ராரபதே நர : |
ந்யாய்யம் வா விபரீதம் வா
பஞ்சைதே தஸ்ய ஹேதவ : || (640)

இவ்வாறிருந்தும் பண்படாத புத்தியால் கேவலம் சுத்தவடிவான ஆன்மாவை, கர்த்தா என்று காணும் மூடன், உண்மைக் காட்சியற்றவனே.

தத்ர ஏவம் ஸதி கர்தாரம்
ஆத்மானம் கேவலம் து ய : |
பஶ்யதி அக்ருத புத்தித்வாத்
ந ஸ பஶ்யதி துர்மதி : | (641)

(செய்வதனைத்தும் இயற்கையின் மூலம் ஆண்டவனிச்சையே என்றறிந்து) நான் செய்கிறேன் என்ற ஆணவமற்றவன், (இவ்வினையும் பயனும் என்னதல்ல என்று) புத்தியில் பற்றில்லான், இவ்வுலகனைத்தையும் கொன்றாலும் கொலையாளியாகான்; பாவப் பற்றுறமாட்டான்.

யஸ்ய நாஹம் க்ருதோ பாவோ
புத்திர் யஸ்ய ந லிப்யதே |
ஹத்வாபி ஸ இமாந் லோகான்
ந ஹந்தி ந நிபத்யதே || (642)

அகர்த்தையில்லான், ஆணவமில்லான், தனக்காக எதையுஞ் செய்யான் எவ்வுயிரையுங் கொல்லான்; புசிப்பது முதல் போர்புரிவது மட்டும் அவன் ஆண்டவன் ஆணை

யையே பின்பற்றுகிறான். அகந்தை யாணவமற்றால் நமது உண்மையை அறியலாம்; நானற்ற விடம் "அது" தானு கத் தோன்றும். இறைவனிச்சையை இயற்கையே நமது நிமித்தகாரணங்கொண்டு செய்வதைக் காணலாம். காற் றும், புயலும், வெள்ளமும் தீயும் வேறு இயற்கைவன்மை களுஞ் செயல்புரிவது போலவே, ஆணவ மற்றவன் பற்றின்றிச் செயலாற்றுவான். இதை வைத்துக்கொண்டு சாதாரணமாக உலகில் நடக்கும் கொலை, போர்களுக்குச் சமாதானஞ் சொல்லக்கூடாது. பிறர்புவி கவரவும், பேராசையுடனும், சினப்பேய் கொண்டும், செய்வதெல் லாம் கொடிய தீமையாகும். ஆணவமற்றவனுக்கு இவ் வாசை யசுர்தைப்பேய்களிரா. அவன் தனக்காக எதையுஞ் செய்பவனல்லன்; எவர் தீமையும் நோற்பவனல்லன்.

## சஅ. மூன்று பண்புகள்

"ஞானம் (அறிவு), ஞேயம் (அறிபொருள்) பரிஞ்ஞாதா (அறிவோன்) இம் மூன்றுமே வினை யெழுச்சி தருவன; கர்த்தா (செய்வோன்) கரணம் (கருவி) கர்மம் இம்மூன்றும் வினையமைப்பு.

ஞானம் ஞேயம் பரிஞாதா
த்ரிவிதா கர்மசோதநா |
கரணம் கர்ம கர்தேதி
த்ரிவித: கர்மஸங்க்ரஹ: || (643)

குணவகையில், ஞானம், கர்மம், கர்த்தாவும், குணபேதத்தால் மூவிதமாகச் சொல்லப்பட்டன; அவற்றையும் உள்ளவாறு கேள்.

ஞானம் கர்ம ச கர்தா ச
த்ரிதைவ குணபேதத: |
ப்ரோச்யதே குணஸங்க்யானே
யதாவத் ச்ருணு தான்யபி || (644)

## ஞானம்

தனித் தனி நிற்கும் உயிர்களனைத்திலும் அழிவற்ற ஒரு தனி முதற்பொருள் (சாதி சமயபேதமின்றி) பிரிவற்றிருப்பதைக் காணும் அறிவு ஸாத்விகமென்றறி.

ஸர்வபூதேஷு யேனைகம்
பாவம் அவ்யயம் ஈக்ஷதே |
அவிபக்தம் விபக்தேஷு
தத் ஞானம் வித்தி ஸாத்விகம் || (645)

உயிர்க்குலமனைத்திலும் தனித் தனியாக, பல வகைத் தன்மைகளை வேறு படுத்திக் காண்பது ராஜஸம்.

ப்ருதக்த்வேன து யத் ஞானம்
நானா பாவான் ப்ருதக்விதான் |
வேத்தி ஸர்வேஷு பூதேஷு
தத் ஞானம் வித்தி ராஜஸம் || (646)

தாமத அறிவு, ஒரகமான ஒன்றையே பற்றி, காரணங் கருதாது அதையே அனைத்துமென்று பிடித்து நிற்கும்; அது உண்மையற்றது; அற்பத்தனமானது.

யத் து க்ருத்ஸ்னவத் ஏகஸ்மின்
கார்யே ஸக்தம் அஹைதுகம் |
அதத்வார்தவத் அல்பம் ச
தத் தாமஸம் உதாஹ்ருதம் || (647)

கர்மம்,

பலன் விரும்பாதவனால், விருப்பு வெறுப்பின்றி, பலப்பற்றின்றி, செய்யப்படும் முறையான செயல் ஸாத்விகமெனப்படும்.

நியதம் ஸங்கரஹிதம்
அராகத்வேஷத : க்ருதம் |
அபலப்ரேப்ஸுனா கர்ம
யத் தத் ஸாத்விகம் உச்யதே || (648)

பலனிச்சையுள்ளவன் அல்லது அஹங்காரியால் மிகவுழைப்புடன் செய்யப்படும் செயல் ராஜஸமெனப்படும்.

யத் து காமேப்ஸுனா கர்ம
ஸாஹங்காரேண வா புன : |
க்ரியதே பஹுலாயாஸம்
தத் ராஜஸம் உதாஹ்ருதம் || (649)

பின்வருவதையும், அழிவையும், இன்னலையும், வினைத்திறனையும் நோக்காது, அறிவின்மையால் ஆரம்பிக்கப்படுவது தாமதச் செய்கையாகும் (முன் பின் பாராமல், மூடத்தனமாகத் தாமதன் செய்வான்).

அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாம்
அனவேக்ஷ்ய ச பௌருஷம் |
மோஹாத் ஆரப்யதே கர்ம
யத் தத் தாமஸம் உச்யதே || (650)

## கர்த்தா.

(புகழ்வேண்டுமென்னும்) பற்றில்லாதான் அகந்தையற்றவன்; உறுதித்துணிவும் ஊக்கமுமுடையான், வெற்றிதோல்வியால் விகாரமெய்தான், அவனே ஸாத்விகச்செயலோன் என்பர்.

முக்தஸங்க: அனஹம்வாதீ
த்ருத்யுத்ஸாஹ ஸமன்வித: |
ஸித்த்யஸித்த்யோர் நிர்விகார:
கர்தா ஸாத்விக உச்யதே || (651)

(புகழில்) ஆசையுடையோன், வினைப்பயன் விரும்புவோன், லோபி, பிறரைவருத்துவோன், அசுத்தன், (தான்செய்யும் போர் முதலிய வினைகளில் வரும்) மகிழ்விலும் துயரிலும் கட்டுண்டவனே ராஜஸ கர்த்தா என்னப்படுவான்.

ராகீ கர்மபலப்ரேப்ஸு:
லுப்தோ ஹிம்ஸாத்மக: அஶுசி: |
ஹர்ஷ ஶோகான்வித: கர்தா
ராஜஸ: பரிகீர்தித: || (652)

அக்கரையற்றவன், பயிற்சியற்றவன் (அநாகரிகன்), முரட்டுமடையன், வஞ்சன், பிறரைச் செருத்து வெறுப்போன், தூங்குமூஞ்சி, மந்தன், காலங்கடத்துவோனுகிச் செயல்புரிவோன் தாமத கர்த்தா.

அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த:
ஶட: நைஷ்க்ருதிக: அலஸ: |
விஷாதீ தீர்கஸூத்ரீ ச
கர்தா தாமஸ உச்யதே || (653)

## புத்தி.

தனஞ்ஜயா! புத்தி மனத்திண்மை தாரண சக்தியின் பேதமும் குண வகையால் மூவகை யாவதைத் தனித் தனியே முற்றுங் கூறுகிறேன் கேள்.

புத்தேர் பேதம் த்ருதேஸ்சைவ
குணத: த்ரிவிதம் ஸ்ருணு |
ப்ரோச்யமானம் அஸேஷேண
ப்ருதக்த்வேன தனஞ்ஜய || (654)

ப்ரவிருத்தி (முயற்சி) நிவ்ருத்தி (ஒழிவு), கார்யம் (செயற்குரியது) அகார்யம் (செய்கலாகது) அஞ்சத்தக்கது, துணியத்தக்கது, கட்டுப்படுத்துவது, விடுதலை தருவது இன்னதென்பதைத் தெளிந்தறியும் புத்தி ஸாத்விகம். (ஜனகனைப் போன்ற ப்ரவிருத்தியும் சுகனைப் போன்ற நிவ்ருத்தியும் ஒருவனிடம் சேர்ந்திருக்கவேண்டும்.)

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச
கார்யாகார்யே பயாபயே |
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி
புத்தி: ஸா பார்த ஸாத்விகீ || (655)

பார்த்தா! தர்மம் அதர்மம், கார்யம், அகார்யத்தை உள்ளபடி பகுத்தறியாதது ராஜஸ புத்தியாகும் (வீரிய வகத்தைக்குட்பட்ட ராஜஸ புத்தி தன்னல ஆசை நிறைவேற்றத்தில் அடங்காத்தாகமுள்ளது).

யயா த⁴ர்மம் அத⁴ர்மம் ச
கார்யம் ச அகார்யம் ஏவ ச |
அயதா²வத் ப்ரஜாநாதி
பு³த்³தி⁴ ஸா பார்த² ராஜஸீ || (656)

*பார்த்தா! இருள் மூண்டு, அதர்மத்தை அற மாகக் கருதி, அனைத்தையும் விபரீதமாகக் (தாறு மாறாக) காண்பது தாமஸ புத்தி.*

அத⁴ர்மம் த⁴ர்மமிதி யா
மன்யதே தமஸாவ்ருதா |
ஸர்வார்தா²ன் விபரீதான் ச
பு³த்³தி⁴: ஸா பார்த² தாமஸீ || (657)

## மனத்திண்மை (தாரணை)

*பார்த்தா, மனம் உயிர், புலன்களை யோகத்தால் விலகாது நிறுத்தக்கூடிய திண்மை ஸாத்வீகமானது.*

த்⁴ருத்யா யயா தா⁴ரயதே
மன: ப்ராணேந்த்³ரியக்ரியா: |
யோகே³ன அவ்யபி⁴சாரிண்யா
த்⁴ருதி: ஸா பார்த² ஸாத்விகீ || (658)

*அர்ஜுனா! பார்த்தா! பலத்தைக்கருதி, பற்று மிக்கவன், அறம் பொருள் இன்பங்களிற் பூணும் உறுதி ராஜஸத்திண்மையாகும்.*

யயா து த⁴ர்ம காமார்தா²ன்
த்⁴ருத்யா தா⁴ரயதே அர்ஜுன |
ப்ரஸங்கே³ன ப²லாகாங்க்ஷீ
த்⁴ருதி: ஸா பார்த² ராஜஸீ || (659)

பார்த்தா, உறக்கம், அச்சம் துயரம், கலக்கம், உன்மத்தம் இவற்றை யொழிக்கமாட்டாத கெடு மதியாளன் உறுதி தாமதமானது.

யயா ஸ்வப்னம் பயம் வோகம்
விஷாதம் மதம் ஏவ ச |
ந விமுஞ்சதி துர்மேதா:
த்ருதி: ஸா பார்த்த தாமஸீ || (660)

சுகம்

(மனிதான்மா நாடும்) சுகமும் மூன்றுவித மானது; அதைக்கேள் பாரதக் காளையே! பயிலப் பயில இன்ப மூட்டித் துன்பஞ் சிதைக்கும்;

ஸுகம் து இதானீம் த்ரிவிதம்
ஸ்ருணு மே பரதர்ஷப |
அப்யாஸாத் ரமதே யத்ர
து:காந்தம் ச நிகச்சதி || (661)

ஸாதனாரம்பத்தில் (மிக வருந்தி முயலவேண்டி யிருப்பதால்) நஞ்சுபோலும், முடிவில் அமுதம்போலும்; அது தனது புத்தித் தெளிவில் தோன்றுவது; அத்தகை யின்பம் ஸாத்விகம் எனப்படும்.

யத் தத் அக்ரே விஷம் இவ
பரிணாமே அம்ருதோபமம் |
தத்ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தம்
ஆத்ம புத்திப்ரஸாதஜம் || (662)

இச்சுகம் புறத்திலிருந்து வருவதன்று; இது உள்ளே மனத் தெளிவிலும் அமைதியிலும் மலர்வது. பண்படாத தேகேந்திரியங்கள், அடங்கா மனம் வீரிய ஆசைகள் இவற்

திற்கு முதலில் இது நஞ்சுபோலக் கசக்கும்; பிறகே இனிக்கும்; இந்த ஸாத்விக சுகத்தையுந் தாண்டிய அத்யாத்ம இன்பமே நித்திய இன்பம்.

"விஷயேந்திரியங்களின் சேர்க்கையால், முதலில் அமுதைப்போன்று (வசப்படுத்தி), முடிவில் நஞ்சைப்போன்று (இன்னல் செய்யும்) சுகம் ராஜஸமானது."

விஷயேந்த்ரிய ஸம்யோகாத்
யத் தத் அக்ரே அம்ருதோபமம் |
பரிணமே விஷம் இவ
தத் ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் || (663)

ராஜஸ சுகபோகங்கள் போலி இனிப்பால் வசப்படுத்தி கசப்பும் வெறுப்பும், துயரும் பிணியும், வயாற்றமுமாக முடியும்.

"துயில் மந்தம், அசட்டையில் தோன்றி, முதலிலும் முடிவிலும், தன்னை முற்றும் மயக்கும் சுகம் தாமதமானது.

யத் அக்ரே ச அனுபந்தே ச
ஸுகம் மோஹனம் ஆத்மன: |
நித்ராலஸ்ய ப்ரமாதோத்தம்
தத் தாமஸம் உதாஹ்ருதம் || (664)

மண்ணிலும், வானகத் தேவரிடையுங் கூட, இயற்கையிற் பிறந்துள இம் முக்குணங்களி னின்று விடுபட்ட உயிர் எதுவுமில்லை." (ஏனெனில் அகில மனைத்தும் முக்குண மாயா விகாரமே).

ந தத் அஸ்தி ப்ருதிவ்யாம் வா
திவி தேவேஷு வா புன : |
ஸத்வம் ப்ரக்ருதிஜைர் முக்தம்
யத் ஏபி : ஸ்யாத் த்ரிபிர் குணை : || (665)

## * ௯௯. தன்மையும், தன்னறமும்.

தெய்வ வாழ்விற்குத் துணையாக ஸாத்விக வாழ்வைக் கீதை உபதேசிக்கிறது. இயல்பாகவே ஸாத்வீகன் அத்யாத்ம நிலைக்குப் படிப்படியாக உயர்ந்து, முக்குணமும் இருவிகற்பமும் கடந்த சுத்த முக்த ஸமத்துவ ஜோதி வாழ்வை யடைகிறான். ஆனால் இந்த ஸத்வ நிலை எடுத்தவுடனே கிடைத்தலரிது. மக்களியல்பும், செயல்வகையும் மனப்பான்மையும் வேறுபடுவதால், ஒவ்வொருவனுடைய தன்மைக்கும் ஏற்றவாறே அவனுடைய வாழ்வின் பண்பு அமைகிறது ; அதுவே அவனுக்குத் தன்னறம், சுதர்மம், ஆகிறது. மனிதரிடை இச் சுதர்மம் நான்கு பான்மையாக நிலவுகின்றது :—

“பரந்தபா ! அந்தணர், வீரர், வணிகர், பணிஞரின் தொழில்கள் அவரவர் தன்மையின் விளையுங் குணங்களுக் கேற்ப வகுக்கப்பட்டுள்ளன.

ப்ராஹ்மண க்ஷத்ரியவிஸாம்
ஸூத்ராணம் ச பரந்தப |
கர்மாணி ப்ரவிபக்தானி
ஸ்வபாவ ப்ரபவைர் குணை : || (666)

---

XVIII : 1—40 மோக்ஷ ஸந்யாஸ யோகம்.

* XVIII 41—48.

அந்தணர் தன்மையி லுதிக்கும் வினைகளாவன:- சமம் (உள்ளமைதி) தமம் (புலனடக்கம்) தவம், உட்புறத் தூய்மை பொறுமை, நேர்மை, ஞானம், விக்ஞானம் (பரமாத்ம தத்வானுபவஞானம்) ஆஸ்திக புத்தி இவையாம்.

ஶமோ தமஸ்தப: ஶௌசம்
க்ஷாந்தி: ஆர்ஜவம் ஏவ ச |
ஞானம் விஞானம் ஆஸ்திக்யம்
ப்ரஹ்ம கர்ம ஸ்வபாவஜம் || (667)

வீரியல்பி லுதிக்குஞ் செயல்களாவன :-சூரத்தனம், வீரக் கனல், திண்மை, திறமை, போரில் புறங்காட்டாமை, ஈகை, ஆட்சித் தலைமை இவையே.

ஶௌர்யம் தேஜோ த்ருதிர் தாக்ஷ்யம்
யுத்தே சாபி அபலாயனம் |
தானம் ஈஶ்வரபாவஶ் ச
க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் || (668)

பயிர்த் தொழில் பசு வளர்த்தல், வியாபாரம் இவை வணிக ரியல்பிற் போந்த வினைகள்.

க்ருஷி † கௌரக்ஷ்ய வாணிஜ்யம்
வைஶ்யம் கர்ம ஸ்வபாவஜம் |
பரிசர்யாத்மகம் கர்ம
ஶூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் || (669)

தனக் கியல்பான வினையில் மகிழ்வுடன் ஈடுபட்டவுடன் ஆத்ம சித்தி பெறுகிறான். தன் வினையில் ஈடுபட்டவன் எப்படி ஆத்ம சித்தி பெறுகிறான் என்பதைக் கேளாய்.

---

† கோரக்ஷ்ய என்றும் பாடமுண்டு.

ஸ்வே ஸ்வே கர்மணி அபிரத:
ஸம்ஸித்திம் லபதே நர: |
ஸ்வகர்ம நிரத: ஸித்திம்
யதா விந்ததி தத் ஸ்ருணு || (670)

உயிர்கள் எதனின்று உண்டாயினவோ, இவ்வுலகமெல்லாம் எதனால் நிறைந்ததோ, அந்தப் பரமாத்மனை, தனக்கியல்பான செயலால் வழிபட்டே மனிதன் பரமசித்தி பெறுகிறான்,

யத: ப்ரவ்ருத்திர் பூதானும்
யேன ஸர்வம் இதம் ததம் |
ஸ்வகர்மணு தம் அப்யர்ச்ய
ஸித்திம் விந்ததி மானவ: || (671)

*அவனவ னியல்பிற் கமைந்த நற்பணி வாழ்வைப் பரமாத்மாவிற்கே வேள்வியாக்கி, அவனுணர்விற் செய்தோன் அவனைப் பெறுகிறான்.*

நன்றாகச் செய்யும் பரதர்மத்தினும், சுதர்மமே மேலாம்; தனக்கியல்பாக அமைந்த கருமத்தைச் செய்வது தீங்காகாது.

ஸ்ரேயான் ஸ்வதர்மோ விகுண:
பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத் |
ஸ்பாவநியதம் கர்ம
குர்வன் நாப்னோதி கில்பிஷம் || (672)

குந்தி மகனே, தோஷமா யிருந்தாலும், உனக்கியல்பான வினையைக் கைவிடேல்; நெருப்பைப் புகை சூழ்ந்திருப்பது போல, (முக்குணத்தின்பாற்பட்ட)எல்லா வினைமுயற்சிகளும் தோஷம்சூழ்ந்ததே.

ஸஹஜம் கர்ம கௌந்தேய
ஸதோஷம் அபி ந த்யஜேத் |
ஸர்வாரம்பா ஹி தோஷேண
தூமேன அக்நி: இவ ஆவ்ருதா: || (673)

இனி இதன் உட்கருத்தறிக: மனிதர் தனித்தனியாக, நான்கு சாதிக் கோட்டைகளில் அடைக்கப்படவில்லை. கீதை அனைவர்க்கும் பொது; மனித ஜாதியின் தெய்வ ஸமரஸமே அதன் உட்கருத்து. மனித ஜாதியின் தெய்வ முன்னேற்றத்திற் கேற்ப, மனித வாழ்வை சுத்த நிலைக்கு முன்னேற்றுவதற்கேற்ப, இயல்பாகவே உள்ளத்தினின்றும் அரும்பும் செயலே அவரவர்க்குரிய அறவினையாகும். புறத் தூண்டுதலாலும், வற்புறுத்தலாலும் செய்யுஞ் செயல்கள் இயல்பிற்கு மாறானவை. தன்னுள்ளிருந்து, தனது மனச்சாட்சிக்கு இன்பமான செயலை மனிதன் புருஷோத்தம வேள்வியாகச் செய்தல்வேண்டும்; அது எவ்வினையாயினும், அதன்பின்னுள்ள யோகப் பயன் ஒன்றே. தற்காலத்தில் தட்டழிந்துழலும் போலிச் சாதி வேற்றுமைகளுக்கும் இந்த ஆழ்ந்த வுண்மைகளுக்கும் வெகுதூரம். எத்தொழிலாற்றினும் சித்தம் பரமாத்மாவினிடமிருந்தால் அத்தொழில் மூலமாகவே ஈடேறலாம். சமூக வாழ்விற்கு இன்றியமையாத, கடவுளறிவு, கல்வி, கலைவளம், ஆட்சி, காப்பு, தொழில், வாணிபம், பயிர், பொருள்செயல், பலவகையான ஊழியங்களெல்லாம் ஒன்றிற்கொன்று முரணின்றி, போட்டியின்றி, நான்கு அணிகளாக அவரவ ரியல்புச் சுயேச்சைக் கேற்பவே அமைந்தன. அனைத்தும் ஒருடலான ஸமுதாயத்தையே வளர்க்கின்றன. பலாவின் கனிபோல இவை அணிபெற்றன. வேர்முதல் முடிமட்டும் பழுக்கும் பலா, ஒரே தேன் சுவையுள்ளது. ஜன ஸமுதாயம் ஆண்டவன் உடல்;

அனைவரும் வெவ்வேறு தொழிலுள்ள உறுப்புகளேனும், ஒவ்வோருறுப்பும் தனக்கியன்ற தொழிலைச் சரிவரச் செய்தால், அதுவே பொதுநலத்தை வளர்க்கும். கடவுட் பெரியோர், வீரர், வணிகர், பணிஞர், எத் தேயத்தில் இல்லை? பாரத ஸமுதாயத் தொழிலாளர், எல்லாம் தெய்வம், எதிலுங் கடவுள் என்னுமுணர்வை அடிப்படையாகக் கொண்டனர். தலையாயினும், தோளேனும் தொடையேனும், திருவடியேனும் எல்லாம் ஒரு உலகநாதனின் உறுப்புகளே! பிறப்பிற்கு வகுப்பில்லை; வகுப்பிற்குப் பிறப்பில்லை. ஜமதக்னி மகன் பாசுராமனு யிருக்கிறான்; சுத்தோனன் மகன் அறவாழி அந்தணனு யிருக்கிறான்; நந்தனும் திருப்பாணாழ்வாரும், கனகனும், ஹரிதாஸனும் எப் பிறப்பினரேனும் மக்கள் வணக்கத்திற்குரியவர். இயல்பு, உணர்ச்சி, பயிற்சி, செய்கை இவற்றாலேயே வாழ்வு அமைகிறது; நான்கும் நான்கு வாழ்வுப் படிகள். "ஜாதி" என்பதையே மறந்துவிடுக! அப்பதம் கீதையிலில்லை. இயல்பு, அறிவு, பயிற்சிக் குரிய வினையை ஒவ்வொருவரும் மனித மரபின் முன்னேற்றத்திற்குச் செய்ய வுரிமையுண்டு. தேனீ, எறும்பு, இவற்றின் அணிபெற்ற சமுதாய வாழ்வு மனிதனுக்கு இவ் வகையில் உயர்ந்த உதாரணம். புற வாழ்வையும் அக வாழ்வையும் இணைத்து, அனைத்தையும் புருஷோத்தமனுக்கு வேள்வியாக்குவதே அவரவர் கடனு மாகும்; அறிவு, வீரம், தொழில், தொண்டு இவை யனைத்தும் கடவுள் வழிபாடாகவே செய்யலாம். எச்சிலை நிவேதித்த கண்ணப்பனுக்கும் முத்தி! பாட்டும், உழவாரமுங் கொண்ட அப்பருக்கும் முத்தி! எல்லாம் அன்பையும் வினை வேள்வியின் தூய்மையையும் பொறுத்தது. அன்பிருந்தாற் போதும்; பிறப்பில் எவனுயினும், கொடும்பாவிகூட மேன்மேலும் சுத்தனுகிக் கடவுளைப் பெறலாம் என்று கீதையின் உள்ளம் கூவு

கின்றது! அகர்தைச் சக்கரத்தாற் சுழலும் இந்த ஆசை யர்திரமாகிய மனமுயிருடல் வாழ்வு, பரமாத்ம வுணர்வால் தான் ஈடேறும். ஆன்மக் காட்சி பெற்று, அதன் விரிவாகவே வாழ்வை யணையும்போதே ஒரு புருஷோத்தம சக்தி உலக லீலையை நடத்தும் உண்மை விளங்தும்; அப்போதே ஞானன்மா, வீரான்மா, வணிகான்மா பணியான்மா எல்லாம் ஒரு சர்வான்மாவாகத் தோன்றும். எல்லாத் தொழில்களும் மனிதான்மா கடவுளுன்னதிக்குச் செல்லும் படிகளாகும். தமோ குணத்தில், தாலவுழைப்பில் தொடங்கி, ரஜோ குணத்தில் பொருளும் வினையும் செய்து, ரஜோகுண வுன்னதியில் வீரசூரனாக விளங்கி ஆட்சியும் அரசும் பூண்டு, முடிவில் ஸத்வ குணத்தால் அறிவும், தெளிவும், அந்தண்மையு மெய்துகிறது மனிதான்மா. ஒவ்வொரு ஜீவனிடமும் தனித்தனியே இந்நான்கு தன்மைகளும் அமைந்தேயுள்ளன. ஆனால் எதாயினும் ஒன்று முதன்மைபெற்றுள்ளது; அதையே வழிபாடாகச் செய்யவேண்டுமென்பது கீதையின் உட்கருத்து. கீதையின் முழு வுபதேசத்தையும் ஸமன்வயப்படுத்திப் பார்த்தால்தான் அது எத்தகைய ஜீவன்முக்திக்கு மனிதனை நடத்துகிறதென்று தெரியும்.

## * எம் உத்தம ரஹஸ்யம்.

கீதையின் உயிரான அருள்வாக்குகள் இனிவரும் கடைசி உபதேச மணிகளாகும். இதுகாறும் ஸாத்வீக நெறியையும், குணப் படிகளையும் உபதேசித்து, இப்போது அவற்றிற்கெல்லாம் உயர்ந்த ஜீவன் முக்தியில் கீதா யோகம் பறந்துலவுகிறது.

---

* XVIII 49—78.

## பரமஹம்ஸ நிலை.

*எதிலும் அகந்தைப் பற்றற்று, விழைவற்று, தன்னை வென்றவன் உள் துறவால், உயர்ந்த வினை யற்ற சாந்த சித்தி பெறுகிறான்.*

அஸக்த புத்தி: ஸர்வத்ர
ஜிதாத்மா விகதஸ்ருஹ: |
நைஷ்கர்ம்ய ஸித்திம் பரமாம்
ஸந்யாஸேன அதிகச்சதி || (674)

*கௌந்தேயா, அத்தகைய சித்தியடைந்தவன், எப்படி, பிரம்மத்தையும், பரமஞான நிஷ்டையை யும் அடைகிறான் என்பதை என்னால் சுருக்கமாக அறிந்துகொள்.*

ஸித்திம் ப்ராப்த: யதா ப்ரஹ்ம
ததா ஆப்னோதி நிபோதமே |
ஸமாஸேன ஏவ கௌந்தேய
நிஷ்டா ஞானஸ்ய யா பரா || (675)

*மாசிலாத மதியுடையோனாய், (சுத்த புத்தி யுடையோன்) (ஸாத்வீக தாரணையால்) உறுதியால் மனம் வென்று நிறுத்தி, (புறப்பொருள்களை நோக் காது) சத்தமாதி விஷயம் விடுத்து, பகை விருப்பின் விகற்பமொழிந்து,*

புத்த்யா விஸுத்தயா யுக்தோ
த்ருத்யா ஆத்மானம் நியம்ய ச |
ஸப்தாதீன் விஷயான் த்யக்த்வா
ராகத்வேஷௌ வ்யுதஸ்ய ச (676)

தனிமை நாடி, மிதவுணவுண்டு, உடல் மொழி, மனம் மூன்றையும் வென்று, தியான யோகத்தில் ஈடுபட்டு என்றும் திடவைராக்கியம் பெற்றவனாகி,

விவிக்தஸேவீ லக்வாசீ
யதவாக் காய மானஸ: |
த்யானயோக பரோ நித்யம்
வைராக்யம் ஸமுபாச்ரித: || (677)

அகந்தை, ராஜஸ வன்மை (பலம்) செருக்கு, காமம், கோபம், பரிக்ரகம் (பிறர் பொருளை யேற்றல்) நீத்து, மமதையின்றி அமைதி பெற்றுள்ளோன் பிரம்மமாகத் தக்கவனாவான்.

அஹங்காரம் பலம் தர்பம்
காமம் க்ரோதம் பரிக்ரஹம் |
விமுச்ய நிர்மம: ஶாந்தோ
ப்ரஹ்ம பூயாய கல்பதே || (678)

பிரமத்தோடு கலந்தின்பபாமேனென், (எதனுலும்) கலங்கிடான்; எதிலும் விருப்பற்றுன்; உயிர்கள் யாவையும் ஒன்றெனக் காண்பான்; அவன் என் உத்தம பக்தி (பரபக்தி) பெறுவான்.

ப்ரஹ்மபூத: ப்ரஸன்னாத்மா
நஶோசதி ந காங்க்ஷதி |
ஸம: ஸர்வேஷு பூதேஷு
மத்பக்திம் லபதே பராம் || (679)

மனிதனின் ஆசையகந்தைத் திரை நீங்கினால், புத்தி சுத்தமாகும்; சுத்த புத்திக்கு ப்ரம்மம் துலங்கும். பிரம்ம த்யானி பிரம்மத்துடன் இரண்டறக் கலந்து அதுவேயாகிறான். பின்பு அவன் தன்னொடு தானேயிருப்பதால், உள்

தனிமை, உள்ளமைதி, உள்ளத் திண்மை யெய்துகிருன். சந்தைக் கூட்டத்திலும் அவன் தனிமை காண்பான்; எதைப்பற்றியும் அவனுக்குச் சங்கற்பம் இராது; எளிதாக் வந்ததைப் பசியளவிற்கு மிதமாக உண்பான். நான் எனது என்று எதையும் பற்ருன்; பிறரிடம் எதையும் எதிர் பாரான்; ராஜஸ வலிமையால் எவருக்குந் தீங்கிழைக்க மாட்டான், தன்னை வருத்தினும் பொறுமை யிழக்கமாட் டான். தான் பிரமத்துடன் கலந்து, அதுவே யனைத்து மெனக் காணும்போது, அளவற்ற அன்பே அவனிடந் தளிர்க்கும். அதுவே உயர்ந்த கடவுளன்பு. எல்லாம் ஒரே அகண்டாகார ஸ்வரூபமாய் அவனுக்கு விளங்கும். பரப்ரம்மத்துடன் ஒன்றிய பிரம்ம ஞானி தனது சித்தம், செயல், இருப்பு, நடப்பு, பேச்சு, காட்சி அனைத்திலும் பிரம்மானுபவியாகவே யிருக்கிருன். பலவாகும் தோற்றங் களில் ஒன்றையே காண்கிருன். இதுவே சீரிய அன்பு. பரம ஞான சித்தியால் பரம பக்தனுன ஜீவன் முக்தன் கடவுட் கலப்புடன் அருட்பணி புரிவான். எப்படி? பக வான் அருளுகிருர்:

இந்தப் பரம பக்தியினுலேயே நான் யார்? எத்தகையோன்? என்பதை உள்ளபடி நன்கறி கிருன்; அந்தப் பக்தியால் என்னை உண்மையா யறிந்த பிறகு "தத்" என்று மறைகள் முழங்கும் பிரம்மத்தில் (புருஷோத்தமனுன என்னில்) இரண் டறக் கலக்கிருன்.

பக்த்யா மாம் அபிஜாநாதி
யாவான் யஸ்சாஸ்மி தத்வத: |
ததோ மாம் தத்வதோ ஞாத்வா
விஸதே தத் அனந்தரம் || (680)

(பின்பும் அவன் புறச்செயலைத் துறக்கவேண்டியதில்லை.) என்னில் ஈடுபட்ட யோகியானவன், இடையருது, எப்போதும், எல்லாத் தொழில்களையுஞ்செய்துகொண்டிருப்பினும், என் அருளால், (என்னுடன் கலந்திருக்கும்) அழிவற்ற அமுத நிலையையே எய்துகிருன்.

ஸர்வ கர்மாணி அபி ஸதா
குர்வாணோ மத்வ்யபாஸ்ரய: |
மத்ப்ரஸாதாத் அவாப்னோதி
ஸாஸ்வதம் பதம் அவ்யயம் || (681)

(ஆண்டவன் ஆணை; செய்வது சக்தி என்ற) அறிவினல், வினைகளனைத்தையும் எனக்கெனத் துறந்து (எனக்கு வேள்வியாகவே அனைத்தையும் அர்ப்பணித்து) என்னிலீடுபட்டு, புத்தி யோகத்தை மேற்கொண்டு, சித்தத்தை என்னில் வைத்திரு.

சேதஸா ஸர்வகர்மாணி
மயி ஸந்யஸ்ய மத்பர: |
புத்தியோகம் உபாஸ்ரித்ய
மச்சித்த: ஸததம் பவ || (682)

*இனி கீதையின் உத்தம ரகசியக் கதிர் உதிக்கிறது!*

## என்னைச் சரண்புகு.

என்னிலே சித்தம் நிலைத்தவன் என்னருளாலே எல்லா இடர்களையுந் தாண்டுவான்; அகந்தையால் இதனைக் கேளாயாகிற் கெடுவாய்!

மச்சித்த : ஸர்வதுர்காணி
மத் ப்ரஸாதாத் தரிஷ்யஸி |
அதசேத் த்வம் அஹங்காராத்
ந ஶ்ரோஷ்யஸி வினங்க்ஷ்யஸி || (683)

அகந்தையுற்று, "போர் புரியேன், என்று நீ கருதினால் அத்தகைய உறுதி பொய்க்கும்! ஏனெனில், உனது வீரியவியல்பே உன்னைப் போரில் வலிந்து தூண்டிப் பிணைக்கும்.

யத் அஹங்காரம் ஆஶ்ரித்ய
ந யோத்ஸ்ய இதி மன்யஸே |
மித்யா ஏஷ வ்யவஸாயஸ்தே
ப்ரக்ருதி : த்வாம் நியோக்ஷ்யதி || (684)

குந்தியின் செல்வ! உன்னியல்பினுதித்த வினையால் நீ கட்டுண்டவன். மதிமயக்கத்தால் அதைச் செய்ய விரும்பாவிடின், உன்னையறியாமற் செய்தே தீருவாய்.

ஸ்வபாவஜேன கௌந்தேய
நிபத்த : ஸ்வேன கர்மணா |
கர்தும் நேச்சஸி யன்மோஹாத்
கரிஷ்யஸி அவஶோऽபி தத் || (685)

அர்ஜுனா! எல்லா உயிர்களின் உள்ளத்திலும் இறைவன் கோயில்கொண்டுள்ளான்! தனது யோக மாயையால் எல்லா வுயிர்களையும், (ப்ரகிருதி) யந்திரத்திலேற்றிச் சக்கரஞ் சுழற்றுகிறான்! (நீ அதைத் தடுக்க முடியாது).

ஈஶ்வர: ஸர்வ பூதானும்
ஹ்ருத்தேஶே அர்ஜுன திஷ்டதி |
ப்ராமயன் ஸர்வ பூதானி
யந்த்ரா ரூடானி மாயயா || (686)

*பாரதா! எல்லா வகையிலும் அவனையே சரண் புகு! அவனருளால் பரம நித்திய சாந்த நிலையெய்துவாய்!*

தம் ஏவ ஶரணம் கச்ச
ஸர்வ பாவேன பாரத |
தத் ப்ரஸாதாத் பராம் ஶாந்திம்
ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம் || (687)

*உள்ளத்துள்ள இறைவனை நம்பு; அவனுடைய யோக மாயையின் ஆடலென்று அனைத்தையும் காண்; அவனது செயல் வடிவான பிரகிருதியே செய்கிறதென்றறி. நீ நிமித்த காரணமே; இச் செய்கையின் பலாபலனும், வினைத்தலைமையும் உன்னைச் சேர்ந்ததென்று அகங்கரித்து உன்னிச்சையைப் பின்பற்றாதே; எல்லாம் வல்ல இறைவனைச் சரண்புகு; அவன் உன்மூலம் தன் இச்சையை நிறைவேற்றட்டும்.*

*“இரகசியத்திலும் அதி ரகசியமான இந்த ஞானம் என்னால் உனக்குச் சொல்லப்பட்டது; இதனைத் தீர ஆலோசித்து, எப்படி விருப்பமோ அப்படிச் செய்.*

இதி தே ஞானம் ஆக்யாதம்
குஹ்யாத் குஹ்யதரம் மயா |
விம்ருஶ்ய ஏதத் அஶேஷேண
யதேச்சஸி ததா குரு || (688)

மீண்டுமொருமுறை அனைத்தினும் ஆழ்ந்த ரகசியமான எனது மஹா வாக்கியத்தைக் கேள். நீ எனக்கு உறுதியான அன்பன்; ஆதலால் உனக்கு இனியதைச் சொல்லுகிறேன் :-

ஸர்வகுஹ்யதமம் பூய :
ஶ்ருணு மே பரமம் வச : |
இஷ்டோऽஸி மே த்ருடமிதி
ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் || (689)

"என் மனத்தனாயிரு! எனது பக்தனாயிரு! எனக்கு வேள்வி செய்! என்னையே வணங்கு! என்னையே யடைவாய்! இது உண்மை. உனக்கு உறுதி கூறுகிறேன், எனக்குப் பிரியமானவனே!

மன்மனா பவ மத்பக்தோ
மத்யாஜீ மாம் நமஸ்குரு |
மாம் ஏவ ஏஷ்யஸி ஸத்யம் தே
ப்ரதிஜானே ப்ரியோऽஸி மே || (690)

எல்லாத் தருமங்களையும் துறந்து என்னையே சரண்புகு! உன்னை எல்லாப் பாவங்களினின்றும் நான் விடுவிப்பேன்; வருந்தாதே".

ஸர்வதர்மான் பரித்யஜ்ய
மாம் ஏகம் ஶரணம் வ்ரஜ |
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மா ஶுச : || (691)

இதுவே கீதையின் வீர முழக்கம், மனித ஜாதிக்கு அபய வசனம். ஸாத்வீக தர்மம் உயர்ந்தது; ஆயினும் அதுவும் குணக் கட்டுப்பாடுள்ளது. குறைந்தப் பொருளைக்

குறுதிதனை பெற முடியும். முக்குண விகாரங்கள், தொந்தக் கட்டுகள், அனைத்திலும் உதித்த அறங்களையெல்லாம் விட்டுவிடலாம்; வாழ்வனைத்தையும் அவனுக்கே வேள்வியாக்கி, நம்மை வேரோடு அவனடியில் அடைக்கலமாக்கிவிட்டால், அவன் தன் இச்சைப்படி நம்மை நடத்தி ஈடேற்றுவான். உடல் உன்னதல்ல; அது இயற்கையின் செய்கை; உயிர் உன்னதல்ல; அது ஆண்டவன் உடல். அவனே உயிர், உலகாக விரிந்துளான்; வாழ்வு உன்னதல்ல; அது அவனால் அவனது உலக லீலைக்காக நியமிக்கப்பட்டது; அது அவன் உரிமை. முக்குண மாயையின் வசப்படாதே! அகந்தைத் தூண்டுதல்களுக்கு அடிமைப்படாதே! ஆண்டவன் உள்ளத்தில் இருப்பதை நம்பு! உன் வாழ்வின் தேரை அவன் நடத்துகிறான்! உன்னெதிரே யிருக்கும் பகை வன்மைகளை அவன் தீர்த்து விட்டான்! நீ ஒரு நிமித்தமே! அவன் பணியைப் புறத்தே செய்யும் கருவியே நீ! அவனைச் சரணடை! அவன் உன் இயற்கையினின்று ஏவும் பணிக்குத் துணி! புண்ணிய பாவமெல்லாம் அவனிடம் விட்டுவிடு; அவன் சர்வ வல்லவன்! சர்வ சுத்தன்! நீ பாவம் என்று நினைக்கும் தீமைகளை அவன் போக்குவான்! உன்னை அவன் தீமையனைத்தினின்றும் நீக்குவான்! உன் சொந்த மனக் கட்டுமானங்களிற் சிக்கி வருந்தாதே! பரமாத்மாவை நம்பியடை; அந்தப் பரமாத்மா வடிவாகி உன்னைப் பணிக்கிறேன்! என்னை யெண்ணு! செயல்களை எனக்கு நிவேதி! செயலிலும் பலனிலும் பற்றை விடு; என்னையே பற்று! மற்றதெல்லாம் என்னிச்சைக்கு விட்டுவிடு! என் வழி அரை குறையான உலக வழியன்று, அது அனைத்தும் வல்லதாய், என்னையே தரும் அத்யாத்ம வழி. நானே வினை வேள்வித் தலைவன்! இயற்கையையும் ஆன்மாவையும் இணைத்து, உலக லீலையை நடத்தும் புருஷோத்தமன்!

ஆன்மாவாக யான் உன்னுள் உள்ளேன்! ஆன்மா நித்ய முக்தன்! ஆத்மா எதிலும், மனிதன் செய்த எந்த அறத்திலும் சட்டுப்பட்டதன்று. அது சுத்த சுதந்திர சமத்துவ நித்தியப் பொருள்; அது எதையும் செய்வதில்லை. என் பணியை இயற்கையே உன்மூலம் செய்கிறது; அதில் தீமைகள் வருமென அஞ்சுகிறாய்; எல்லாத் தீமைகளினின்றும் நான் உன்னைக் காப்பேன்! செய்வதை என் வேள்வியாகச் செய்! என்னை முற்றும் நம்பிச் சரண்புகு! அறிவாலறிந்து, பணியால் அணிந்து, அன்பாற் கலந்து என்னுடன் ஒன்றுபட்டு இன்புறுவாய்!

இதுவே கீதையின் ரகசியம்! கீதா யோகத்தைப் பரிபூரண சரணாகதி யோகமென்றே கூறலாம். பூரண ஆத்ம சமர்ப்பணத்தால் மனிதான்மா கடவுட் கலப்புற்ற அகண்டான்மாவாக விரிகிறது; குறுகிய அகந்தைக் கட்டுடைத்து, வாழ்வை அது விசாலப்படுத்தி தெய்வத் திறனைத் தந்து, தெய்வ இச்சையை நம்மூலம் நிறைவேற்றுகிறது; ஒரு சிற்றாறு கடலையடைந்து, அகண்டக் கடலாவது போலவே, ஜீவாத்மா பரமாத்மாவை முழுதும் சரணடைந்து அவன்மய மாகிறது.

இத்தகைய ஞானபக்தி கர்மயோகரகசியத்தை, ஜீவன் முக்தி வாழ்வை, சரணாகதியின் இன்பத்தைப் பேரன்பர்களும் யோகிகளும் அறிவர்; இத்தெய்வீகக் கீதையைத் தூய மனத்துடன் முறையாகக் கற்றுக் கேட்டு சிந்தித்து நடப்போன் தெய்வத் தன்மை பெறுவதுறுதி. ஆனால் பகவான் இதை எவர்மீதும் வற்புறுத்தவில்லை. பரம சிரத்தாவான்களுக்கே பகவத் கீதை பயனாகும்.

உனக்காகச் சொல்லப்பட்ட (கீதையான) இதைத் தவமிலாதவன், கடவுளன்பற்றவன், கேட்க

ஆவலற்றவன், என்னை நிந்திப்பவன், இவர்களுக்கு என்றும் (வறுவில்) சொல்லற்க.

இதம் தே நாதபஸ்காய
நாபக்தாய கதாசன |
ந சாஸுஷ்ருஷவே வாச்யம்
ந ச மாம் யோऽப்யஸூயதி || (692)

இது பரம அத்யாத்ம ரகசியம்; என்னன்பு மிக்கவன், என்னன்பரிடையே இதை விளக்கி ஐய மின்றி என்னையே யடைகிறான்.

ய இமம் பரமம் குஹ்யம்
மத்பக்தேஷு அபிதாஸ்யதி |
பக்திம் மயி பராம் க்ருத்வா
மாம் ஏவ ஏஷ்யதி அஸம்ஸய: || (693)

எனக்கினிய காரியம் செய்பவன் பனிதருள் அவனினும் பிறிதில்லை; உலகில் அவனினும் எனக்கு மிகவும் இனியன் வேறெவனுமில்லை.

ந ச தஸ்மாத் மனுஷ்யேஷு
கஸ்சித் மே ப்ரியக்ருத்தம: |
பவிதா ந ச மே தஸ்மாத்
அன்ய: ப்ரியதரோ புவி || (694)

நம் இருவருக்கும் நடந்த இந்தச் சம்பாஷணையைத் தினம் பாராயணஞ் செய்வோன், என்னை ஞான வேள்வியால் வழிபடுகிறான் என்று நான் மதிக்கிறேன்.

அத்யேஷ்யதே ச ய இமம்
தர்ம்யம் ஸம்வாதம் ஆவயோ: |
ஜ்ஞானயஜ்ஞேன தேனுஹம்
இஷ்ட: ஸ்யாம் இதிமே மதி: || (695)

*சிரத்தையுடனே, அசூயை யற்று, இதனைக் கேட்பவன்கூட விடுதலையெய்தி, நற்செயலாளரின் நல்லுலகங்களை யடைவான்.*

ஸ்ரத்தாவான் அனஸூயஸ்ச
ஸ்ருணுயாத் அபி யோ நர: |
ஸோऽபி முக்த: ஸுபான் லோகான்
ப்ராப்னுயாத் புண்யகர்மணும் || (696)

*பார்த்தா! அதி ரகசியமான இந்த உபதேசம் ஒரு மனப்பாட்டுடன் உன்னல் கேட்கப்பட்ட தன்றோ? தனஞ்ஜயா! உனது அறியாமை யிருள் சிதைந்ததா? (உன் சித்தந் தெளிந்ததா?).*

கச்சித் ஏதத் ஸ்ருதம் பார்த
த்வயா ஏகாக்ரேண சேதஸா |
கச்சித் அஜ்ஞானஸம்மோஹ:
ப்ரநஷ்டஸ்தே தனஞ்ஜய || (697)

அர்ஜுனன் சொல்லுகிருன் :-

*உன்னருளாலே என் மயக்கம் அழிந்தது. தெளிவடைந்தேன்! ஐயம் நீங்கினேன்! இதோ எழுந்து நின்றுவிட்டேன்! அச்சுதா உன் ஆணை புரிவேன்!"*

நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்தா
த்வத்ப்ரஸாதாத் மயா அச்யுத |
ஸ்திதோऽஸ்மி கதஸந்தேஹ:
கரிஷ்யே வசனம் தவ || (698)

இந்தத் தெய்வீக சம்பாஷணை முழுதையும் அருள் விழிகளால் சஞ்ஜயன் பார்த்து திருதிராட்டிர னுக்கு வியந்துரைக்கிறான் :-

"அரசே வாஸுதேவனுக்கும், மஹாத்மா பார்த்தனுக்கும் ஏற்பட்ட இத்தகைய சம்பாஷணையைக் கேட்டேன்! அற்புதம்! இன்பச் சிலிர்ப்பளிக்கிறது!

இத்யஹம் வாஸுதேவஸ்ய
பார்தஸ்ய ச மஹாத்மன : |
ஸம்வாதம் இமம் அஸ்ரௌஷம்
அத்புதம் ரோமஹர்ஷணம் || (699)

யோகேசுவரனான கண்ணன் இந்தப் பரம ரகசியத்தைத் தானே நேராகச் சொல்லுகையில், (எனக்கு ஞான விழியளித்த) வியாசன் அருளால் கேட்டேன்!

வ்யாஸப்ரஸாதாத் ஸ்ருதவான்
ஏதத் குஹ்யம் அஹம் பரம் |
யோகம் யோகேஸ்வராத் க்ருஷ்ணாத்
ஸாக்ஷாத் கதயத : ஸ்வயம் || (700)

அரசே! கேசவார்ஜுனர்க்கு நிகழ்ந்த இப் புண்ணிய, அற்புத ஸம்வாதத்தை எண்ணி எண்ணி இன்ப மோங்குகிறேன்!

ராஜன் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய
ஸம்வாதம் இமம் அத்புதம் |
கேஸவார்ஜுனயோ : புண்யம்
ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு : || (701)

அரசே! ஹரியின் அந்த வியப்பான விசுவ ரூபத்தை நினைக்க நினைக்கப் பெரும் வியப்புற்று மீண்டும் மீண்டும் களிபொங்குகிறேன்.

தச் ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ருத்ய
ரூபம் அத்யத்புதம் ஹரே: |
விஸ்மயோ மே மஹான் ராஜன்
ஹ்ருஷ்யாமி ச புன: புன: || (702)

யோகேசனான கண்ணன் எங்கோ, வில்லைத் தாங்கிய விஜயன் எங்கோ, திருவும், வெற்றியும், செல்வமும், வழுவா நீதியும் ஆங்கே, நிற்கும்; இது என் கொள்கை.

யத்ர யோகேஶ்வர: க்ருஷ்ணோ
யத்ர பார்தோ தனுர்தர: |
தத்ர ஸ்ரீர்விஜயோ பூதி:
த்ருவா நீதிர் மதிர் மம || (703)

கண்ணன் ஒவ்வொருவர் உள்ளத்தும் ஒளிர்க! விஜயனின் வீர அன்பு ஒவ்வொருவர் மனத்திலும் ஊறுக! கீதை ஒவ்வொருவர் வாழ்விலும் அமைக; அனைவரும் தெய்வ வாழ்விற்கு உயர்க! உலகமெல்லாம் சுத்த முக்த, ஸமத்வ ஸத்ய ஜோதி மயமாக வானளாவிய தெய்வாலய மாகுக!

கீதா யோகம்
பதினெட்டாம் அத்யாயம்
மோக்ஷ ஸந்யாஸ யோகம்
கீதா யோகம் முற்றிற்று.

சுத்தானந்தபாரதி.

## பிழை திருத்தம்.

சுலோகங்களில் இத் திருத்தங்களைச் செய்து கொண்டு படிக்கவும்; புள்ளிகளைக் கவனிக்கவும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 141 | 24 | இதம் | இதம் |
| 144 | 3 | ,, | ,, |
| ,, | 4 | மணிகண | மணிகண |
| | 17 | கந்த: | கந்த: |
| 146 | 13 | தைவீ | தைவீ |
| 147 | 6 | துஷ்க்ரி | துஷ்க்ரு |
| ,, | 9 | ஆஸுரிம் | ஆஸுரம் |
| 148 | 24 | ப்பத்யதே | ப்ரபத்யதே |
| 149 | 25 | விதிதாம் | விததாம் |
| 154 | 19 | நியதாத்மபி | நியதாத்மபி: |
| 158 | 20 | சேநஸர் | சேதஸர் |
| ,, | ,, | க்ரமிணு | கரமிணு |
| 160 | 4 | உபைதி | உபைதி |
| ,, | 10 | யதக்ஷரம் | யதக்ஷரம் |
| ,, | 11 | விதாரகா: | விதராகா: \| |
| 161 | 16 | நிருத்ய | நிருத்ய |
| 163 | 21 | ஸஹஸ்ராந்தம் | ஸஹஸ்ராந்தரம் |
| 164 | 7 | ஸம்ஞுதே | ஸம்ஞுகே |
| ,, | 28 | நவஸ்யஸ்து | நவஸ்யத்ஸு |
| 166 | 4 | கச்சந்தி | கச்சந்தி |
| 169 | 9 | குஹ்யம் | குஹ்யம் |
| ,, | 11 | தர்மம் | தர்ம்யம் |
| 170 | 8 | மஸ்தானி | மத்ஸ்தானி |
| ,, | 16 | மத்ஸ்தானி | மத்ஸ்தானி |
| ,, | 19 | ப்ருத் | ப்ருத் |
| | 26 | தத | ததா |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 171 | 3 | பூதாளி | பூதாளி |
| | 19 | உதாஸிவத் | உதாஸீநவத் |
| | 26 | ஹேதுனு | ஹேதுனு |
| 173 | 11 | தேய்விம் | தைவீம் |
| | 21 | நித்யயுக்தோ | நித்யயுக்தா |
| 176 | 2 | நிக்ருன்ஹாமி | நிக்ருஹ்ணமி |
| | 4 | ஸதஸச்சாஹம் | ஸத்ஸச்சாஹம் |
| 179 | 3 | ப்ரத்யுபஹ்ருதம் | பக்த்யுபஹ்ருதம் |
| 180 | 26 | பக்த | பக்த |
| 183 | 7 | ப்ரமுச்யதே | ப்ரமுச்யதே |
| 184 | 14 | மஹர்ஷய : | மஹர்ஷய : |
| | 16 | மத்பாவ | மத்பாவா |
| | 21 | யேஷாம் | ஏதாம் |
| 185 | 11 | கதந்தஸ்ச | கதயந்தஸ்ச |
| | 24 | தேஷாம் | தேஷாம் |
| | 27 | தீபேன | தீபேன |
| 188 | 4 | யோகின் | யோகின் |
| 189 | 3 | குந | குரு |
| 191 | 23 | யாதஸாம் | யாத்ஸாம் |
| | 24 | பித்ருணும் | பித்ருணும் |
| 192 | 12 | ஜாஹ்னவி | ஜாஹ்னவீ |
| | 17 | ஆதி | ஆதி |
| | 26 | த்வந்த : | | த்வந்த்வ : |
| 193 | 15 | ருதானும் | ருதானும் |
| 194 | 10 | குஹ்யானும் | குஹ்யானும் |
| | 15 | யச்சாபீ | ய்ச்சாபி |
| 195 | 1 | நான்தோ | நாந்தோ |
| 201 | 6 | திவிஸூர்ய | திவிஸூர்ய |
| 202 | 18 | தீப்தமந்தம் | தீப்திமந்தம் |
| 205 | 6 | த்ருஷ்ட்வைவ | த்ருஷ்ட்வைவ |
| | 18 | யோதமுக்யை :· | யோதமுக்யை : |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 206 | 17 | வதனோர்ஜ்வலப்த : | வதனோர்ஜ்வலத்பி : |
| 208 | 8 | ப்ரத்யநிகேஷு | ப்ரத்யநீகேஷு |
| | 13 | லபஸ்ப | லபஸ்வ |
| 209 | 20 | ப்ணம்ய | ப்ரணம்ய |
| 210 | 8 | விஸ்வஸ்ய | விஸ்வவஸ்ய |
| 211 | 21 | ஸய்யாஸன | ஸய்யாஸன |
| 214 | 15 | ரூபம் | ரூபம் |
| 219 | 14 | கதிர்து : | கதிர்து : |
| 234 | 16 | குண | குண |
| 242 | 19 | பாரத | பாரத |
| ,, | 26 | பீஜ | பீஜ |
| 247 | 7 | பவத | ப்வத |
| | 27 | குணபேயஸ்ச | குணேப்யஸ்ச |
| 253 | 4 | வேத்வித் | வேதவித் |
| 291 | 6 | பவதி | பவதி |
| 294 | 2 | குணபேதத : | குணபேதத : |
| | 18 | ப்ருதக் | ப்ருதக் |
| 307 | 6 | விகத்ஸ்ருஹ : | விகத்ஸ்ப்ருஹ : |
| 316 | 10 | குஹ்யம் | குஹ்யம் |
| 318 | 26 | ருஷ்யாமி | ஹ்ருஷ்யாமி |
| 319 | 7 | ஸ்ருஷ் | ஹ்ருஷ |
| 319 | 12 | யோரகேஸ்வர் | யோகேஸ்வர : |
| | 15 | த்ருவா | த்ருவா |

## வசனம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 146 | 21 | உபதேகிக்கிறார் | உபதேசிக்கிறார் |
| 147 | 17 | யயன | பயன் |
| 164 | 13 | மாண்டலத்தடன் | மாண்டத்துடன் |
| 187 | 20 | வாஸுதேவ | வாஸுதேவ |
| 193 | 9 | வேக | வேத |
| 210 | 3 | ஜகந்திவாஸா | ஜகந்திவாஸா |
| „ | 27 | பின்பறம் | பின்புறம் |
| 211 | 27 | மீக்காரூண்டோ | மிக்காரூண்டோ |
| 218 | 2 | பழிபடும் | வழிபடும் |
| 225 | 12 | பன்னிரண்டரம் | பன்னிரண்டாம் |
| 236 | 4 | பரமாத்வை | பரமாத்மாவை |
| 240 | 4 | ளன்று | என்று |
| 242 | 8 | மாஹபூதம் | மஹாபூதம் |
| 249 | 22 | தலைதயிடுத | தலையிடுத |
| 259 | 28 | வேகாங்க | வேதாந்த |
| 297 | 10 | செய்கலாதது | செய்யக்கூடாதது |
| 305 | 11 | சுத்தோனன் | சுத்தோதனன். |
| 316 | 24 | றேன் | கிறேன் |

பக்கங்கள் 11-ம் பாரம் 220 - 228 வரையிலுள்ள பக்க எண்கள் 12-வது பாரத்திலும் வந்துள்ளன - கவனிக்கவும்.